# GAUTAMA BUDDHA

OR

# The Light of Wisdom

*An historical novel in Tamil*

# கௌதம புத்தர்

அல்லது

## அஞ்ஞான இருளகற்ற வந்த மெய்ஞ்ஞான ஜோதி

(சரித்திர சம்பந்தமான ஒரு தமிழ் நாவல்)

துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டது.

MADRAS:

PRINTED AT THE S.P.C.K. PRESS, VEPERY.

1921

முன்றான் பெருமைக்க ணின்றான், முடிவெய்து காறு
நன்றே நினைந்தான், குணமே மொழிந்தான், தனக்கென்
றொன்றானு முள்ளான், பிறர்க்கே யுறுதிக்கு ழந்தான்
அன்றே இறைவன் ? அவன்றாள் சரணங்க ளன்றே.

—குண்டலகேசி.

# PREFACE



NOT less than twenty-four centuries have elapsed since the advent of Buddhism as a religion. Since then many empires have come and gone; new religions have sprung and grown; Buddhism itself has undergone many vicissitudes. In its pristine glory and purity it held sway in and out of the great land of its birth, India, for more than ten centuries. Its truth and simplicity appealed to the vast millions of religious India, which was groaning under the weight of an endless array of complicated rites and ceremonies instituted by a degenerated priest-hood. Kings and peasants alike ardently embraced the faith. As the state religion of a great empire its influence was enormous. Its missionary zeal crossed the mountain barrier of Himalayas and spread its doctrine of Love and Brotherhood throughout the civilized portions of Asia. To this day, in China and Japan, as in Burma and Ceylon, Buddhism is the prevailing faith. In India itself, though, owing to various causes of which we need not here inquire, that humane religion disappeared after the tenth century A.D., signs are not wanting to show that a renewed interest and sympathy are slowly spreading towards that Religion and its founder whose greatness Hinduism acknowledges silently by honouring him as one of the ten avatàrs of Vishnu, the preserving deity of the Hindu Trinity. A honour greater than this the Hindu cannot conceive of.

The founder of such a mighty religion, the Apostle of Love, the Light of Wisdom, Gautama Buddha—the subject of the following pages—was born in the Kaliyuga year 2478 (563 B.C.), as the heir-apparent of a ruling monarch, in the royal grove of Lumbini, in the neighbourhood of Kapilavastu now known as Padeira, in the

jungle tracts of Nepal. A pillar bearing the inscription "Here was the Enlightened One born" erected by Asoka in 293 B C. testifies to the accuracy of the spot.

Gautama's father Suddhodaná and his mother Máya belonged to the Sákya clan. On the seventh day of his birth Gautama's mother died. Under the kind care of his step-mother, Gautami, the prince spent his early years. The king spared no pains to make the course of his son's life smooth and pleasant. At the age of nineteen, Gautama married his cousin Yasodhará. For all outward appearances the prince was leading a life of ease, luxury and culture. But, endowed with a highly organized heart and intellect, Gautama could not long remain a passive spectator of the world's tragedy. In suffering man enters the world; in suffering he exists; in suffering he makes his exit. Why? Is it to be born again and again to tread the same weary path? Is there no means of escape from this terrible circle of pain and sorrow? Such were the thoughts that absorbed the deeper self of Gautama. He felt that he could not rest content till the problem that presented itself to him was solved. He realized also that an earnest search after his Ideal would necessitate a complete severance of all his worldly ties. So he was contemplating to renounce his kith and kin and adopt the life of a Bikshu.

About this time a son was born to him. To him who was waiting for the existing ties to be broken, a fresh tie was thus added The fact sorely troubled Gautama. Delay thereafter seemed dangerous. With one supreme effort of will the decision was taken. At midnight, on the very day on which the child of his blood was born, Gautama renounced all that was dear to him and retired to the forest as a hermit. He was twenty-nine at the time.

After this great renunciation, Gautama spent six years in fruitless quest of his goal. At the end of that period, one night when he was in deep meditation, seated under a fig tree, the consciousness of true insight possessed him

and as a flash of lightning the way of deliverance was revealed to his inward vision. From that moment he became a Buddha,—that is, one who has attained *Bodhi* or an ideal state of intellectual and ethical perfection. Having found the true path, his compassionate heart resolved to propagate the truth and free the struggling humanity from sorrow and suffering. How nobly and successfully he fulfilled his mission, History has recorded.

In the words of the author of *Paradise Lost*, 'Whatever in religion is holy and sublime, in virtue amiable or grave, whatsoever hath passion or admiration in all the changes of that which is called fortune from without, or the wily subtleties and reflexes of man's thought from within'—these are the domain of Tragedy. It will be evident from the meagre sketch given above, that the life of such a grand, historic personality as Gautama Buddha possesses a tragic pathos and sublimity of its own enough to attract and exact homage from the predominating art of the day. Such a homage is the story which is told in the following pages. In this volume the attempt has been to trace the development of the Great Master's life from his birth to the momentous period of his Renunciation. The activities of the Master after his renunciation have been simply hinted at, with a view to treat them at length in a supplementary volume. How far the attempt has been successful as far as the present volume is concerned, it is for the critic to judge.

The difficulties in treating a Historical personality as the hero of a novel are many. And they become almost insurmountable, when the hero is not only a Historical figure, but a holy being of transcendental powers, held in awe and reverence and worshipped as a God incarnate by nearly a fifth of the human race for about a thousand generations. Yet the very fact that it is a novel and not a biography, gives us a freedom of movement and scope for imagination denied to the biographer and the historian. Such freedom and flexibility as the art form of novel

affords have been gladly availed of—but not to such an extent as to tamper with the essential facts of history or tradition. Almost all the incidents narrated here have their foundations in facts furnished by history or what passes as such. Excepting a few minor characters all the other characters introduced in the work are historical. So it is hoped that the claims of Art and Historical fidelity alike have been satisfied without sacrificing either of them to the other. " It is the business of the historical novelist " says Professor William Henry Hudson, " to bring creative imagination to bear upon the dry facts of the annalist and the antiquarian and out of a mass of scattered material gleaned from a variety of sources to evolve a picture having the fulness and unity of a work of art ". Whether the work in hand conforms to the canon laid above it is not for the author to say.

---

" The modern novel converts abstract ideas into living models; it gives ideas, it strengthens faith, it preaches a higher morality than is seen in the actual world; it commands the emotions of pity, admiration, and terror; it creates and keeps alive the sense of sympathy; it is the universal teacher; it is the only book which the great mass of reading mankind ever do read; it is the only way in which people can learn what other men and women are like; it redeems their lives from dulness, puts thoughts, desires, knowledge, and even ambitions into their hearts; it teaches them to talk, and enriches their speech with epigrams, anecdotes, and illustrations. It is an unfailing source of delight to millions . . ." *Sir Walter Besant.*

இந்நூலில் வரும்

## கதா பாத்திரங்கள்



சுத்தோதனன் ... உத்தர கோசல தேசத்தரசன்.

கௌதமர் ... சுத்தோதனன் மகனார்; கதாநாயகர்

சுக்கிலோதனன்
அமிருதோதனன்
தௌதோதனன்
கனிதோதனன் } சுத்தோதனன் சகோதரர்கள்.

ஆனந்தன்
தேவதத்தன் } ... சுக்கிலோதனன் குமாரர்.

அனுருத்தன் ... அமிருதோதனன் மகன்

நந்தன் ... கௌதமர் சகோதரன்

ராகுலன் ... கௌதமர் புதல்வன்

மித்திரர் ... கௌதமர் ஆசிரியர்.

உதாயி ... கௌதமரது பாங்கன்

சுப்பிரபுத்தன் ... சுத்தோதனன் மைத்துனன்.

வாமனர் ... { சுத்தோதனன் சமஸ்தான கலைஞர்களுள் ஒருவர்

அஸிதர்
பார்க்கவர்
அராளராமர் } ... முனிவர்கள்

சந்தகன் ... கௌதமரது குதிரைப்பாகன்

தாமோதரன் ... ஒரு சமையற்காரன்.

மாயாதேவி ...
கௌதமி ... { சுத்தோதனன் மனைவியர்; கோலிய தேசத்தரசன் அஞ்சனன் என்பான் குமாரிகள்.

| | | |
|---|---|---|
| யசோதரை | ... | கௌதமர் மனைவி. |
| உரூபாநந்தை | ... | நந்தன் சகோதரி. |
| * பங்கஜம் | ... | சுத்தோதனன் அரண்மனைத் தாதியர். |
| * காமாக்ஷி | | |
| ஸுஜாதை | ... | பலன் என்னும் ஓர் இடையன் மகள் |

இக் குறியிட்ட பெயர்கள் தவிர மற்றவை சரித்திர சம்பந்த மானவை.

| | | |
|---|---|---|
| சித்தார்த்தர் | ... | இவை கௌதமர் துறவு பூண்பதற்கு முன் அவருக்கு வழங்கிவந்த வேறு பெயர்கள். |
| சர்வார்த்தசித்தி | ... | |
| கௌதமபுத்தர் | ... | இவை முதலிய பலபெயர்கள் கௌதமருக்கு ஞானோதயமான பின்பு உண்டாயின. |
| ததாகதர் | ... | |
| ஜினர் | ... | |

## உள்ளுறை



# கௌதம புத்தர்

அல்லது

## அஞ்ஞான இருளகற்ற வந்த மெய்ஞ்ஞான ஜோதி.

### அதிகாரம்—1

### சுத்தோதனன் மனக்குறை

உலகிலுள்ள மலைகள் அனைத்தினும் உயரிய சிகரத்தையுடைய இமாலயம் என்னும் உன்னதப் பனிமலை முடி கவிக்க, கங்கையும் யமுனையும் முகந்துடைக்க, கன்னியுங் குமரியும் அடி நனைக்க, [1] கடலரசியின் பாதுகாப்பில் கம்பீரமாய் வீற்றிருக்கும் இந்திய மாதாவின் திருமுக மண்டலம்போலச் சிறந்து விளங்குவது [2] **உத்தரகோசலதேசம்.** கங்கை என்னும் பேராற்றிற் கிளைத்த உரோகிணி நதி அத்தேசத்தூடே பாய்ந்து அதற்கு அழகும் வளமும் கொடுத்துச் செல்கிறது. அதன் கரையில்,

> 'மறந்து மழைமறா மகதநன் னாட்டுக்(கு)
> ஒருபெருந் திலகமென் றுரவோர் உரைக்கும்
> கரவரும் பெருமைக் கபிலையம் பதி'[3]

உள்ளது.[4] அந்நகரில் இற்றைக்குச் சற்றேறக்குறைய ஈராயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன்னே **சுத்தோதனன்** என்னும் அரசன் இருந்து அரசு செலுத்தி வந்தான்.

---

[1] கடலரசி - என்பது, இந்துமகா சமுத்திரத்தையும், ஆங்கில அரசாட்சியையும் சிலேடையாகக் குறிக்கும் [2] மகதநாடு என்றும் கூறுவதுண்டு. [3] மணிமேகலை உசு-ஆம் காதை 42-44.

[4] இந்நகர் கபிலை என்றும், கபிலபுரம் என்றும், கபில வாஸ்து என்றுங் கூறப்படுவதுண்டு.

ஒருநாள் பொழுது புலர்ந்து இரண்டு மூன்று நாழிகை யிருக்கும். சுத்தோதனன் தன் அரண்மனை மேல் மாடியில் உலாவிக்கொண் டிருந்தான். கார்காலத் துவக்கமானதால், ஆகாயம் அதிக வெப்பமாகவாவது அதிக குளிர்ச்சியாக வாவது இல்லாமல் நடுத்தரமா யிருந்தது. அரசன் சாளரத் தின் வழியாகக் கண்ணிற்பட்ட அரண்மனைத் தோட்டத் தைப் பார்க்க விரும்பி, நின்றான். தோட்டம் பணியாளர் உழைப்பாலும், பருவத்தின் இயல்பாலும், நீரும் நிழலும் நிறைந்து, பார்க்கப் பார்க்க இன்பம் பயக்கத்தக்கதாயிருந் தது. முல்லை முதலிய பருவமலர்கள், இதழ் விரித்துத் தேன் சொரிந்து, வண்டினங்களை 'வம்மின்' என்று வாய் விட்டு அழைப்பதுபோல, நறுமணத்தை நாற்றிசையும் பரப்பின. கொய்யா மா முதலிய கனிதரு மரங்களில், அணில்களும் கிளிகளும், சுவை மிகுந்த பழங்களாய்ப் பார்த்து, முறையே கடித்தும் கோதியும் தின்று, தம் இச்சைப்படி ஓடியும் பறந்தும் குதூஹலித்தன. வாழை கள் தாம் ஈன்ற குலைச் சுமையைத் தாங்கமாட்டாமல் தளர்ந்து தள்ளாடித் தலைசாய்த்து நின்றன. பச்சைக் கம் பளங்கள் பலவற்றைப் பற்பல விடங்களில் பரவ விரித்தாற் போல இடையிடையே பச்சென்று பரந்திருந்த புற்றரை யில், அரண்மனை மயில்கள் சில, தம் கோலக்கலாபம் விரித்து அழகாய் ஆடிக்கொண்டிருந்தன. கள்ளமற்ற புள்ளிமான் ஒன்று, புல்லைக் கறிப்பதும், சற்றுத் துள்ளி ஓடுவதும், மீட் டும் நின்று புல்லைக் கறிப்பதுமாய், செல்வச் சிறுகுழந்தை போல விசாரமற்று விளையாடியது.

இவைகளை யெல்லாம் கண்டு இன்பமுற்று மலர்ந்த அரசன் திருமுகம், திடீரென்று ஈராவிபட்ட கண்ணாடி மண்டலம் போலவும், இராகுவாற் பற்றப்பட்ட சந்திரன் போலவும், வெயிலால் வெதுப்பப்பட்ட தாமரை போல வும் ஒளி குறைந்து, பொலிவிழந்து, வாட்டமுற்றது. அவன் பார்வை அரண்மனைத் தோட்டத்தை விட்டு அகல வில்லையாயினும், சற்று முன் தோற்றிய இனிய காட்சி அச் சமயம் அவனுக்குத் தோற்றவில்லை. தோட்டத்தை நோக்கி நின்றும், அவன் கண்கள் வெட்ட வெறுவெளி யையே கண்டன. அவன் சிந்தை மரத்திற் கனிந்த கனி

களிலும் இல்லை; கொடியில் மலர்ந்த மலர்களிலும் இல்லை; ஓடும் அணில்களிடத்தும் இல்லை: பறக்கும் கிளிகளிடத்தும் இல்லை; துள்ளும மானின் மாட்டும் இல்லை; உலவும் மயில்கள் மாட்டும் இல்லை: இவைகளை யெல்லாம் விட்டு வேறெதிலோ ஆழ்ந்திருந்தது

இந் நிலையில் சுத்தோதனன் சுமார் ஐந்து நிமிஷ நேரம் நின்றிருக்கலாம். அப்பால் மாடிப் படிக்கட்டேறி வந்த ஒரு பெண்மகளின் காற்சிலம்போசையால் அவன் சிந்தனை கலைந்தது ஆயினும், அவன் நின்றவிடத்தை விட்டுப் பெயராமலே, வருவது யாரென்று திரும்பிப் பார்த்தான்: தன் காதற்குரிய பட்டத்தரசி மாயாதேவி என்பாள் தன்னருகே வந்து செவ்விய மெல்லிதழ்களிற் புன்னகை தவழ முகமலர்ந்து நிற்பதைக் கண்டான். உடனே தானும் புன்னகை புரிந்தான் ஆனால், அவன் முகம், புன்னகைக்கேற்ப அ ல ர் ந் து விளங்கிற்றில்லை. மாயாதேவி அதைக் கவனித்தாள்; அரசன் மனம் ஏதோ கவலைக்குள்ளாயிருக்கிற தென்பதை எளிதில் உணர்ந்தாள் உடனே, அக் கவலை யாதென்று அரசனைக் கேட்க எண்ணிய அவள், வேறெதையோ நினைவுகூர்ந்து, மாடிப்படிக் கட்டை எட்டிப் பார்த்தாள். ஊழியக்காரி ஒருத்தி, அப் பொழுதுதான், வெண்பட்டால் மூடப்பட்ட தங்கப் பல காரத்தட்டு ஒன்றை எடுத்துக்கொண்டு படிக்கட்டேறி வந்தாள். மற்றொரு வேலைக்காரி, நீர் நிறைந்த வெள்ளிச் செம்பொன்றைக் கையில் ஏந்தி அவளைத் தொடர்ந்து வந்தாள்.

பட்டத்தரசி, அவர்கள் இருவரும் மாடிமேல் வரும் வரையில் அவர்களையே பார்த்துக்கொண்டிருந்து, அவர் கள் மேல் வந்த பிறகு, முன் வந்தவளை நோக்கி, "பங்கஜம், தட்டை ஊஞ்சலின்மேல் வை" என்று கூறிவிட்டு மற்ற வளை நோக்கி, "அடி, காமாக்ஷி, நீ செம்பை அப்படிக் கீழே வை" என்று ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டினாள். இரு வரும் அரசியின் கட்டளையை நிறைவேற்றிவிட்டு, ஒரு புற மாய் ஒதுங்கி, மேல் உத்தரவை எதிர்பார்த்துப் பணிவுடன் நின்றார்கள். அப்பால் அரசி அவர்களைப் பார்த்து "சரி, நீங்கள் போகலாம்" என்றாள். பணிவிடைக்காரிகள் இரு

வரும், தலைவணங்கி, அரசியை நோக்கிய வண்ணமே கீழிறங்கிச் சென்றுவிட்டார்கள்.

அவர்கள் கண்ணுக்கு மறைந்த பிறகு, மாயாதேவி, அரசன் இடத்தோளைத் தன் வலக்கரத்தாற்பற்றி, அவனை முடிமுதல் அடிகாறும் ஏற இறங்கப் பார்த்துச் சிறுநகை செய்தாள். அரசன், தோட்டத்தை நோக்கி, வெளிக்குச் செய்த புன்னகையால் இதழ்கள் சற்றே அகன்றபடி, மௌனமாய் நின்றான். மன்னனும் தேவியும் அங்ஙனம் நின்ற நிலை சித்திரத்தில் எழுதத்தக்க சிங்காரம் வாய்ந்திருந்தது.

சுத்தோதனன் நெடிய பெரிய உருவினன். அவன் சிரம், ராஜகிரீடத்தைச் சிறக்க வகிப்பதற்கென்றே அமைந்ததுபோல, வன்மையும் பெருமையும் வடிவும் வனப்பும் பொருந்தி விளங்கியது. உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் ஒவ்வொரு அவயவத்திலும் நிறைந்து வழிந்த ராஜலக்ஷணத்துக்கெல்லாம் ஊற்றிடம் இவைதாமோ என்று கருதுமாறு அவன் கண்கள் இரண்டும் அகன்று நீண்டு கருணையும் வீரமும கம்பீரமும் தெளிவும் பொருந்தித் திகழ்ந்தன. அவன் முகம் இளஞாயிறுபோல, பார்த்தவர் உள்ளத்தில் பக்தியும் பணிவும் உண்டாக்கத்தக்க பேரழகும் பிரகாசமும் வாய்ந்திருந்தது; தோள்கள் திரண்டுருண்டு எடுப்பாயிருந்தன; மார்பகம் அகன்று விளங்கியது அள்ளி அளிப்பதன்றி, ஏந்தி ஏற்பதறியாத அவன் கரங்கள் முழந்தாளளவும் நீண்டிருந்தன.

இங்ஙனம் அழகெல்லாம் சேர்ந்து ஓர் ஆண் வடிவம் எடுத்ததுபோல விளங்கினான் சுத்தோதனன் என்றால், அழகின் பெண்வடிவம் என்னுவாறு விளங்கினாள் மாயாதேவி. கருமையும் மென்மையும் அடர்த்தியும் வாய்ந்த தன் கூந்தலை, அவள் வகிர்ந்து வாரிக் கோதி எடுத்து முடிந்திருந்தாளாயினும், அதை அவிழ்த்து விட்டால் அதன் முனை அவள் காலைத் தொடும். அவள் வட்டமுகம் அன்றலர்ந்த செந்தாமரைபோல் அழகும் செழுமையும் பொருந்தியிருந்தது; கண்கள் தோட்டத்தில் விளையாடும் மானுக்குப் பார்வை கற்றுக் கொடுப்பனபோன்று கள்ளங் கபடமின்றி, உள்ளத்தில் அமைந்த கற்பும் கருணையும்

பொறுமையும் பெருமிதமும் அறிவும் அடக்கமும் வெளித் தோற்ற வைத்த பலகணிகள் என்னத் திகழ்ந்தன ; புரு வங்கள் கறுத்தடர்ந்து வேப்பிலேவடிவா யிருந்தன ; நெற்றி அர்த்த சந்திரன்போல் விளங்கியது ; கன்னங்கள் இரண்டும் கண்ணுடியைப் பழித்தன ; இதழ்கள் மென்மையும செம் மையு முடையனவாய், பவளத்துண்டங்கள் இரண்டைக் கடைந்து திருத்திப் பதித்தாற்போல் காணப்பட்டன ; பற் கள் முத்துக் கோத்தாற்போல் வெள்ளேயாயும் ஒழுங்காயுமிருந் தன. செம்பஞ்சுக் குழம்பூட்டப்பெற்ற அவள் பாதங்கள், விவாக காலத்தில் சுத்தோதனன் கரத்தாற்பற்றி அம்மி மீது வைக்கப்பட்டபோது எவ்வாறு கூசினவோ என்று எண்ணு மாறு அவ்வளவு மெல்லியவாய். பூவிதழ்கள்போன் றிருந்தன. அவள் உருத்தோற்றம், ராஜமகிஷிக்குரிய கம்பீரம் வாய்ந் திருந்தது உயரத்தில், அவள் சுத்தோதனனுக்கு ஒரு பிடி தான் குறைந்திருந்தாள்.

மாயாதேவியிடம் சுத்தோதனன் கொண்டிருந்த காதல் பூரணமானது. அவள் தன் அருகிருக்க அவன் கவனம் அவளேவிட்டு வேறெதிலும் சென்றது இதற்குமுன் எக்காலும் இல்லே. ஆதலால், இப்பொழுது அவன் தன்னேடு உரை யாடாமலும், தன்னேக் கவனியாமலும், வேறெதிலோ நாட்ட முற்றிருந்தது மாயாதேவிக்குப புதுமையாய்த் தோற்றியது ஆனுல், அவள், பிற மாதர்கள் பலரைப்போல எடுத்ததற் கெல்லாம் முகங்கோணிப் பிணங்குபவள் அல்லள். 'ராஜ்ய பாரம் சாமானியமானதன்றே. எந்த ராஜகாரியம் அவர் மனத்தைக் கவர்ந்து கவற்சிக்குக் காரணமாயிருக்கிறதோ' என்று எண்ணி அவள் உள்ளுக்குள் கலங்கி, ஆனுல் அதை வெளிக்காட்டாமல், அரசன் மனக் கவலேயை மாற்றுவதொன் றையே கருதி, இன்பப் புன்னகை செய்து, அவனே ஏற இறங் கப் பார்த்துவிட்டு, "காதல, அடியாள்மீது கொண்ட கோபம் யாதோ ?" என்ருள்.

அப்பொழுதுதான் அரசன் திருமுகம் அலர்ந்தது அவன் தன் காதற்றேவியைத் திரும்பிப்பார்த்து, "மாயா, நான் உன் மீது கோபிப்பேன் என்று நீ கனவிலும் கருதலாமோ ? என் உயிருக்கு உயிரான உன்மீது கோபிக்க எனக்கு மனந்தான் வருமோ ?" என்ருன்.

"பின்னை யார்மீது கோபம்? என்ன வருத்தம்? நான் வந்தபோது ஏன் அவ்வாறு முகம்வாடி யிருந்தீர்கள்? முக மலர்ச்சி யில்லாமல் தாங்கள் செய்த வெள்ளைப் புன்னகை என் மனத்தைக் கலக்கிவிட்டதே!" என்றாள் மாயாதேவி.

சுத்தோதனன் சிறிது நேரம் அவள் முகத்தைப் பார்த்து மௌனமாய் நின்றான். சற்று முன் அவன்கொண்ட முக மலர்ச்சி, அந்தச் சிறிது நேரத்தில் கொஞ்சம கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வந்து மறைந்துவிட்டது. அப்பால் அவன் மாயாதேவியைத் தன் இடக்கரத்தால் வளைத்தணைத் துக்கொண்டு, வலக்கரத்தை நீட்டித் தோட்டத்தில் ஓரிடத் தைச் சுட்டிக் காட்டி, "காதலீ! அதோ பார். வாழைகள் வளர்ந்து முற்றிக் குலை சாய்த்திருக்கின்றன இனி அவை அழிய வேண்டியவைதாம். ஆனால், அவற்றின வர்க்கம் அவற்றோடு அழியாமல், அவை ஈன்ற கன்றுகள் தலை கிளப்பி வளர்கின்றன. அவ்வாறு, வாழையடி வாழையாய் நம் அரச குலம் விளங்க நமக்கு ஒரு புத்திரன் இல்லையே என்பதை நினைவுகூர்ந்தேன். அதுதான் என் வாட்டத்துக்குக் காரணம்" என்றான்.

இம் மொழிகளைக் கேட்கவும் மாயாதேவியின் முகமும் சிறிது வாடியது. அவள், "ஆருயிர் நாயக, தாங்கள் கவற்சி யுறுவது நியாயந்தான். எனக்கும் அவ்விஷயத்தில் கவலை யுண்டு. ஆனால், கடவுள் அருளால் நமக்கு ஒரு புத்திரன் இனியாவது பிறப்பான் என்ற நம்பிக்கை எனக்குப் பூரண மாயிருக்கிறது" என்றாள்.

சுத்தோதனன் புன்னகை புரிந்து, "மாயா, அந்தமட்டும் நீ அதிர்ஷ்ட சாலிதான் எனக்கு அந்த நம்பிக்கை கூட இல்லையே" என்றான்

மாயாதேவி தலையை அசைத்து "அப்படி நினைக்கவேண் டா. என் வயிற்றில் புத்திரன் பிறக்கா விட்டாலும் என் தங்கை கௌதமி வயிற்றில் ஒரு புத்திரன் பிறப்பான் என் பது நிச்சயம். சிறு வயதில் ஒரு சோதிடன் எங்கள் கைரே கைகளைப் பார்த்துவிட்டு, எனக்குப் புத்திரப்பேறு கிடைப் பது அரிது, கிடைத்தாலும் நான் அதை அனுபவிக்கமாட் டேன் என்றும், கௌதமிக்குப் பிள்ளைப் பாக்கியம் பூரணமா யிருக்கிற தென்றும் கூறினன் ஆதலால், எனக் கில்லாவிட்

டாலும் என் தங்கைக்கு நம் குலம் விளங்க ஒரு புத்திரன் பிறப்பான் என்பதில் சந்தேகமில்லை. அவளும் தங்களை அக்கினி சாக்ஷியாய் விவாகஞ் செய்துகொண்டவள்தானே. அவளால் தங்கள் மனக்குறையும் என் மனக்குறையும் அகலக் கூடும் அன்றோ ?" என்றாள்.

"கடவுள் அருளால் எனக்கு இனிப் புத்திரப்பேறு கிடைக்குமானால் அப்புத்திரன் உன் வயிற்றிலேயே பிறக்கட்டும்" என்றான் அரசன்.

மாயாதேவி இளநகை செய்து, "ஏன், கௌதமி வயிற்றில் பிறந்தால் ஆகாதோ ?" என்றாள்.

"அதைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? கௌதமி வயதில் மட்டும் உனக்குத் தாழ்ந்தவளா யிருந்தால் சரிதான்: அழகிலும் தாழ்ந்தவளா யிருக்கிறாள் ; குணத்திலும தாழ்ந்தவளா யிருக்கிறாளே! இல்லையாயின் எனக்கேன் அவளிடத்தில் வெறுப்புண்டாகிறது ? உடன் பிறந்த சகோதரியாதலால் அவள் குற்றங்கள் உன் கண்ணுக்குத் தெரியவில்லை. அதனால்தான் நீ அடிக்கடி அவளுக்காகப் பரிந்துபேச வந்துவிடுகிறாய்," என்றான் சுத்தோதனன்.

"அப்படியன்று பிராணேசா கௌதமி குற்றமேயில்லாதவள் என்று நான் சொல்ல வரவில்லை. களங்க ரகிதமான பரம்பொருள் ஒன்றைத் தவிர, வேறு யாரே குற்றமில்லாதவர்கள் ?, நான்தான் என்ன, குற்றமே யில்லாதவளோ ? என்னையும் அறியாமல் எத்தனையோ குற்றங்கள் என்னிடம் குடிகொண்டிருக்கலாம். அவை பிறர்க்குத் தெரியும் : தங்களுக்கும் தெரியும். ஆனால், தாங்கள் என்மீது கொண்டுள்ள அன்பு, என் குற்றங்களையெல்லாம் தங்கள் கண்ணுக்குத் தெரியவொட்டாமல் மறைத்து விடுகிறது. என்பால் அன்பு பாராட்டுவது போலவே, என் தங்கையிடமும் தாங்கள் அன்பு காட்டுவீர்களானால், அவள் குற்றம் எதுவும் தங்களுக்குத் தெரியாது" என்றாள் நற்குண நாயகியான மாயாதேவி.

அரசன் கொல்லென்று சிரித்து, "பேஷ்! மாயா, உன் பேருக்கேற்ப மாயாவிசித்திரமாகப் பேசுகிறாயே. உன் தங்கையை நல்லவளாக்க என்னைக் குற்றவாளியாக்கி விட்டாய்போ லிருக்கிறது !" என்றான்.

மாயாதேவி இன்னகை செய்து "அப்படியும் சொல் வேணு, நாதா! கௌதமியால் அன்பு பாராட்டி அவள் மனக் குறையை அகற்றி அவளைத் திருத்துமாறு கேட்டுக்கொள் கிறேனே யொழிய வேறில்லை. அதெல்லாம் இருக்கட்டும். நாழிகை ஆகிறது. சிற்றுண்டிகொள்ள வாருங்கள்" என்று கூறி அரசன் கரத்தைப்பற்றி அவனை அழைத்துக்கொண்டு ஊஞ்சலருகே சென்றுள். அரசன் ஊஞ்சலின் ஒருபுறத்தே வைத்திருந்த பசும்பட்டுறையிட்ட பஞ்சணையிற் சார்நது உட் கார்ந்தான். மாயாதேவி அவனெதிரே அமர்ந்து சிற்றுண்டி யைத் தன் பூங்கரத்தால் சிறிது சிறிதாக எடுத்து அரசனுக்கு அளிப்பாளாயினள்.



## அதிகாரம்—2

## கௌதமி

அன்றிரவு பதினைந்து நாழிகைக்குமேல் இருக்கும். கபிலை யம்பதி முழுவதும் கண்ணயர்ந்துவிட்டது. ஊாரவம் முற் றும் அடங்கிவிட்டது எங்கும் அமைதி நிறைந்து விளங் கியதால, உரோகிணி நதி சிலுசிலுவெனக் குமிழியிட்டோடும் மெல்லிய சத்தம, ஏகாந்தப் பெருவெளியில் எழுந்த இன் னிசைபோலத் தெளிவாகவும் இனிமையாகவும் கேட்டது. வானத்தில் ஊர்ந்த பூரணச் சந்திரன், கபிலையம்பதியின் அழகை நோக்கி நோக்கி இன்பமுற்று இளநகை புரிந் தாற்போல நிலவொளி வீசிப் பிரகாசித்தது. அந நகரின் பரி சமே தனக்கு ஆனந்தம் விளைக்குமென்று போலும், இளங் காற்று மரங்களின் ஊடேயும் செடிகளின் ஊடேயும் புகுந்து அவற்றின் இலைகளையும் மலர்களையும் அலைத்தோடி மாட மாளிகைகள் மீதும் கூடகோபுரங்கள் மீதும் தவழ்ந்து தவழ்ந்து விளையாடியது.

ஊர்காப்பாளர் சிலர்,—உரமும் திடமும் வாய்ந்த சரீ ரத்தினர், முறுக்கிவிட்ட மீசையர், உருட்டி மருட்டும் விழி யினர், அதட்டி வெருட்டும் குரலினர், இடையிற் செருகிய வாளினர், கையிற் பற்றிய கோலினர்—நகர சோதனை செய்து வந்தனர். அரண்மனை வாயிலில் நாழிகை அளப்

போர் இருவர் [1]கன்னலால் நாழிகை அறிந்து குறித்து வந்தனர். இருப்புக் கவசமணிந்து தோளில் அம்பறாத் தூணி தாங்கி, கையில வில்லுங் கணையும் கொண்டு, மார்பில் ஊதுகொம்பைத் தொங்கவிட்டு, இடையில் ஈட்டியும வாளும் செருகிய அரண்மனைக் காவல்வீரர் அறுவர் இரு பிரிவாய்ப் பிரிந்து மூவர் வலமாகவும், மூவர் இடமாகவும அரண்மனையைச் சுற்றி அரவப் படாமல் உலவிக்கொண்டிருந்தனர். கோயிற் கோபுர விளக்கொளியும், அரண்மனை மாடவிளக்கொளியும் தவிர வேறு விளக்கொளி எதுவும், இராச்சேவகம் புரிந்துகொண்டிருந்த அவர்கள் கண்ணிற் படவில்லை.

சுத்தோதனனது அரண்மனை மூன்று உப்பரிகைகளையுடையது. ஒவ்வோர் உப்பரிகையிலும், ஸ்நான அறை, பூஜையறை, போஜன அறை, பள்ளியறை, சிங்காரக்கூடம், நிலாமுற்றம் முதலிய அனைத்தும் உண்டு ஆதலால், அரசன் எந்த உப்பரிகையில் வேண்டுமானாலும், பகலையும் இரவையும் கழிக்கலாம். ஆயினும் அவன் தன் அரண்மனையை ஒரு முறைபற்றி வகுத்திருந்தான். கீழ்த்தளத்தின் முற்பகுதி கொலுக்கூடமாக வகுக்கப்பட்டிருந்தது ; பிற்பகுதி அட்டிற்சாலைக்கும் அரண்மனை ஏவலாளர் வாசத்துக்கும இடமாயிற்று : முதல் உப்பரிகை மன்னனது மூத்த பத்தினி மாயாதேவிக்கும, இரண்டாவது உப்பரிகை இளைய பத்தினி கௌதமிக்கும உரியவாக விடப்பட்டிருந்தன மூன்றாவது உப்பரிகை அரசன் ஒருவனுக்கே உரியது : அரசன் உத்தரவின்றி, அவன் தேவியரேயாயினும, அந்தரங்கச் சேவகரேயாயினும, வேறுயாவரேயாயினும அங்குச் செல்லக்கூடாது ; மிக ஆழ்ந்து ஆலோசித்துத் தீர்மானிக்கவேண்டிய ராஜ்ய விவகாரங்களை ஆலோசிப்பதற்கானாலும், பண்டைக் காலத்துப் பேரறிவாளர் எழுதிவைத்த பெருநூல்களை மனங் குவிந்து ஆராய்வதற்கானாலும், சிந்தைக்கெட்டாத சர்வலோக

[1] 'கன்னல்'- என்பது முற்காலத்தார் நாழிகை அளப்பதற்குச் சாதனமாகக் கொண்ட ஒரு கருவி. வாயகன்ற பாத்திரம் ஒன்றில் நீர்நிரப்பி, அடியில் மெல்லிய துவாரம் இட்ட கிண்ணம் ஒன்றை அந் நீரில் மிதக்கவிட்டு, அது நீர்கொண் டமிழ்வதால் நாழிகையறிவர்.

நாயகனை மனோசலனமின்றி வணங்குவதற்காகவும் அரசன் அங்கேதான் செல்வது வழக்கம்.

இந்த மூன்று உப்பரிகைகளும் ஒன்றைவிட ஒன்று சிறிது சிறிது குறுகி உள்ளடங்கியிருந்தன. அவ்வவ் உப்பரிகையில் குறுகியபாகம் அதற்கு நிலாமுற்றமாக அமைந்திருந்தது. ஆதலால், மூன்றாவது உப்பரிகையின் நிலாமுற்றத்திலிருந்து முதலாவது இரண்டாவதன் நிலாமுற்றங்களையும், இரண்டாவதன் நிலா முற்றத்திலிருந்து முதலாவதன் நிலா முற்றத்தையும் காணுதல் கூடும்.

இங்ஙனம் அமைந்த இவ் வரண்மனையில் சுத்தோதனனுக்கு விருப்பமான இடம் மாயாதேவியின் உப்பரிகையே. அரச கடமையை நிறைவேற்றவேண்டி, அவன் கொலுக்கூடத்திற் கழிக்கும் முற்பகலொழிய மற்றைப் பொழுதெல்லாம் பெரும்பாலும் மாயாதேவியின் உப்பரிகையிலேயே கழிப்பான். அவ் வழக்கப்படியே இவ்விரவும் அவன், மாயாதேவியின் பள்ளியறையிலேயே இன்றுயில் கொண்டிருந்தான். மாயாதேவி அவனருகே சிறு குழந்தைபோல் கலக்கமற்ற நித்திரையி லாழ்ந்திருந்தாள்.

அரண்மனை ஏவலாளரும் அயர்ந்து உறங்கினர்.

காவல் வீரரும் கன்னல் அளப்பாரும் ஒழிய, அவ்விரவு அந் நேரத்தில் உறக்கமற்றிருந்தது ஒரே ஒரு பெண்மகள் தவிர வேறெவருமிலர். அவள் யார்? அவளே கௌதமி; சுத்தோதனனது இளைய பத்தினி; மாயாதேவியின் தங்கை.

அரவமற்ற அவ் வர்த்தராத்திரியில் அவள் கண்ணுறங்காமல் பஞ்சணையிற் புரண்டு புரண்டு பெருமூச்செறிந்து கொண்டிருந்தாள். அவள் பள்ளியறையின் ஒரு மூலையில் தங்கக் குத்துவிளக்கொன்று மெல்லிய சிறு சுடர் விட்டு எரிந்துகொண்டிருந்தது. வேறு பல தொங்குவிளக்குகளும், கைவிளக்குகளும் பளபளவென்று பிரகாசித்தனவாயினும் கொளுத்தப்படாமலிருந்தன. ஆதலால், குத்துவிளக்கின் சிறு வெளிச்சம் விசாலமான அப் பள்ளியறைக்குப் போதியதாயில்லை. ஆயினும், அந்தச் சிறு வெளிச்சத்திலேயே பள்ளியறையின் அலங்காரம் கண்ணைக் கவரத்தக்கதாயிருந்தது.

அறையின் நாற்புறச் சுவரும் முத்துவெள்ளை பூசப்பட்டுப் பார்த்தால் முகந்தெரியக்கூடிய பளபளப்போடு விளங்

கியது. கைத்திறம் வாய்ந்த ஓவியர் எழுதிய அருமையான சித்திரப் படங்கள் பல, சுவர்க்கு அழகு கொடுத்து அறையை அலங்கரித்தன. நடந்தாற் கால் புதையத் தக்க மெத்தென்ற இரத்தினக் கம்பளம் தரை முழுவதையும் மூடியிருந்தது. கௌதமி படுத்திருந்த மஞ்சம் அறையின் நடுவே நின்றது. அம்மஞ்சம் ஒன்றே ஓர் ஊரை விலைக்கு வாங்கத் தக்கது. அதன் கால்கள் நான்கும் கடைந்தெடுத்த யானைத் தந்தங்களாற் செய்யப்பட்டிருந்தன. சட்டங்கள் மெருகிட்ட கருங்காலியில், விசித்திர வேலைசெய்த பொற்றகடுகள் பதிக்கப் பெற்றனவா யிருந்தன. இரத்தினக் கற்கள் இழைத்த தங்க விதானமொன்று, யானைத்துதிக்கைபோல் செய்த வெள்ளித் தூண்களால் தாங்கப்பட்டு மேலே கவிந்திருந்தது. பாலாவிபோல் மிக மெல்லியதான வெண்பட்டுத் திரையொன்று, கட்டிலின் நாற்புறத்தையும் மறைக்குமாறு தொங்கவிடப்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது அது ஒருபுறமாய்ச் சுருக்கப்பட்டுத் தொங்கியதேயன்றி நாற்புறத்தையும் மறைக்கவில்லை. அக் கட்டிலிற் கிடந்த படுக்கைகள் இரண்டு ஒன்று கீழும் மற்றொன்று மேலுமாக இருந்தன. கீழ்ப்படுக்கை இலவம்பஞ்சு நிரப்பப்பட்டும், மேற்படுக்கை அன்னத்தூவி நிரப்பப்பட்டும் பசும்பட்டு உறையிடப்பட்டு மிருந்தன. தலையணைகளும் காலணைகளும் பலவர்ணப் பட்டுறை யிடப்பெற்றிருந்தன. அவற்றின்மீது தூவெள்ளையான பட்டுவிரிப்பிட்டுக் கௌதமி படுத்திருந்தாள். அவள் தலைமாட்டில் நிலைக் கண்ணாடியொன்று விதானச் சட்டத்திலிருந்து வெள்ளிச் சங்கிலியில் தொங்கியது.

இவ்வளவு ராஜசுகத்திற் படுத்திருக்கும் கௌதமிக்கு உறக்கம் வாராததற்குக் காரணம் என்ன? ஒழியாக் கவலையால் உள்ளங் கலங்கியவர்கள்போல, அவள் படுக்கையிற் புரண்டு புரண்டு பெருமூச்செறிவானேன்? மன்னனுக்குத் தேவியாகும் பெரும்பேற்றைப் பெற்ற அவளுக்கும் விசாரம் இருக்கக் கூடுமோ? கூடும். மக்களெனப் பிறந்தார் யார்தாம் விசாரமற்றவர்? மணிமகுடந் தாங்கும் மன்னர் பிரான் சிரமாயினும் கவற்சியாற் கலங்குமன்றோ? உலகில் இரந்துண்டு வாழும் ஏழையின் விசனத்துக்கும், உலகைப் புரந்தாண்டு

வாழும் இறையோன் விசனத்துக்கும் காரணம் வெவ்வேறா யிருக்கலாம் ; விசனம் ஒன்றுதானே

" பாலுக்குச் சர்க்கரை இல்லையென் பார்க்கும்
பருக்கையற்ற
கூழுக்குப் போடவுப் பில்லையென் பாருக்கும்
குத்தித்தைத்த
காலுக்குத் தோற்செருப் பில்லையென் பார்க்கும்
கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை யில்லையென் பார்க்கும்
விதனமொன்றே."

என்ற செந்தமிழ்ப் புலவர் திருவாக்கும் உண்டன்றோ ?

ஆனால், கௌதமியின் விசனத்துக்குக் காரணம், ஏதோ ஒன்று இல்லையே என்பதன்று வேறென்ன ? மன்னன் தன் தமக்கையிடம் அவ்வளவு காதல் வைத்திருக்கிறானே என் பதுதான். தன்னிடம் காதல் கொள்ளவில்லையே என்று அவள் விசனப்படவில்லை. பொறாமை என்ற பொல்லாத பேய் அவள் மனத்தைப்பற்றிக் கலக்கியது. அதனால் அவள் மனம் கலங்கியது ; உருக் குலைந்தது. 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்-கடுத்தது காட்டும் முகம்' அன்றோ ?

மாயாதேவியின் உடன் பிறந்தாள் என்பதற்குரிய அறி குறிகள் கௌதமியின் வடிவமைப்பில் இராமற் போகவில்லை தேகத்தின் சாயலும் முகத்தின் ஜாடையும், சகோதரிகள் இருவர்க்கும் உள்ள இரத்த சம்பந்தத்தைத் தெளிவாய்க் காட்டின ஆயினும் சற்று ஆழ்ந்து நோக்குவார்க்கு, இரு வரும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்தவர்களே யானாலும், குணாதி சயங்களில் தென் கோடியும் வடகோடியும் போலப் பெரிதும் வேறுபட்டவர்கள் என்பது விளங்காமற் போகாது. கௌத மியின் கண்கள் கள்ளமும் கபடமும் கற்றுக் கற்றுக் கலங்கி யிருந்தன. அவள் நெற்றி, முகவிசாலத்துக்கேற்ற அகல மும உயரமும் இன்றிக் குறுகியிருந்தது ; கன்னங்களின் மேற்பாகம் அகன்று புடைத்தும், அடிப்பாகம் குறுகி உள் ளொடுங்கியும் இருந்தன ; இதழ்கள் பருத்தும் நிறம் வேறு பட்டும், மோவாய் நீண்டும் இருந்தன.

செயற்கை நலங்களால் அவள் வடிவழகின் குறைகள் அதிகமாக வெளிப்பட்டுத் தோன்றவிடினும், மாயாதேவி

யைப் பார்த்த கண்ணால் இவளைப் பார்த்தால், இவள் ஒரு ராஜ குடும்பத்தில், அதுவும் மாயாதேவிக்குத் தங்கையாகப் பிறப்பதற்கும், ராஜலட்சணங்களில் ஒரு சிறிதும் குறைவு படாத சுத்தோதனனுக்குத் தேவியாதற்கும் தகுதியில்லாத வள் என்றே காணப்படுவாள்

'திருநாளே வெறுநாளாயின், வெறுநாள் என்னும்?' என்பர். கௌதமியின் முகத்தோற்றம் சாதாரணமாகவே இத்தகைத்தானால், அழகைக் கெடுக்கும் கோபம், வெறுப்பு, சலிப்பு முதலிய துர்க்குணங்களுக்கு அவள் ஆளாகும் காலத்தில் எத்தகைத்தாகும்? அதைச் சொல்லவும் வேண் டுமா? அதிலும் அவள் சுபாவம், ஒவ்வொருநாளும், அறு பது நாழிகையில் ஓர் இருபது நாழிகை நேரமாவது சேர்ந் தாற்போல், மன அமைதி பெற்றிருக்க ஒப்புவதில்லை. ஏதா வது ஒரு குறை, ஏதாவதொரு சலிப்பு, எவர்மீதாவது ஒரு கோபம் அவள் மனத்தைப்பற்றி அலைத்துக்கொண்டேயிருக் கும் அவள் வெறுப்புக்கும், சலிப்புக்கும், கோபத்துக்கும் எத்தனையோ சிறுசிறு காரணங்கள் அடிக்கடி கிளைத்துக் கொண்டேயிருக்கும் ஆயினும், அவற்றுக்கெல்லாம் மூல மாய் என்றும் நிலையாய் நிற்பதொன்றுண்டு. அதாவது, சுத் தோதனன் அவள் தமக்கை மாயாதேவியிடம் கொண்ட காதற் பெருக்கே.

இப்பொழுது, ஊரெல்லாம் அடங்கி ஒடுங்கிய இந்த நடுச் சாமத்தில், நித்திரை கொள்ளாமற் படுக்கையிற் புரண்டு புரண்டு அவள் பெருமூச் செறிவதற்கும் அதுவே காரணம். சுத்தோதனன் அவளுடைய பள்ளியறையில் அடிவைத்துப் பல மாதங்கள் ஆயின. இடையில் சில சமயங்களில் அவன் அவளைத் தற்செயலாய்க் கண்டும், புன்னகை செய்து போயி னனே யொழிய, நின்று அவளோடு இரண்டு வார்த்தைகள் கூடப் பேசினனில்லை. 'ஏன் இந்த வஞ்சகம்! மாயாதேவி யைக் கண்டால், காணாததைக்கண்டாற்போல் அகங்களித்து முகமலர்ந்து அவளோடு இன்னுரையாடி நெடுநேரத்தைக்கழிக்க வில்லையா! ஏன் இந்தப் பாரபட்சம்? மாயாதேவி என்ன அந்தரத்திலிருந்து குதித்த தேவ ரம்பையா! நான் எவ் வயிற் றிற் பிறந்தேனோ, அவ்வயிற்றில்தானே அவளும் பிறந்தாள்! அவளைப்போல நானும் அக்கினி சாட்சியாய் விவாகஞ் செய்

துகொண்ட தர்மபத்தினிதானே ? என்னிலும் அவளுக்குள்ள ஏற்றம் என்ன ? வயதளவிற் பார்த்தாற்கூட, நான் தானே கட்டழுத இளமைப் பருவத்தளாயிருக்கிறேன். கிழவியான அவள்மீது வாஞ்சையும், இளையளான என்மீது வெறுப்பும் காட்டுவது கணவன் புத்திப் பிறழ்வோ, அவள் சாகச சாமர்த்தியமோ ? யார் அறிவார் !.........மனமார மணந்த மனைவியர் இருவருள் வேற்றுமை பாராட்டும் ஓர் அரசன், தன் குடிகளைப் பாரபட்சமின்றி ஆண்டு நீதி செலுத்துவது எப்படியோ, அறியேன் ! அரசனை நொந்து ஆவதென்ன ! 'கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்.' தலையணை மந்திரம் செய்து செய்து அவள் என் அரசனைத் தன் மாயவலையிற் சிக்க வைத்துவிட்டாள் ! அவள் குணம் அவளோடு பிறந்த எனக்குத் தெரியாதா ! மாமாயக் கள்ளியாயிற்றே ! 'உள்ளே வயிறெரிய உதடு பழஞ்சொரிய' என்பார்கள். அவளுக்குத்தான் அது ! என்னிடத்தில் அவள் வெளிக்குக் காட்டுகிற அருமையையும் ஆசையையும் பார்த்துப் பார்த்துப் பேதை ஜனங்கள், 'ஆ, மாயாதேவி தன் தங்கையிடத்தில் எவ்வளவு பிரியம் வைத்திருக்கிறாள் !' என்று என் காதில் விழ அவளைக் கொண்டாடுகிறார்கள். என்ன அநியாயம் ! உலகம் அப்படி யிருக்கிறது !

'உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா :
உடன்பிறந்தே கொல்லும் வியாதி'

என்ற உண்மையினை நான் அறிந்துவிட்டேன் ; உலகம் அறிவதெப்போதோ ! அடி மாயாதேவி, உன் மாயா விசித்திரங்களைச் சின்னஞ்சிறு குழந்தைப் பருவத்திலேயே கண்டுதானே, உனக்கு இப் பெயரிட்டார்கள் ! இருக்கட்டும் நீ செய்வதெல்லாம் செய் ! இந்தச் செல்வாக்கு என்றும் உனக்குச் செல்லும் என்று எண்ணாதே ! தசரதன் மனைவி கைகேயியும், உன்னைப் போலத்தான், அரசன் பட்சம் தனக்கே உரியதென்று அடாதன எல்லாம் செய்தாள் ; அதனாற் படாதன எல்லாம் பட்டாள். வேறு என்ன வாரிக் கட்டிக்கொண்டாள் ! உன் கதியும் அப்படித்தான் ஆகப்போகிறது. என் வாழ்வைக் கெடுக்க, எங்கிருந்து நீ எனக்குத் தமக்கையாகத் தோன்றினாயோ ! உன் மாயம் குலைய ! உன் வாழ்வு தொலைய! உன் அழகு அழிய ! ஏனடி இப்படி என் வயிறெரியப்

பண்ணுகிறாய்? தமக்கையாயிற்றே என்று இதுவரையிற் பொறுத்திருந்தேன் என்றும் இப்படியே பொறுத்திருப்பே னென்று நினையாதே! 'கொட்டினால்தானா தேள்? கொட்டா விட்டாற் பிள்ளைப்பூச்சியா?' அடி. உன்னைப்போல் நான் சிரித்துக் கழுத்தறுப்பவளல்லள் பொறுக்கும் வரையில்தான் பொறுப்பேன். பசுப்போல இருக்கிறேன் என்று எண்ணாதே. பாய்ந்தாற் புலிபோற் பாய்வேன்! கோலிய தேசத்துக்கு அதிபதியான அஞ்சனன் என்னும் வீரராஜன் மகள் நான் என்பதை மறந்துவிடாதே. நீயும் அந்த ராஜ சிங்கத்துக்கு மகளாய்த்தான் பிறந்தாய் பிறந்துமென்ன? சிங்கத்தின் தைரியமும் கம்பீரமும் கொஞ்சமும் இன்றி, நரியின் ஜால மும் தந்திரமும் கற்றுக்கொண்டாய்! உன் தந்திரமும் ஜால மும் எவ்வளவு காலம் நிற்கும், பார்க்கிறேன்!...........'

இவ்வாறு பலபல எண்ணி உறக்கங்கொள்ளாது, இப் புறமும் அப்புறமும் மாறிமாறிப் படுத்து, உடம்பை அலட்டி, முகத்தைச் சுளித்து, கண்ணைக் கசக்கிப் படாதபாடெல்லாம் பட்டாள் கௌதமி அப்பொழுதெல்லாம் அவளுடைய முகத்தோற்றம், உள்ளத்தில் எழுந்த விதவிதமான எண்ணங் களுக் கேற்பப் பலபல வகையாய் விகாரமுற்றது. ஒரு சமயம் அவள் புருவங்கள் நெரிந்தன; ஒரு சமயம் கண்கள் மருண்டு விழித்தன: ஒரு சமயம் உதடுகள் துடித்தன; ஒரு சமயம் பற்கள் நெறு நெறுவெனக் கடிபட்டன. எண் ணுதவெல்லாம் எண்ணி உள்ளஞ் சலித்தபிறகு அவள் சற்று நேரம் அமைதியாய்ப் படுத்திருந்தாள். நாழிகை ஒவ்வொன் றாகக் கடந்தது. இரவின் பெரும்பாகம் கழிந்துபோய்விட் டது. கௌதமிக்கு இன்னும் நித்திரை வரவில்லை. சுத் தோதனனும் மாயாதேவியும் தன்னைப்பற்றி ஏதோ பேசுவது போல அவளுக்குத் தோற்றியது உற்றுக் கேட்டாள். ஓர் அரவமும் காதுக்கு எட்டவில்லை. ஆயினும் அவள் மனம் சமாதானப்படவில்லை படுக்கையைவிட்டு மெல்ல எழுந்து, அடிமேல் அடிவைத்துத் தன் அறையைவிட்டு வெளியேறி நிலாமுற்றத்துக்குச் சென்றாள் சிறிதுதூரம் சென்றதும், இரண்டாவது மாடியின் நிலாமுற்றத்தில் ஓர் உருவம் உலாவு வதைக் கண்டு அவள் திடுக்கிட்டு நின்று அதனை உற்றுப் பார்த்தாள்; உலாவுவது சுத்தோதனனே என அறிந்தாள்;

உடனே தனது ஆச்சரியத்தை உள்ளடக்கிக்கொண்டு அரவப்படாமல் வந்த வழியே திரும்பித் தன் பள்ளியறைக்குச் சென்றுவிட்டாள்.



அதிகாரம்—3

## கனவு கண்டு களிகூர்தல்.

நிலாமுற்றத்தில் கௌதமி சுத்தோதனன் உருவைக்கண்ட அதே சமயத்தில், மாயாதேவி நித்திரை நீங்கிக் கண் விழித்தாள். அவள் முகம் சூரியனைக் கண்டு மலர்ந்த செந்தாமரை போல் செழிப்புற்று விளங்கியது. நித்திரை நீங்கியதும் அவள் எல்லாம் வல்ல கடவுளின் திருவருளைச் சிந்தித்து வந்திப்பவளைப்போலக் கண்கள் மேல் நோக்கக் கரங்களைக் குவித்து அஞ்சலி செய்தாள். அப்பால் அவள் வலப்புறமாக மெல்லத் திரும்பிப் பார்த்தாள்; திடுக்கிட்டாள்; தன் அருகே சயனித்திருந்த தனது ஆருயிர்க்காதலன் சுத்தோதனனை அவள் காணவில்லை. உடனே படுக்கைவிட்டெழுந்து மஞ்சத்தில் உட்கார்ந்தபடியே 'நாதா, நாதா!' என்று மாயாதேவி இருமுறை கூப்பிட்டாள். பிரதியுத்தரம் ஏதும் கிடைக்கவில்லை. அதன்மேல் அவள் மஞ்சத்தைவிட்டுக் கீழிறங்கி, அந்தச் சிங்காரப் பள்ளியறையின் ஒரு புறத்தில் மெல்லிய சிறு சுடர் விட்டு மங்கலாய் எரிந்துகொண்டிருந்த தங்கக் குத்துவிளக்கருகே சென்று, அதிற்கிடந்த வெள்ளித் தூண்டு கோலால் திரியைத் தூண்டிவிட்டாள். பள்ளியறை முன்னையினும் அதிக வெளிச்சமுற்றது.

நிலாமுற்றத்தில் உலவிக்கொண்டிருந்த சுத்தோதனன் அதனைக் கவனித்தான். குத்துவிளக்கருகே கற்புவிளக்கான மாயாதேவி நிற்பதையும் அவன் கண்டான்; அவள் அந்நேரத்தில் துயிலொழிந் தெழுந்தது ஏதுகாரணம், படுக்கையில் தன்னைக் காணுமல் அவள் திகைப்பாள், என்றெண்ணி உலவுவதை விட்டுப் பள்ளியறையை நோக்கிச் சென்றான். அறையை நெருங்கவும் அவன் காலடிச் சத்தம், அமைதி நிறைந்த அந் நேரத்தில், மாயாதேவியின் செவிக் கெட்டியது. தன் காதலன் காலடிச் சத்தமே அது என்பதை அவள் நன்

குணர்ந்து மனமகிழ்ந்து அவனை எதிர்கொள்ளத் திரும்பி ஞள். சுத்தோதனன் அவளது மலர்முகத்தைக் கண்டு மகிழ் பூத்து, "மாயா, என்ன இந்நேரத்தில் விழித்துக்கொண் டாய்? பொழுது விடிய இன்னும் நெடுநேரம் இருக்கிறதே!" என்றான்.

"ஆம், நாதா. எனக்கு முன்னேயே தாங்கள் கண் விழித் தெழுந்து விட்டீர்களே! தாங்கள் என்னருகே இல் லாமை கண்டுதான் நான் படுக்கைவிட் டெழுந்தேன். தாங் கள் படுக்கைவிட் டெழும்வரையில் நான் துயில் கொண்டிருந் தது இன்று தவிர வேறு என்றேனும் உண்டா?" என்றாள் மாயாதேவி.

"இல்லை. நீ 'பின்தூங்கி முன் எழும் பேதை' என்பது எனக்குத் தெரியாதா? இன்றுதான் நீ எனக்குப்பின் எழுந் தாய் நான் சற்றுமுன்தான் ஒரு கனவுகண்டு—" என்று சுத்தோதனன் கூறி, மேல் எதுவும் கூறுவதன்முன் மாயா தேவி அதிசயத்தோடு அவன் முகத்தை ஏறெடுத்துப் பார்த்து, "என்ன அது! தாங்கள் கனவுகண்டீர்களா!" என்றாள்.

சுத்தோதனன், "ஆம், மாயா. நான் ஒரு நற்கனவு கண் டேன். அவ்வாறு சுப சொப்பனம் கண்டால் தெய்வத்தைத் தியானித்துப் படுக்கைவிட் டெழுதல் வேண்டும், அப்பால் கண்ணுறங்கலாகாது என்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவல் லவா? ஆதலால் நான் நிலாமுற்றத்துக்குச் சென்று உலவிக் கொண்டிருந்தேன் நீயும் துயில் நீங்கி எழுந்தது அறிந்து வந்தேன் அதிருக்கட்டும். நான் கனவுகண்டது உனக்கு அதியசம் விளைப்பானேன்? நீயும் ஏதேனும் கனவு கண் டையோ?" என்று வினவினன்.

"ஆம்" என்று சொல்லிப் புன்னகை புரிந்தாள் மாயா தேவி.

"அப்படியா! ஆயின் அது அதிசயமே. உன் கனவும் நற்கனவாகத்தான் இருக்கவேண்டும். உனது முகமலர்ச்சியே அதை நன்ருய்த் தெரிவிக்கிறது. வா, இப்படி வந்து உட் கார்ந்து, உன் கனவைச் சொல்" என்று கூறிச் சுத்தோ தனன், மாயாதேவியின் கரத்தைப்பற்றி ஈர்த்து அருகே கிடந்த ஒரு மணிப்பீடத்தின்மீது அவளை உட்காருவித்துத் தானும் அவளருகே உட்கார்ந்தான்.

"எனக்கு முன்னேயே தாங்கள் கனவு கண்டு எழுந்து விட்டீர்க ளல்லவா? ஆதலால தாங்கள்தான் முன்னதாகத் தங்கள் கனவைச் சொல்லவேண்டும். பிறகு நான் என் கனவைச் சொல்கிறேன்" என்ருள் மாயாதேவி.

சுத்தோதனன் புன்னகை புரிந்து, "ஓகோ, நியாயம் அப் படியிருக்கிறதோ! ஆனுல் சரி, சொல்கிறேன் கேள்" என்று கூறலானுன்: "சூரியோதயமானதுபோல் எங்கே பார்த்தா லும் பிரகாசமாயிருந்தது அந்தப் பிரகாசத்திற்குக் கார ணம் என்னவென்று நான் சுற்று முற்றும் பார்த்தேன். அப் பொழுது ஆகாயத்தில் வெகு தூரத்தே ஒரு ஜோதி என் கண் ணிற்பட்டது நான் அதிசயமெய்தி அது என்னவென்று உற்று நோக்கினேன். அந்த ஜோதி ஒரு நிலையாயிராமல் என்னை நோக்கி ஊர்ந்து வந்தது வரவர அதன் ஒளியும் வடிவமும் அதிகமாயின. கிட்ட நெருங்க நெருங்க அது ஒரு தெய்வ விமானமாயிருக்கக் கண்டேன். அது எனக்கு மிகவும் சமீபத்தில் வரவும் அதன் அமைப்பெல்லாம் நன்ருய் விளங்கியது. தங்கமயமாய்ப் பிரகாசித்த அந்த விமானத் தில் கண்கொண்டு பார்க்க முடியாத பேரழகுடைய தெய்வ புருஷர் ஒருவர் வீற்றிருந்தார். அவர் முகத்தில் விளங்கிய ஞானதேஜஸைக் காணவும், என்னையும் அறியாமல் என் மனத் தில் ஒருவித பக்தியும் பயமும் உண்டாயின. என் உடம்பு சிலிர்த்தது. இந் நிலையில் என் அதிசயம் அதிகரிக்கத் தக்க தாக, அவ் விமானம் என்னெதிரே வந்து நின்றுவிட்டது. நான் உடல் புளகிக்க, உரோமஞ் சிலிர்க்க, வியர்வுநீர் பெருக, கண்ணீர் ததும்ப, விமானத்திலிருந்த தெய்வபுருஷர் திருவுரு வம் ஒன்றை ஒழியப் பிறவற்றை யெல்லாம் முற்றும் மறந்து, கரங்களைச் சிரமேற்கூப்பி அவரை நமஸ்கரித்தேன். அந்தச் சுந்தர புருஷர் தம் வலக்கரத்தை நீட்டி என்னை ஆசிர்வதித்து, 'சுத்தோதனு! நான் தெய்வலோகங்கள் ஆறினுள் நான்காவ தான துஷிதலோக வாசி பிரபாபாலர் எனப்படுவேன். மண்ணுலகில் மானுடர் அறநெறியை மறந்து பிறநெறியிற் புகுந்து துன்புற்று வருந்துகிருர்கள். தர்மம் சிதைந்து அதர் மம் தலையோங்கி வருகிறது. அதைக் காண எனக்குச் சகிக்க வில்லை. அஞ்ஞான இருளிற் கிடந்துழலும் உயிர்களுக்கு நன்னெறி காட்டி அவர்களை உய்விக்க விருப்புற்றேன். அவ்

விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக, சற்குண சம்பன்னனுன உனக்குப் புத்திரனுக அவதரிப்பேன்' என்றார் நான் கரை கடந்த மகிழ்ச்சியுற்று, அவரை ஸ்தோத்திரிக்க வாயெடுத்தேன் அப்பொழுது என் உறக்கம் கலைந்துவிட்டது கண் விழித்துப் பார்த்தேன். தங்க விமானத்தையும் காணேன் தெய்வ புருஷரையும் காணேன் என்னருகே துயில்கொண்டிருந்த உன்னைத்தான் கண்டேன் சற்று முன் கண்டனவும் கேட்டனவும் கனவேயென்றுணர்ந்தேன். உன்னை எழுப்பி இவ் வதிசயக் கனவை உடனே சொல்ல விரும்பினேன். ஆயினும், உன் உறக்கத்தைக் கலைக்க மனமில்லை. அதன்மேல் எல்லாம் இறைவன் அருள் என்று உன்னி அவன் திருவடித் தாமரைகளைத் தியானித்து நமஸ்கரித்துவிட்டுப் படுக்கை விட்டகன்று நிலாமுற்றத்துக்குச் சென்றேன். வானை நோக்கினேன். இரவிற் பெரும்பாகம் கழிந்துவிட்ட தறிந்தேன். பூர்ணசந்திரனது நிலவொளி பால்போல் பிரகாசித்தது. அந் நிலவொளியில் இயற்கையழகை நோக்கி இன்புற்று உலவிக்கொண்டிருந்தேன். அப்பொழுது, நான் திறந்துவைத்துச் சென்ற நம் பள்ளியறை வாயில் வழியே விளக்கொளி மிகுந்து வருவது கண்டு அதற்குக் காரணம் என்னவென்று அறிய உற்று நோக்கினேன். நீ நிற்பதைக் கண்டேன். உடனே இங்கு வந்தேன். அவ்வளவுதான். இனி நீ உன் கனவைச் சொல்."

சுத்தோதனன் கூறிய ஒவ்வொரு சொல்லையும் அதிசயத்தோடும் ஆனந்தத்தோடும் கூர்ந்து கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்த மாயாதேவி, அவனைக் கனிவுடன் நோக்கிப் பின் வருமாறு கூறலானாள்: "நாதா, இறைவன் திருவிளையாட்டை யாரறிவார்! நான் கண்ட கனவே எனக்குப் பேரதிசயம் விளைத்தது தாங்கள் கண்ட கனவைக் கேட்ட பிறகு, எனக்குண்டாகும் அதிசயம் இவ்வளவென்று கூறுந்தரமன்று ஆ, என்ன விந்தை! என்ன விந்தை! நாதா, என் மனம் ஏதேதோ எண்ணிச் சுழல்கிறது. என் அறிவு தடுமாறுகிறது. இவ்வுலகத்தை யெல்லாம் மறந்து, எல்லாம் வல்ல இறைவனது திருவருட் பெருமையையே நினைந்து நினைந்து மெய்யுருக மனமுருகத் தெய்வநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டிருக்க விரும்புகிறேன். ஆயினும் தங்கள் ஆவலைத் தீர்க்க நான் கண்ட கனவையும் சொல்கிறேன். ஆ, விந்தை! விந்தை!

தாங்கள் கண்ட விதமாகவே நானும் ஓருதங்க விமானத்தைக் கண்டேன். அந்தத் தங்கவிமானத்தில தாங்கள் தரிசித்த தெய்வபுருஷரையே நானும் தரிசிக்கப்பெற்றேன். அவர் தாம் துஷிதலோக வாசியாகிய பிரபாபாலர் என்பதை எனக்கும் தெரிவித்தார். அம்மட்டு மன்று, அரசே! என்னையும் அவர் திருவாய் மலர்ந்து ஆசீர்வதித்தார். என்ன விந்தை! என்ன விநதை! நினைக்க நினைக்க என் உள்ளம் பூரிக்கிறதே. நாதா, என் மனநிலையை வாய்விட்டுச் சொல்ல என்னுல் முடிய வில்லை. என் நாக்குழறுகிறது. உரை தடுமாறுகிறது. அந்தத் தெய்வபுருஷர் திருவாய் மலர்ந்தருளிய நற்செய்தியை என்னென்று கூறுவேன்! 'யானே நின்வயிற்றிற் புத்திரனுக வந்து பிறப்பேன்' என்ருர். அந்தப் பெறற்கரிய பெரும் பேறு கனவாகத்தான் போமோ, அன்றி மெய்யாகவே சித்திக் குமோ, அறியேன். எவ்வாருயினும், அப் பேறு கிட்டுமென்று சனவிலேனும் கேட்கப் பெற்றது முற்பிறப்பிற் செய்த புண் ணிய முதிர்ச்சியே யல்லவா? அரசே, பிரபாபாலர் என்னும் அத் தெய்வபுருஷர் அருள் மிகுநதுரைத்த நற்செய்தியைக் கேட்டு நான் ஆனந்தித்துக்கொண்டிருக்கும் பொழுதே அவர் என் கண்ணுக்கு மறைந்துவிட்டார் அவர் விமானம் யாண் டுச் சென்றதோ என்று நான் பிரமித்து வானை நோக்கினேன். அப்பொழுது கீழ்த்திசையில் தாரகை ஒன்று பொன்மயமாய்ப் பேரொளிவீசிப் பிரகாசிப்பதைக் கண்டேன். என்றும் நான் அவ்வளவு ஒளியுள்ள தாரகையைக் கண்டதில்லை யாதலால், அதை அதிசயத்தோடு கவனித்துப் பார்த்தேன் அது என்னை நோக்கி வந்துகொண்டிருந்தது கிட்ட நெருங்க நெருங்க அதன் பிரகாசம அதிகமாயிற்று. வடிவில் அது அறுகோண மாயிருந்தது. அதை உற்று நோக்கவும் என் கண்கள் கூசின. என்னை நோக்கி வானின்றிறங்கி வந்த அது என்னை அணுகி என் வயிற்றிற்புகுந்து மறைந்தது. இதென்ன அதிசயம் என்று நான் எண்ணி வியந்துகொண்டிருக்கையில் என் உறக்கம் கலைந்தது. கண்டன கேட்டன எல்லாம் கனவே என்றுணர்ந் தேன். இறைவனை இறைஞ்சினேன். தங்களை எழுப்பி இக் கனவைக் கூறலாமா என்று கருதித் திரும்பிப்பார்த்தேன். என் அருகே துயின்றிருந்த தங்களைக் காணேனுயினேன். 'நாதா, நாதா' என்று இரண்டொருமுறை கூப்பிட்டேன்.

ஒன்றும் பதில் கிடைக்கவில்லை. தாங்கள் இந்நேரத்தில் எங்குச் சென்றிருக்கக்கூடும் என்று வியப்புற்றுப் படுக்கை விட்டெழுந்து, விளக்கைத் தூண்டினேன். அப்போது தங்கள் காலடிச்சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். தங்களைக் கண்டு கொண்டேன். அவ்வளவுதான் அரசே. நாம் இருவரும் சற்றேறக்குறைய ஒரே காலத்தில் ஒரே விதமான கனவு கண்டது அதிசயமே யன்றோ!"

"தடையென்ன, மாயா. எல்லாம் அதிசயமாகவே இருக்கின்றன. ஏதோ கடவுள் கடாட்சம் சிறிது நமக்குண்டாயிருக்கிறது என்பதில் ஐயமில்லை இன்று காலையில்தான் நமக்குப் புத்திரப்பேறில்லாக் குறை என் மனத்தைப் பெரிதும் வருத்தியது. அவ் வருத்தம் குறைய இன்றிரவே நாம் இருவரும் புத்திரப்பேற்றைக் குறித்துக் கனவுகண்டது வியப்பினும் வியப்பே. மாயா, இப்பொழுதுதான் கவனித்தேன். இன்னும் ஓர் அதிசயம் பார். பொழுதுவிடிய இன்னும் ஐந்தாறு நாழிகைகளுக்குமேல் செல்லவேண்டும். அதற்குள்ளாகவே நமது தோட்டத்து மரஞ்செடிகள் எல்லாம் மலர்ந்து விட்டாற்போல நறுமணம் வீசுகின்றன. கவனித்துப் பார். தெரிகிறதா?" என்றான் சுத்தோதனன்.

மாயாதேவி சிறிது கவனித்துவிட்டு, "ஆம், ஆம், நாதா. நானும் இப்பொழுதுதான் இதனைக் கவனித்தேன் இந்த நறுமணம் நமது தோட்டத்திலிருந்துதான் வருகிறது. மற்றோரதிசயம்: கூர்ந்து கவனியுங்கள் யாரோ நம் அரண்மனைக் கருகிருந்து யாழிசைப்பதுபோல ஓர் இன்னொலி என் செவிக் கெட்டுகிறது தங்களுக்கு அது கேட்கிறதா?" என்றாள்.

"கேட்கிறது, கேட்கிறது. யாழிசையா அது? அன்று. ஏதோ, இதற்குமுன் நாம் என்றும் கேட்டறியாத ஓர் இன்ப ஒலியாகவல்லவோ இருக்கிறது மாயா, இவையெல்லாம் நாம் அடையப்போகும் ஒரு பெரும்பேற்றிற்கு முற்குறிகளேயொழிய வேறல்ல. சந்திரனது நிலவொளிகூட இன்று ஒரு வகையான நூதன இன்ப ஒளியாயிருக்கிறது. வா, நிலா முற்றத்துக்குச் சென்று பேசிக்கொண்டிருப்போம்" என்று கூறிச் சுத்தோதனன் எழுந்தான்.

மாயாதேவியும் எழுந்தாள். இருவரும் நிலாமுற்றத்துக்குச் சென்றனர். சுத்தோதனன் தன் காதலிக்கு வான் விளங்கு மதியத்தைச் சுட்டிக்காட்டி, "காதலி, சந்திரனைப் பார். அதன் நிறமே இன்று ஒருவகையா யிருக்கிறதல்லவா?" என்றான்.

"ஆம், நாதா. வெண்மதியம் இன்று பொன்மயமாய்த் தோற்றுகிறது. ஏதோ இன்று ஓர் அரிய நன்னாளாகவே இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன்" என்றாள் மாயாதேவி.

"அதிலும் தடையா? இன்றைய நட்சத்திரம்கூட உத்திரட்டாதிபோலிருக்கிறது" என்றான் சுத்தோதனன்.

அப்பால் இருவரும் சிறிதுநேரம் வானத்து மதியத்தைப் பார்த்தவண்ணம் மகிழ்ச்சிமீதூர மௌனமாய் நின்றார்கள். பிறகு மாயாதேவி தன் காதலனை நோக்கி, "அரசே, நாம் கண்ட கனவு நற்கனவு என்னுமளவே நமக்குத் தெரிகிறது. கனநூலைக்கொண்டு நம் கனவின் பலன் இதுதான் என்று திட்டமா யறிதலும் கூடுமன்றோ?" என்று வினவினாள்.

"கூடும், கூடும். மகரிஷிகள் எழுதி வைத்துள்ள அரிய பெரிய நூல்களால் நாம் அரியக்கூடாததும் ஒன்றுளதோ? கணித சாஸ்திரத்தால் இப் பிரமாண்டத்தில் உள்ள அண்டங்கள் எத்துணை, அவை என்னென்ன நிலையில் உள்ளன, எவ் வடிவின, எவ்வளவின, அவை சுழலும் கதி என்ன, வேகமென்ன, ஒன்றுக்கொன்று எத்துணைத்தூரத்தில் உள்ளன என்று இப்பேர்ப்பட்டவற்றையெல்லாம் இம்மியும் பிசகாதறியலாம். சோதிட சாஸ்திரத்தால் அடுத்த விநாடி நாம் யாது செய்வோம், நமது முற்பிறப்பில் யாது செய்தோம், பிற்பிறப்பில் யாது செய்வோம் என்னும் இவை யாவும் அறியலாம். ஆயுள்வேதத்தால் உடற் கூறுகளையும், உடற்குறு நோய்களையும், அவற்றைத் தீர்த்தற்குரியவகைகளையும் நன்கறியலாம். இவ்வாறு, சிற்பசாஸ்திரம் அஸ்திரசாஸ்திரம் முதலிய பல சாஸ்திரங்கள் அவ்வத்துறையில் அறியக்கூடியவற்றையெல்லாம் சாங்கோபாங்கமாக அறிவிக்கின்றன. அவற்றுள் கனநூலும் ஒன்று. அது கொண்டு நாம் காணும் கனவுகளின் பலனைச் செவ்வையாய் அறியலாம்" என்றான் சுத்தோதனன்.

மாயாதேவி முகமலர்ந்து, "ஒவ்வொரு சாஸ்திரத்திலும் கரைகண்ட பண்டிதர்கள் நம் சமஸ்தானத்தில் உளரன்றே?" என்றாள்

"ஆம். கனநூலில் வல்லாரும் உளர். மாயா, உன் விருப்பத்தை அறிந்துகொண்டேன் எனக்கும் அந்த எண்ணமுண்டு. நாளையே நான் கனநூல் வல்லாரைக் கொண்டு நாம் கண்ட கனவின் பலனை நன்கறிந்து உனக்குச் சொல்கிறேன்" என்றான் சுத்தோதனன்.

"சந்தோஷம், அரசே. அதுதான் நான் விரும்பியது. மற்றொரு விண்ணப்பமும் உண்டு. அதாவது, நாம் கண்ட கனவின் பலன் நாம் எண்ணுமாறே நமக்குண்டாகப்போகும் புத்திரப்பேற்றைக் குறித்ததாயின், நாளைத்தினத்தைத் திருவிழாநாளாகக் கொண்டாடவேண்டும் ஆலயங்களிலெல்லாம், ஆராதனை முதலியன வைபவமாய் நடைபெறல்வேண்டும். இராசாங்க உத்தியோக சாலைகளெல்லாம் விடுமுறை பெறல் வேண்டும். எங்கும் முரசறைந்து நாளை விழாநாள் என்பதைப் பிரஜைகளுக்குத் தெரியப்படுத்தல்வேண்டும் நமது அரண்மனையில் பணி செய்வோர்க்கெல்லாம் பரிசளித்தல் வேண்டும். பள்ளிச் சிறுவர்க்குப் பண்ட பலகாரங்களும் விளையாட்டுக் கருவிகளும் கொடுப்பித்தல் வேண்டும். இன்னும் செய்யத்தக்க சிறப்புகளெல்லாம் செய்தல் வேண்டும்" என்றாள் மாயாதேவி.

அரசன் குறுநகைசெய்து, "உன் விருப்பப்படி யாவும் செய்விப்போம் புத்திரப்பேறு கிடைக்கும் என்ற செய்திக்கே இவ்வளவு செய்ய விரும்பும் நீ, புத்திரப்பேறு கிடைத்துவிட்டால் யாது செய்வையோ, அறியேன்" என்றான்.

"எனக்காக அல்ல, அரசே நமக்குப் புத்திரப்பேறு உண்டானால், நம்மினும் அதிகமாக மகிழ்பவர்கள் நமது பிரஜைகளே யன்றோ? அவர்கள் பொருட்டுத்தான் நான் இத்துணையும் செய்யச் சொல்கிறேன்" என்றாள் மாயா.

"உண்மைதான் இச் செய்தி கேட்டு மகிழாதவர் நம் நாட்டில் எவருமே யிரார் ஆனால், இச் செய்தி உன் தங்கைக்கு மட்டும், எரியும் நெருப்பில் நெய் சொரிந்ததுபோலிருக்கும்" என்று கூறிச் சுத்தோதனன் மாயாதேவியைக் கடைக்கண்ணால் நோக்கினான்.

மாயாதேவி சிறிது முகம் வாடி, "அப்படி நான் நினைக்க வில்லை. தங்கள் காதலைப் பெருததனால் அவள் ஒருவாறு இருக்கிறாளே யொழிய வேறன்று. தங்களுக்குப் புத்திரன் உண்டானால், அது அவளுக்கும் மகிழ்ச்சியையே விளைக்கும் யார் பெற்றால் என்ன? பெறுவது நானாயிருந்தால் வளர்ப்பது அவளா யிருக்கட்டுமே" என்றாள்.

"ஏதோ பார்ப்போம்" என்று கூறிவிட்டு மன்னன் பேச்சை மாற்றி, மாயாதேவிக்கு நில வொளியில் இன்பமாய் விளங் கிய இயற்கையி னழகைப்பற்றிக் கூறிக்கொண்டிருந்தான்.



## அதிகாரம்—4

## கனவின் பலன்

அரசன் கொலுக்கூடம் அங்கு நிகழ்தற்குரிய விஷயங்க ளின் அரும்பெருந் தன்மைக் கேற்றவாறு கம்பீர அமைப் பும் மிதமீறு அலங்காரங்களும் பொருந்தியிருந்தது. கொலுக் கூடத்தின் வெளியே வாயிற் கெதிரே போர்ச்சேவகர் இருவர் வாளும் கையுமாய் நின்று காவல்புரிந்தனர். வாயிலின் உட் புறத்தே கட்டியக்காரர் இருவர் தம்மினும் உயர்ந்த வெள்ளித தடி ஒவ்வொன்றை நிலத்தில் ஊன்றிக் கையிற் பற்றிய வண் ணம், பிரதிமைகள்போல நின்றனர்.

கிழக்கு நோக்கியிருநத அக் கொலுக் கூடத்தின் மேற் புறத்தில் அரசன் சிம்மாதனம் அமைக்கப்பட்டிருந்தது சிம்மாதனத்தின் இருபாரிசத்திலிருந்தும் தொடங்கி வாயில் வரையும் இரத்தினக் கம்பளங்கள் பரப்பப்பெற்ற கருங்காலி ஆசனங்கள் பல ஒழுங்குபடக் கிடநதன அவற்றின்மீது, பல்வேறு கலைகளை நிலைகண்டுணர்ந்த நிபுணர்களும் மந்திரத் தலைவர்களும் அமர்ந்திருந்தனர். அவர்கள் அனைவரும் வய தில் முதிர்ந்தவர்கள்; கல்விகேள்விகளிற் சிறந்தவர்கள்; அறி வில் உயர்ந்தவர்கள்;

'உற்றது கொண்டு மேல்வந்(து) உறுபொருள் உணரும் கோளார்;
மற்றது வினையின் வந்த தாயினும் மாற்ற லாற்றும்
பெற்றியர்; பிறப்பின் மேன்மைப் பெரியவர்; அறிய நூலும்
கற்றவர்; மான நோக்கிற் கவரிமா அனைய நீரார்.'

காவல் வீரரும் கட்டியக்காரரும் கலைவல்லாரும் மந்திரத் தலைவரும் அரசன் வருகையை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்திருந்தனர் கதிரவன் தோன்றி ஐந்தாறு நாழிகைகள் கடந்தன. எக்காள முழக்கம் பம் பம் மெனக் கேட்டது. உடனே அரசன் வருகையறிந்து காவல் வீரரும் கட்டியக்காரரும் முன்னையினும் மிக்க விழிப்புள்ளவராயினர். அமைச்சர்களும் கலைஞர்களும் தம் இருக்கைவிட்டெழுந்தனர்.

சிம்மாதனத்துக்கு வடபுறமாக, அ ர ச ன் வருகைக்கென்றே அமைக்கப்பட்ட ஒரு வாயிலின் வழியே சுத்தோதனன் கொலுக்கூடத்துள் நுழைந்தான். எக்காள ஒலி நின்றது. உடனே அமைச்சரும் கலைவாணரும் அ ர ச ன் சிரம் நோக்கித் தம் கரங்களை நீட்டி, "ராஜ ராஜ கம்பீர சுத்தோதன மகாராஜர் நீடு வாழ்க ! அவர் ஆட்சி அலைகடல் சூழும் புவனி முழுவதும் பரவி ஓங்குக ! சூரிய சந்திரர் திசைமாறினும். நெடுங்கடல் கரைகடந்தாலும், பெருமலை நிலைகுலைந்தாலும் நடுநெறிமாறாத அவர் செங்கோல் ஊழூழிதோறும் உலகைக் காப்பதாக ! மன்னர் பிரானுருக்கு மக்கட் செல்வமும் மற்றுமுள்ள செல்வங்களும் இனிதுற்றுப் பெருகுவனவாக ! வாழ்க, வாழ்க, வாழ்க ! சுத்தோதன மகாராஜர் வாழ்க !" என்று வாழ்த்தி ஆசீர்வதித்தனர். அப் பெரியோர் ஆசீர்வசனங்கள் யாவும் கூறி முடிக்கும் வரையில் மன்னன் சிம்மாதனத்துக்கருகே பணிவுடன் கரங்குவித்துத் தரைநோக்கித் தலைசாய்த்து நின்றான். பிறகு அவன் ஆனேறுபோலத் தலைநிமிர்ந்து சபையோரை யெல்லாம் நோக்கிவிட்டுச் சிம்மாதனத்தின்மீதேறி அமர்ந்தான். அமைச்சர் முதலியோரும் தத்தம் இருக்கையில் அமர்ந்தனர்.

பிறகு அமைச்சர் ஒவ்வொருவரும் தத்தம் நிர்வாகத்துக்குட்பட்ட ராஜ்யவிஷயங்களின் நிலையை அரசனுக் கறிவித்தனர். அரசன் அவைகளை யெல்லாம் கேட்டான பிறகு, கலைவாணருள் ஒருவராய் அமர்ந்திருந்த வாமனர் என்னும் கலைநூல் விற்பன்னரை நோக்கித் தானும் தன் பட்டத்தரசியும் முன்னுளிரவு கண்ட கனவுகளைக் கூறி "இவற்றின் பலன் யாதோ ? அதை அறிய விரும்புகின்றேன். கலைஞான

சிரேஷ்டரே, தயைபுரிந்து என் விருப்பத்தைப் பூர்த்திசெய் தருள வேண்டுகிறேன்" என்றான்.

வாமனர் முகமலர்ந்து அரசனை நோக்கி, "சுத்தோதன, இறைவன் திருவருள் நினக்குக் குறைவற எய்திவிட்டது. நினது புண்ணியம் பலித்துவிட்டது. நீ நெடுநாளாய்க் கொண்டிருந்த மனக்குறை இனி அகலும். காணற்கரிய கனவை நீயும் நின் தர்மபத்தினியும் கண்டிருக்கிறீர்கள். அதன் பலனாக நீவிர் இருவீரும் பெறுதற்கரிய பேற்றைப் பெறுவீர்கள். மகப்பேறில்லை யென்றல்லவா நீ மனம் வருந்தினை? அவ் வருத்தம் அகல, நீ ஓர் ஆண் மகவைப் பெறுவாய். அம் மகவு சாமானிய மகவன்று; இம் மகிதலத் திற் காணக்கிட்டா அற்புத மகவாய் இருக்கும். கனவிற் கண்ட தெய்வ விமானத்தின் 'ஜோதி பரவினாற்போல அம் மகவின் புகழ் பூவுலகெங்கும் பரவி அஞ்ஞான இருளை ஓட்டி அதர்மக் களையை வாட்டி உலகைப் புனிதப்படுத் தும். எங்கும் ஒளி வீசும் அறுகோண தாரகைபோல், அம் மகவு இவ்வுலகெங்கும் தன் ஆணை செலுத்தி, படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் அரசங்கம் ஆறுமுடைய அரசர்க்கெல்லாம அரசனாய் விளங்கும் இத்தகைய அருமருந்தன்ன திருமகவை, நின் காதல் மனைவி மாயாதேவி தெய்விகமாய்ப் பெற்று நினக்களிப்பாள். அத னால் உலகுய்யும். இதுவே நீயும் நின் பட்டத்தரசியும் கண்ட கனவுகளின் பலன்" என்றார்.

"ஆயின், யான் கிருதார்த்தனானேன். எல்லாம் தங்களை யொத்த பெரியோர்களின் ஆசீர்வசனப் பலனே" என்றான் சுத்தோதனன்.

சபையோர் அனைவரும் வாமனர் கூறிய கனாப்பலன் கேட்டுக் களிப்புற்று முகமலர்ந்து "சுபம்! சுபம்! சுபம்!" என்று கூறி அரசனை ஆசீர்வதித்தனர்.

வாமனர் மீண்டும் சுத்தோதனனை நோக்கி, "அரசே, நுண்ணிய அறிவாலும், விரிந்த கல்வியாலும், ஆழ்ந்த ஆராய்ச் சியாலும், முக்கால நிகழ்ச்சிகளையும் அறிதல் கூடும். சென் றதையும் நிகழ்வதையும் தெரிந்துரைத்தல் அவ்வளவு அரி தன்று. பின் வருவதை முன் உணர்ந்து உறுதிபடக் கூறு தலோ மிகவும் அரியது" என்றார்.

" ஆம், ஆம். அதுபற்றியே வருவ துரைப்பாரைப் போறி வாளர் என வையகம் புகழ்ந்து பாராட்டுகிறது" என்றான் சுத்தோதனன்.

வாமனர் புன்னகை செய்து, "உண்மைதான். யாம் நினக்கு அறிவுறுத்த விரும்புவது அஃதன்று. வருவதுரைப் பதில் உள்ள அருமை எத்தகையதென்று உணர்த்த விரும்பி னோம்" என்றனர்.

"ஆயின் அதனை உணர்த்தியருள்க" என்றனன் சுத் தோதனன்

"உணர்த்துகிறேன், கேள்" என்று வாமனர் கூறுவா ராயினர் : 'முச்சந்தியான ஓர் இடத்தில் செல்பவனைக்கண்டு அவன் அடிச்சுவட்டைப்பற்றி, 'இவ்வழியாய்த்தான் இவன் வந்திருக்கவேண்டும்' என்று சொல்லிவிடலாம். ஆனால் எவ்வழியாய் மேற்செல்வான் என்று திட்டமாய்க் கூற முடி யாது. கிளைத்துச் செல்லும் மூவழிகளில் ஒருவழியாய்ச் செல்வான், நான்காவது வழியில்லை என்னும் துணையுந் தான் திட்டமாய்ச் சொல்லக்கூடும் சோதிடப் பலன் கனுப்பலன் முதலியவைகளை அறிந்து கூறுவதிலும் இந்தக் கஷ்டம் உண்டு."

"ஆயின், தாங்கள் கூறிய கனுப்பலனில் ஏதும் ஐயம் உண்டோ?" என்று வினவினன் மன்னன்

"உண்டு. பலன் நற்பலன்தான். அம்மட்டில் ஐயம் இல்லை. நினக்குப் புத்திரப்பேறு உண்டாவது நிச்சயம். ஆனால், அப் புத்திரன் நிலவரசனாய் இருந்து தன் புகழை உலகெங்கும் பரப்பினும் பரப்புவன்; துறவரசனாய்த் திகழ்ந்து ஜகமெல்லாம் தன் அடி வணங்கத்தக்க அரும் பெரும் புகழை நிலை நாட்டினும் நாட்டுவன் இதுதான் ஐயம், வேறில்லை" என்றனர் வாமனர்.

இதைக் கேட்டதும் சுத்தோதனனது முகம் நகையிழந் தது. சபையோரிற் பலரும் வாட்டமுற்றனர். அது கண்டு வாமனர் அரசனை முகநோக்கி, "சுத்தோதன, ஏன் முக மலர்ச்சி குன்றினை? சபையோரிற் பலரும் நின்னைப்போலவே வாட்டங் கொண்டனர். ஏன்? நினக்குப் பிறக்கும் புதல் வன் துறவரசனாய்த் திகழினும் திகழ்வன் என்றுரைத்தோமே, அதற்கா?" என்றனர்.

"கலைஞானப்பெரியீர், மன்னித்தருள்க. புத்திரப்பேறு கிடைக்கும் எனத் தாங்கள் ஐயமறத் திருவாய்மலர்ந்தருளிய தால் யான் மகிழ்ச்சி பெரிதுற்றேன்.

'பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற'

என்றவாறு மக்கட்பேற்றிற் சிறந்த பேறு வேறில்லை.

'கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி.
மல்லார் புயத்தில் விளையாடும் மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு மனைவாழ்வின் இனிமை என்னும்?"

ஒன்றுமில்லை. ஆயினும், அத்தகைய அரிய மகப்பேற்றை விரும்புவது, குலவிருத்தி குறைவுறுவண்ணமே யன்றோ? வாழையடி வாழையாய் வம்சம் செழித்தோங்க வன்றோ? அக் கருத்து நிறைவேறுதற் கில்லாமல், பிறந்த மகன் துறந்து செல்வன் என்றால் அது வருத்தத்துக்கிடமாதல் அதிசயமன்றே!" என்றான் சுத்தோதனன்.

வாமனர் குறுநகை செய்து தலையசைத்து, "உண்மை. உண்மை. சுத்தோதன, நீ சொல்வதெல்லாம் உண்மை. ஒப்பினேம். நின் கருத்தின் வண்ணம் பார்த்தாலும் கவற்சி யுறுதற்கு இடமில்லையே. பிறக்கும் மகன் துறவே கொள்வான் என்று கூறினே மில்லையே. துறவு கொள்ளினும் கொள்வன், அரசு ஆளினும் ஆள்வன் என்றேம். இவ்விரண்டில் நினக்கு இனியதைத் தள்ளி இன்னாததைக் கொள்வானேன்? ஒப்பாததை எதிர் சென்று தழுவுகின்றனையே, ஏன்? மகப்பேறு கிட்டும் என்ற அளவில் மகிழ்ச்சியுற்றிருப்ப தன்றோ அறிவுடைமை?" என்றனர்

"ஆயின், தேவரீர் திருவுளப்படியே ஆகட்டும்" என்று சுத்தோதனன் வாமனர்க்குக் கூறிவிட்டுப் பிரதான மந்திரியை நோக்கி, "அமைச்ச, வாமன மகரிஷியார் கூறிய இச் சுபச் செய்தியை நம் பிரஜைகள் அனைவரும் அறிந்து மனம் பூரிக்க வேண்டும். ஆதலின், நாளைத்தினத்தை நம் நகர் முழுவதும் திருவிழா நாளாகக் கொண்டாடட்டும். கடவுளர்க்கு அபிஷேக ஆராதனை அலங்கார நிவேதனம், அந்தணர்க்குக் காணிக்கை, வறியோர்க்கு அன்னம், சிறுவர்க்குச் சிற்

றுண்டி, 'பசு முதலியவற்றுக்கு வாயுறை அளித்தும்; ஆல யம், அரண்மனை, பொதுஜனச் சாலைகள், கலாகூடங்கள், பிரதான வீதிகள் முதலியவற்றை மகரதோரணாதிகளால் அலங்கரித்தும்; தேவபஜனை, கணிகையர் நடனம், இன் னிசை நாடகம், சங்கீத காலக்ஷேபம் முதலியவை நடைபெறச் செய்தும்; இன்னும் பிரஜைகள் மனங்களிக்கத் தக்கவை களைச் செய்வித்தும் திருவிழாநாளைச் சிறப்பித்தல் வேண் டும்" என்றான்.

"சித்தப்படியே" என்று கூறி அமைச்சன் தலைதாழ்த் தினன்.

அவ்வளவோடு சபை கலைந்தது.

மறுநாள் கபிலையம்பதி, வானவர்பதியோ, வைகுந்தமோ, இந்திரபுரியோ என்னுமாறு, கண்கொண்டு பார்க்க முடியாத பேரழகும் பெரு வைபவமும் பெற்று விளங்கியது. எங்கே பார்த்தாலும் பூம்பந்தல்களும் மகரதோரணங்களுமாய் விளங் கின. ஆடல் ஒருபுறம், பாடல் ஒருபுறம், வேதமுழக் கொரு புறம், கீதமுழக் கொருபுறம், நடனம் ஒருபுறம், நாடகம் ஒருபுறம்! இப்படியே பார்த்த பார்த்த இடந்தோறும் பற் பல இன்ப விநோதங்கள் நிகழ்ந்துகொண்டிருந்தன. ஊரார் முகமெல்லாம் கரை கடந்த களிப்பால் அலர்ந்து விளங்கின. சிறுவர்கள் ஆடி ஓடிக் களித்தனர்; பெரியோர் பேசி உலவி மகிழ்ந்தனர்.

அன்று மாலை, சுத்தோதனன், தன் பிரஜைகள் விழாக் கொண்டாடிக் குதூஹலிப்பதைக் கண்டு களிக்க விரும்பி, இரதமேறி ஊர்வலம் வந்தான். அப்பொழுது ஊரார் எல் லாரும் ஒருங்கு திரண்டு, அரசன் தேரைச் சூழ்ந்து பே ரொலிபெழ வாழ்த்துரைகூறியும், பல்லாண்டிசைத்தும், உழுந்திடவும் இடம் இல்லை என்னும்படி நெருங்கிச் சென்றனர்.

'வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர்
கல்லினை யழித்துயர் கனகத் தோளினர்,
வல்லியின் மருங்கினர் மருங்கு மாப்பிடி
புல்லிய களிறெனை மைந்தர் போயினர்.'

'ஊடிய மனத்தினர் உருத நோக்கினர்
நீடிய உயிர்ப்பினர் நெரித்த நெற்றியர்
தோடவிழ் கோதையும் துறந்த கூந்தலர்
ஆடவர் உயிரென அருகு போயினர்.'

இவ்வாறு பிரஜைகள் சூழ்ந்து திரண்டு நெருங்கிச் செல்ல,

'மந்திர கீத வோதை வலம்புரி முழங்கு மோதை
அந்தண ராசி யோதை ஆர்த்தெழு முரசி னோதை
கந்துகொல் களிற்றி னோதை கடிகையர் கவிதை யோதை
இந்திர திருவன் செல்ல எழுந்தன திசைக ளெல்லாம்'

ஊரெங்கும் இங்ஙனம் கடல்போல ஆரவாரித்துத் திரண்டெழுந்து திருவிழாக் கொண்டாடிப் பெருங்களி கூர்ந்திருக்க, ஒருத்திமட்டும் அவ் வைபவங் காணவும் கேட்கவும் சகியாது மனமழன்று முகங்கரிந்து வருந்தினாள் அவள் யார்? மாயாதேவியின் தங்கை கௌதமியே.

தன் தமக்கையான மாயாதேவியிடம் மன்னன் பேரன்பு பூண்டுள்ளான் என்று அவள்பால் பொறாமைகொண்டு மனம் புழுங்கிய கௌதமி, மாயாதேவி மகப்பே றடையப் போகிறாள், அது காரணமாகவே திருநாள் கொண்டாடப் படுகிறது என்றறிந்தால் என்ன பாடு படாள்? வருந்திச் சேர்த்த பொருளையெல்லாம் பறிகொடுத்த உலோபி போலவும், அருந்தவஞ் செய்து பெற்ற ஒரு மகவை இழந்த மலடி போலவும் அவள் பெருந்துயருற்று வயிறெரிந்தாள்.

நகரில் நிகழும் வைபவங்களையும் தம் அரசன் ஊர்வலச் சிறப்பையும் காண்பதற்காக அரண்மனை ஏவலாளரில் ஆடவரெல்லாம் வெளியேறி வாயிற்புறத்திலும் மதிற்சுவர்மீதிலும் கூடிநின்றனர் : மகளிரெல்லாம் சாளரங்க ளருகிலும் உப்பரிகைகள்மீதும் சென்று கூடினர்.

முதல் உப்பரிகையின் நிலாமுற்றத்தில் ஒரு மணிப்பீடமிட்டு, அதில் மாயாதேவி அமர்ந்திருந்தாள். அவள் முகத்தில் கருணையும் மகிழ்ச்சியும் கலந்து சிறந்திருந்தன. தாதியரும் தோழியருமான சிற்றிடை மடவார் பலர் அவளைச் சூழ்ந்து நின்று, மகிழ்ச்சி பெருக, அவளோடு இன்னுரையாடியும், வீதியில் நடக்கும் விநோதங்களை அவளுக்குச் சுட்டிக் காட்டியும் குதூஹலித்தனர்.

இரண்டாவது உப்பரிகையின் நிலாமுற்றத்திலிருந்து பார்த்தால் நகரக் காட்சி நன்ருய்த் தெரியும் என்று சில மாதர் அங்குச் சென்று கூடியிருந்தனர் அவ்வுப்பரிகைக்குரிமை யுடைய கௌதமி அவர்களோ டில்லை உடம்பு குணமில்லை யென்று சயனக் கிருகத்திற் படுத்திருந்தாள் காமாக்ஷி என் னும் தாதி ஒருத்திமட்டும் அவளுடன் இருந்தாள். வீதியில் நிகழும் போராரவார நிகழ்ச்சிகளை ஒரு சிறிதும் அறியாதவர் கள்போல அவர்கள் இருவரும் வேறு ஏதேதோ விஷயங் களைப்பற்றி உரையாடிக்கொண்டிருந்தனர்

"எனக்கென்னவோ வரவர இந்த உலகவாழ்க்கையில் மிகுந்த வெறுப்புண்டாகிறது நஞ்சுண்டு இறந்தாவது இந் தப் பாழும கட்டையை ஒழித்துவிடலாம்போல் தோற்று கிறது" என்ருள் கௌதமி.

காமாக்ஷி மிகவும் பரிதாபமுற்றவள்போல, "ஏனம்மா அப்படி? தங்களுக் கென்ன குறை? ஏதோ பூர்வஜன்ம புண் ணியத்தால் ராஜகுடும்பத்திற் பிறந்தீர்கள்; ராஜகுடும்பத் தில் வாழ்க்கைப்பட்டீர்கள்—" என்று கூறிவருகையில் கௌதமி அவளை இடைமறித்து, "ஆ, வாழ்க்கைப்பட்டுத் தான் கெட்டேனே! நாயும் பேயும் நகைக்க நான் வாழ்க் கைப்பட்டு வாழ்கிற வாழ்வை நீ தான் மெச்சவேண்டும்! நீ தாதியாயிருந்தாலும் என்னைவிட எவ்வளவோ பாக்கிய சாலி" என்ருள்.

காமாக்ஷி புன்னகை செய்து, "என்ன அவ்வளவு சுலப மாய்ச் சொல்லிவிட்டீர்களே!" என்ருள்.

"வேறென்ன? உன் வாழ்க்கையைவிட என் வாழ்க்கை எந்த வகையிற் சிறநதது? யோசித்துப் பார் நான் பஞ்சணை யிற் படுக்கிறேன்; பட்டாடை உடுக்கிறேன்; வைரநகைகள் பூணுகிறேன்; அறுசுவை உணவு உண்ணுகிறேன். உனக்கு இவைகள் கிட்டுவது கஷ்டம் அவ்வளவுதானே! இவை களால் யாது பயன்? வெளியாடம்பரமே யொழிய வேரு ன்று மில்லையே. உள்ளத்தில் சமாதானம் இல்லாதபொழுது, உடம்பெல்லாம் வைரமாய்ப் பூண்டால் என்ன, பாலும் தேனும் தெவிட்ட உண்டா லென்ன? உனக்குள்ள மனத் திருப்தியில் ஒரு கால்பகுதியேனும் கிடைப்பதாயிருந்தால்

என் செல்வம் முழுவதையும் மனமாரக் கொடுத்துவிடு வேனே!" என்றாள் கௌதமி

காமாக்ஷி அதுகேட்டு மிக வருந்தியவள்போல முகம் வாடி, "தங்களுக்கு என்ன குறை? தாங்கள் எங்கே, நான் எங்கே! தங்களை என்னோடு ஒப்பிடுகிறீர்களே! தாங்கள் ராஜமகிஷியார்; நான கூலிவேலை செய்து பிழைக்கும் நித்திய தரித்திரி. தங்களுக்கும் எனக்கும் ஏணி வைத்துப் பார்த்தாலும் எட்டுமா?" என்றாள்.

கௌதமி புன்னகை செய்து, "செல்வத்தைப் பற்றிச் சொல்லவில்லையடி நான் மனத்திருப்தியைப் பொறுத்தமட்டில் சொல்லுகிறேன். உன்னுடைய தரித்திரக் கஷ்டம் மனோசஞ்சலம் எல்லாம், சமையற்காரன் தாமோதரனைப் பார்த்தால் மறைந்துவிடுகின்றன அல்லவா?" என்றாள்.

இதைக் கேட்டுக் காமாக்ஷி முகம் நாணி, "நன்றாயிருக்கிறதே. அவனுக்கும் எனக்கும் என்ன வந்தது?" என்றாள்.

"ஏனடி ஒன்றும் அறியாதவள் போலப் பசப்புகிறாய்? தாமோதரன் உன் அத்தை மகன்தானே?"

"ஆம். அதனால் என்ன?"

"அவனைத்தானே நீ கலியாணம் செய்துகொள்ளப் போகிறாய்?"

"அதென்னவோ? எனக்கென்ன தெரியும? என் தாய் தகப்பன்மார் யாருக்கு என்னை விவாகஞ்செய்து கொடுக்கிறார்களோ அவரை நான் விவாகஞ்செய்துகொள்ள வேண்டியவள்தானே?"

"போடி பசப்பி. நீ அவன்மேல் ஆசைவைத்திருப்பதும், அவன் உன்மேல் ஆசைவைத்திருப்பதும், நீங்கள் இருவரும் ஒருவருமில்லாத காலத்தில் இரகசியங்கள் பேசுவதும் எனக்குத் தெரியாதென்று நினைக்கிறாயோ? எல்லாம் எனக்குத் தெரியும். உங்கள் காதலைக் கண்டு நான் அடிக்கடி உள்ளுக்குள் சந்தோஷிப்பதுண்டு. எப்படியாவது நீங்கள் இருவரும் விவாகஞ்செய்துகொண்டு சந்தோஷமாய் வாழவேண்டும் என்பதுதான் எனது விருப்பம். பெண்ணாய்ப் பிறந்தவளுக்கு மனத்துக்குகந்த புருஷன் கிடைப்பதைப் பார்க்கிலும் சிறந்த பாக்கியம் வேறு என்னடி இருக்கிறது?" என்றாள் கௌதமி

"அது சரிதான். தாமோதரனும் நானும் மிகவும் நேசமாயிருக்கிறோம் என்பது உண்மைதான். நான் எது சொன்னாலும் அவன் தட்டமாட்டான். அவன் எது சொன்னாலும் நான் தட்டமாட்டேன் —" என்று காமாக்ஷி கூறக் கௌதமி "அப்படிப்பட்ட சம்பந்தம் கிடைப்பது தானே அருமை. அதனால்தான் நீ பாக்கியசாலி என்கிறேன்" என்றாள்.

அதற்குக் காமாக்ஷி "இன்னும் ஓம் என்கவில்லை, ஒரு மந்திரமும் சொல்லவில்லை. அதற்குள் எனக்குப் பாக்கிய சாலிப் பட்டம் என்ன வந்தது!" என்று சற்றுச் சலிப்புடன் கூறினாள்.

"ஏன், நீ அவனை விவாகம் செய்துகொள்வதற்குத் தடை ஒன்றுமில்லையே?"

"என்னைப் பொறுத்தமட்டில் தடையொன்றுமில்லை. அவனைப் பொறுத்தமட்டிலுங்கூடத் தடை ஒன்றுமில்லை. என் தந்தை ஒரு பேராசைப் பிணம். அவர்தான் எங்களுக்குக் குறுக்காய் நிற்கிறார்."

"ஏன்? அவருக்கென்ன ஆக்ஷேபனை?"

"ஆக்ஷேபனை என்ன, ஒன்றுமில்லை. பரிசப்பணம் நூறு வராகன் ரொக்கமாய் வைத்தால்தான் பெண்ணைக் கொடுப்பாராம் இந்த இழவுக்கு என்ன செய்கிறது? அவன் ஏழை. சமையல்வேலை செய்து ஜீவிப்பவன் அவன் நூறுவராகனுக்கு எங்கே போவான்? அரண்மனையில் வேலை பார்க்கும் ஒரு கௌரவம் போதாதா? பரிசப்பணம் வேண்டுமோம், பரிசப்பணம்!" என்று கடுத்த முகத்துடன் கூறினாள் காமாக்ஷி.

கௌதமி கொல்லென்று சிரித்து, "இதைத்தானா ஒரு பிரமாத இடையூறாய்ச் சொல்ல வந்தாய்! நூறு வராகனுக்கு இருநூறு வராகனாய் நான் தருகிறேன். தாமோதரனுக்கு நீ இதைச் சொல்லி விவாகத்துக்கு ஏற்பாடுசெய்" என்றாள்.

காமாக்ஷி முக மலர்ந்து, "இவ்வளவு உதார குணமுள்ள எஜமானி இருக்கும்பொழுது எனக்கு என்ன குறை? ஒன்றுமில்லை. தங்கள் தமக்கையாரும் எனக்கு எஜமானிதானே. அவர்கள் இவ்வளவு ஸௌஜந்யமாய் என்னோடு பேசக்கூட மாட்டார்கள்" என்றாள்.

"அவள் கிடக்கிறாள். அகம்பாவம்கொண்ட முண்டை. தமக்கையா அவள் எனக்கு! ஜன்ம சத்துருவல்லவா?"

"அப்படிப்பட்டவர்களுக்குத்தான் காலமாய் இருக்கிறது!"

"நன்றாய்ச் சொன்னாய். நம் கண்ணெதிரேயே, இதோ பார்: இவள் ஏதோ கனவு கண்டாளாம். அதன் பலனாய்ப் பிள்ளை பிறக்கப்போகிறதாம் அதற்காக எவ்வளவு ஆர்ப்பாட்டம்! ஊர் அல்லோல கல்லோலப் படுகிறதே! எங்காவது உண்டா இந்த அநியாயம்! கனவுக்கு இவ்வளவு களியாட்டம் என்றால் கேட்டவர்கள் சிரிக்கமாட்டார்களா! ஆனாலும், இந்த மாயாதேவி தூவிய மாயப்பொடியில், அரசனுக்குக் கண்ணும் இருண்டு போயிற்று, அறிவும் அழிந்து போயிற்று! கனவுதான் உண்மையோ என்னவோ, யார் அறிவார்! இன்றைக் கிருப்பாரை நாளைக்குக் காணோம். இந்த வாழ்வில் இவ்வளவு நிச்சயமா?" என்று சுடச்சுடச் சொற்களைக் கொட்டினாள் கௌதமி

அப்பொழுது நிலாமுற்றத்தில் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மாதர்கள் வீதியில் நிகழ்ந்த விநோதம் எதையோ கண்டு உள்ளடக்கமுடியா மகிழ்ச்சியால் கைகொட்டிக் கொல்லென்று நகைத்தார்கள். அச் சத்தம் கௌதமிக்கு எட்டியது அவள் காமாக்ஷியை நோக்கி, "இதென்னடி, இந்த வேலையற்ற சிறுக்கிகள் வேடிக்கை பார்ப்பதாக இங்கு வந்து கூடிக்கொண்டு கொஞ்சமேனும் மட்டு மரியாதையின்றி கெக்கலி கொட்டுகிறார்களே. எனக்குத் தலையை உடைக்கிறது. அவர்களைக் கீழேபோகச் சொல்லிவிட்டு இங்கு வா. உன்னோடு சில இரகசியங்கள் பேசவேண்டும்" என்றாள்.

உடனே காமாக்ஷி எழுந்து சென்று நிலாமுற்றத்திற் கூடியிருந்த மகளிரை நோக்கி "அம்மைமீர், இளைய ராணியார் தலைநோயால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள் நீங்கள் இங்கிருந்து இரைச்சலிடுவது சரியன்று. கீழ்மாடியிலிருந்து வேடிக்கை பாருங்கள். போங்கள்" என்றாள்.

அதைக் கேட்டு அந் நங்கையர் அனைவரும் திகைத்து ஒருவரை யொருவர் பார்த்துக் குறிப்புரை யாடினார்கள்.

"யோசனை என்னடி? போகச் சொன்னாற் போகவேண்டியதுதானே, வாருங்கள் போகலாம்" என்றாள் ஒருத்தி.

"நாம் இங்கே நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்ப தால், அங்கே படுத்திருக்கும் ராணியார்க்குத் தலைவலி அதிக மாகிறதாமே, இதென்னடி அதிசயமாயிருக்கிறது!" என்றாள் மற்றொருத்தி.

"ஏனடி அம்மா, ராணியார் உத்தரவோ, உன் உத்தர வோ?" என்று காமாக்ஷியை நோக்கிக் கேட்டாள் வே றொருத்தி,

"வம்புரை ஏன் அம்மைமார்களே, சொல்லவேண்டிய தைச் சொல்லிவிட்டேன். உங்கள் இஷ்டம்போற் செய்யுங் கள்" என்றாள் காமாக்ஷி.

அது கேட்டு ஒருத்தி மற்றவர்களை நோக்கி, காமாக்ஷி யைக் கடைக்கண்ணாற் சுட்டி, "பானையிற் பக்கிருந்தால் தான் கூடத்திற் குறுணித்தெய்வம் கூத்தாடும் நமக்கேன் இந்த விசாரணை யெல்லாம். வேடிக்கை பார்க்க வேறிடம் இல்லையா, என்ன! வாருங்களடி போகலாம்" என்று சொல்லி முனிவு கொண்டவள் போலச் சற்று விரைவாகவே முன் நடந்தாள். அவளைத் தொடர்ந்து மற்ற மாதர்களும் போய் விட்டார்கள்.

பிறகு காமாக்ஷி கௌதமியிடம் சென்றாள்.



அதிகாரம்—5

## கொடிய சூழ்ச்சியும் அதிசய மீட்சியும்

திரும்பி வந்த காமாக்ஷியை நோக்கிக் கௌதமி "சிறுக்கிகள் தொலைந்தார்களா?" என்று கேட்டாள்.

"தொலைந்தார்கள்" என்றாள் காமாக்ஷி.

"சரி, நீ போய் வாயிற் கதவைத் தாளிட்டு வந்துவிடு. நாம் முக்கியமான விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக் கையில், யாராவது வந்துதொலைவார்கள்" என்று கௌதமி கூற, அதற்கிசைந்து சென்று, வாயிற் கதவைத் தாளிட்டு வந்து, கௌதமிக்கெதிரே, தலைமாட்டருகே, ஒரு மரப்பீடத் தில் அமர்ந்தாள் காமாக்ஷி.

கௌதமி—"காமாக்ஷி, என்ன காரணமோ தெரியவில்லை, என்னையும் அறியாமல் எனக்கு உன்மீது ஒருவகை அன்பு

ஏற்பட்டிருக்கிறது ; உன்னிடத்தில் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டாய்விட்டது."

காமாக்ஷி—"ஆனால், நான் புண்ணியசாலிதான். என்னிடம் தாங்கள் வைத்துள்ள அன்பும் நம்பிக்கையும் வீண் போகா."

கௌதமி — "அவ்வளவுதான் நான் வேண்டுவது. 'கொண்டவன் தூற்றினால் கூறையும் தூற்றும்' என்பார்கள். அந்தப்படி, என் கணவர், மாயாதேவியின் வஞ்சனையால், என்னை அலக்ஷியம் செய்திருக்கிறதைக்கண்டு, அரண்மனைத் தாதியரும் ஏவலரும்கூட என்னை அலக்ஷியமாய்க் கருதியிருக்கிறார்கள்."

காமாக்ஷி—"அவர்களில் ஒருத்தியாக என்னைக் கருதிவிடாதீர்கள். தங்கள் பொருட்டு என் உயிரைக் கொடுக்க நேர்ந்தாலும் கொடுக்கச் சித்தமாய் இருக்கிறேன்."

கௌதமி—"ஆம், எனக்குத் தெரியும். நீ சொல்லவேண்டியதில்லை அதனால்தான் உன்மீது எனக்கு அவ்வளவு பற்றும் நம்பிக்கையும் உண்டாயின. அதனால்தான் பிறர் அறியக்கூடாத என் அந்தரங்க எண்ணங்களை உனக்குக் கூறத் துணிந்தேன்."

காமாக்ஷி—"என் அத்தை மகன் தாமோதரன் கூடத் தங்களிடம் மிகவும் பயபக்தியுடையவன். தாங்கள் அடிக்கடி முகம்வாடியிருப்பதைப்பற்றி அவன் மிகவும் கவலையோடு என்னை விசாரிப்பான்."

கௌதமி—"ஆமாம். அவனும் நல்லவன்தான். அது தெரிந்துதான் அவனை நீ விவாகஞ் செய்து கொள்வதற்கு நான் உதவிசெய்ய ஒப்பினேன். நீ அறிந்தமட்டில் அவனை நாம் நம்புவதிற் குற்றமில்லையே ?"

காமாக்ஷி—"சற்றும் இல்லை. அவனை நாம் முற்றும் நம்பலாம். அவனால் தங்களுக்கு ஏதாவது காரியம் ஆகக்கூடுமானால், சொல்லுங்கள். கொஞ்சமும் யோசிக்கவேண்டாம்."

கௌதமி—"காரியம் என்ன ? உன்னால் ஆகக்கூடியதுதான். அப்படி முடியாவிட்டால் அவன் உதவியை நாடலாம்."

காமாக்ஷி — "அதற்கென்ன, தாங்கள் வாய்விட்டுச் சொல்லிவிட்டால், எப்படியாவது நான் அதை நிறைவேற்ற வழிதேடுகிறேன். தயவுசெய்து தங்கள் கருத்தைச் சொல்லி யருளுங்கள்."

கௌதமி—"சொல்கிறேன். ஆனால் ஒன்று. நான் சொல்லப்போவது மிகவும் இரகசியமான விஷயம். எக் காரணத் தாலும் அது வெளிப்படக்கூடாது."

காமாக்ஷி—"அதற்கு நான் உத்தரவாதம். உயிர் போனாலும் விஷயம் வெளிப்படாது. தாங்கள் கூசாமற் கூறுங்கள்"

கௌதமி—"எனக்கு உலகவாழ்க்கை வேம்பாய் விட்டது இந்த உயிரை வைத்திருப்பது பெரும் பாரமாய் இருக்கிறது. எவ்வகையிலாவது இந்தப் பாழும் உயிர்ச் சுமையைத் தொலைத்துவிட வேண்டும் என்ற எண்ணம் சில நாட்களாய் என் மனத்தில் வேரூன்றியிருக்கிறது."

காமாக்ஷி—"அவ்விதமான எண்ணங்களுக்கு இடங் கொடுக்காதீர்கள். எவ்வளவு உயர்ந்த பதவியில் உள்ளவர் களுக்கும் ஒரொரு காலத்தில் பொறுக்கமுடியாத சில மனக் குறைகள் உண்டாவது சகஜந்தான் 'அதற்காக வாழ்க்கை யை வெறுத்துவிடலாமா? 'வண்டி ஓடத்தில் ஏறும், ஓடம் வண்டியில் ஏறும்.' தங்கள் மனக்குறை எப்பொழுதும அகலாதா, என்ன? தங்கள் தபக்கையார்க்கு இப்பொழுது செல்லும் செல்வாக்கு எப்பொழுதுமே செல்லுமா, என்ன?"

கௌதமி—"காமாக்ஷி, நீ செய்யும் புராணப் பிரசங்கம் என் செவியில் ஏறாது அதற்குக் காலம் கடந்துபோய் விட்டது பொறுமைக்கும் ஓர் அளவுண்டு எனது பொறு மை அவ் வளவை மீறிவிட்டது இனி யார் என்ன தடுத் தாலும், யான் துணிந்திறங்கிய துறையைத் துறந்து மீளேன்."

காமாக்ஷி—"அத் துறை யாதோ?"

கௌதமி—"அதைச் சொல்லத்தான் உன்னைத் தனித் திருக்கச் செய்தேன். அதன்பொருட்டுத்தான் நான் உன்னை என் அந்தரங்கத் துணையாகக்கொண்டேன். அதை நான் கூறுவதற்குள் நீ ஏதேதோ கலைஞானம் பேசத் தொடங்கிவிட்டாய்."

காமாக்ஷி—"இல்லை அம்மா பேசியது தவறுனால் மன்னியுங்கள். இனி, யான் யாதும் பேசேன். தங்கள் உள்ளக் கருத்தை உரைத்தருளுங்கள்."

கௌதமி—"உயிரின் அருமையை யான் அறியாதவள் அல்லள். உயிர் அருமையுடைய தாகுலும் அதனினும் அருமை உடையது மானம். ஆதலால், மானங்கெட்டு உயிர் வாழ்தலினும், உயிரை விட்டு மானத்தைக் காப்பாற்றுதல் சிறந்த தல்லவா? 'மானமழிந்தபின் வாழாமை முன்னினிதே' என்பர் ஆன்றோரும். மாயாதேவியால் யான் இது வரையில் அடைந்த அவமானம் போதும். நாயும் பேயும் சிரிக்க வாழ்ந்திருப்பதைவிட இறந்தொழிவது மேல். ஆகையால், நீ எனக்குச் செய்யக்கூடிய பெரிய உபகாரம், அவதியுறாமல், ஆவி துடியாமல், இரண்டாம்பேர் அறியாமல், ஈனம் அடையாமல் உயிர்விடுவதற்கு ஏதேனும் ஒரு சூழ்ச்சி சொல்லித் துணைசெய்வதேயாம்."

காமாக்ஷி—"அம்மா, அடியாளைச் சோதிக்கவோ கர்ணகடூரமான இக் கட்டளையை இடுகிறீர்கள்!"

கௌதமி—"அந்த வீண்பேச்செல்லாம் வேண்டா இந்த உபகாரம் செய்ய உன்னால் முடியுமா முடியாதா? இரண்டில் ஒன்று சொல்லிவிடு"

காமாக்ஷி—"உபகாரமா இது! உயிருக்கு உயிரான ஒருவர் உயிரைப் போக்குவது நல்ல உபகாரம்! கோடி வருவதானாலும் நான் அதற்கு உடன்படமாட்டேன்."

கௌதமி—"ஆனால் சரி. இனி உன் தயவு எனக்கு வேண்டியதில்லை. எழுந்து போ உண்மை உடையவள் என நான் நம்பியிருந்த நீயும் என்னைக் கைவிட்டு விட்டாய். இனித் தெய்வந்தான் எனக்குத் துணை. மனம் உண்டானால் வழி உண்டாகும். எவ் வழியிலாவது நான் என் எண்ணத்தை ஈடேற்றிக்கொள்கிறேன். நீ போ.

'ஆவாரை யாரே அழிப்பார்? அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்?'

உன் மனவியல்பை அறியாமல் நான் மதிகெட்டு உன்னிடம் கூறிவிட்ட இந்த என் அந்தரங்கத்தைமட்டும் தயவு செய்து வெளியிடாதே. அதுவே நீ எனக்குச் செய்யும் ஒரு பெரிய உபகாரமாகும். போ."

காமாக்ஷி—"அம்மா, நான் போகவும் மாட்டேன்; உங்கள் அந்தரங்கத்தை வெளியிடவும் மாட்டேன்; அது நிறைவேறவும் விடமாட்டேன்."

கௌதமி—"உடன் பிறந்த தமக்கைதான் எனக்குச் சத்துருவானாள். நீ அவளினும் கொடிய சத்துருவாகாதே. எழுந்து போ."

காமாக்ஷி—"பொறுங்கள். நான் சத்துருவா மித்துருவா என்பது போகப் போக விளங்கும். மானமழிந்து உயிர் வாழக்கூடாதென்பதுதானே தங்கள் கருத்து?"

கௌதமி—"ஆம."

காமாக்ஷி—"மானம் அழியாமல் உயிர்வாழக்கூடுமானால் வாழலாமன்றோ?"

கௌதமி—"வாழலாம்."

காமாக்ஷி—"தங்கள் மானம் அழிவதற்குக் காரணரா யிருப்பவர் யார்? தங்கள் தமக்கைதானே?"

கௌதமி—"ஆம்"

காமாக்ஷி—"தங்கள் உயிரைப் போக்கித் தங்கள் தமக்கையாரின் அகம்பாவத்தை அதிகமாக்குவதை விடத் தங்கள் தமக்கையார் உயிரைப்போக்கித் தங்கள் மானத்தை நிலைநிறுத்தினால் ஆகாதோ?"

கௌதமி—"அடி, அடி. என்ன இப்படி முன்பின் யோசனையில்லாமற் பேசுகிறாயே! யார் காதிலாவது விழப் போகிறது! நெருங்கி வந்து மெதுவாய்ப் பேசு. என் மீதுள்ள அபிமானத்தால் நீ இப்படிச் சொல்லத் துணிந் தாய். அது எனக்குத் தெரிகிறது. ஆனால் நான் அதற்குச் சம்மதியேன். முற்பிறப்பில் என்ன பாவம் செய்தேனோ, இப்பிறப்பில் இவ்வாறுனேன்! இப்பிறப்பிலுமா பாவத்துக் காளாகவேண்டும்? மேலும் என்னவானாலும் அவள் உடன் பிறந்தவளாய்விட்டாள். அவளைக் கொன்று நான் வாழ் வதைவிட, இறப்பது சிறப்பு. அவளே வாழட்டும், நான் பழிக்காளாகாமல் ஒழிந்தால் போதும்."

காமாக்ஷி—"இதென்ன நியாயமோ நான் அறியேன். பழியாவது, பாவமாவது! தன்னைக் கொல்லவந்த பசுவையும் கொல்லலாம் என்பது தருமசாஸ்திரமல்லவா? உடன்பிறந் தாளென்று நீங்கள் சொல்கிறீர்கள். அந்த உடன்பிறந்தாள்

தங்களை அவ்வாறு கருதவில்லையே! தங்களைக் கொல்லாமற் கொல்ல வகை தேடுகிறுளே"

கௌதமி—"உண்மைதான் இருந்தாலும்.—"

காமாக்ஷி—"இருந்தாலும் என்ன? பாம்பைக் கொல்வதும், பசுவைக் காப்பாற்றுவதுமே தருமம். பசுவைக் கொன்று பாம்பைப் போஷிப்பது அறிவீனமும் அதர்மமு மாகவன்றே முடியும்! தங்கள் தமக்கையார் ஒழிந்து தாங்கள் இருந்தால், அரசர் உள்ளம் எப்படியாவது தங்கள் புறமாய்த் திரும்பும் அதனுல், தங்கள் தமக்கையார்க்கு இப்பொழுதுள்ள செல்வாக்கு இனித் தங்களுக்கு உண்டாய் விடும். அதனுல், என்னைப்போன்ற ஏழை எளியவர்களுக்கு எவ்வளவோ நன்மை ஏற்படும். தங்கள் தமக்கையார் தமக்குள்ள செல்வாக்கால் யாருக்கு என்ன நன்மை செய்கிருர்கள்?"

கௌதமி—"அதுவா கேள்வி!"

காமாக்ஷி—"வேறென்ன? 'எட்டி பழுத்தென்ன ஈயார் இருந்தென்ன'?"

கௌதமி—"நீ சொல்வது நியாயந்தான். இருந்தாலும் என் மனம் ஒப்பவில்லை."

காமாக்ஷி—"அம்மா, செல்வாக்கடைந்தால் பலருக்குப் பல நன்மைகளைச் செய்யக் கூடிய தாங்கள், அந்தச் செல்வாக்கை அடைய வழியிருந்தும் அடைய முயற்சி செய்யாதிருப்பது பெரும் பாவம்"

கௌதமி—"உண்மைதான். ஆனுல், நீ சொல்லும் வழியும் பாவ வழியாய்த்தானே இருக்கிறது."

காமாக்ஷி—"முள்ளைக் கொண்டு முள்ளை எடுப்பது போலப் பாவத்தைச் செய்து பாவத்தைத் தீர்ப்பதிற் குற்றமென்ன? வேண்டுமானுல், அந்தப் பாவத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன். எனக்குத் தாங்கள் உத்தரவுகொடுங்கள், போதும். நான் விஷயத்தை எப்படியாவது முடித்துவிடுகிறேன்."

கௌதமி—"அகப்பட்டுக்கொண்டால் உன்பாடு ஆபத்தாய் முடியுமே?"

காமாக்ஷி—"அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம். காரியம் நிறைவேறிய பிறகு என் சமர்த்தை அறிவீர்கள்.

அப்படித் தற்செயலாய் அகப்பட்டுக் கொண்டாலும் ஆபத்து எனக்குத் தானே அதற்கு நான் அஞ்சவில்லை."

கௌதமி—"இவ்வளவு தைரியசாலியான நீ எனக்குத் துணையாய்க் கிடைத்தது என் அதிர்ஷ்டந்தான். ஏதோ அசந்தர்ப்பத்தால், உன் சூழ்ச்சி தவறுமானால், எல்லாம் வெளிப்பட்டுவிடுமே. பிறகு என் நிலை இன்னுங் கேடாக வல்லவோ முடியும்! அதற்குத்தான் யோசிக்கிறேன்."

காமாக்ஷி—"தங்கள் நிலைக்கு என்ன கெடுதல் வரக் கூடும்? நான் அகப்பட்டுக்கொண்டால் தங்களைக் காட்டிக் கொடுத்துவிடுவேன் என்று அஞ்சுகிறீர்களா?"

கௌதமி—"இல்லை—"

காமாக்ஷி—"கனவிலும் அந்த எண்ணம் வேண்டாம். தலை போகிறதாய் இருக்கட்டுமே, தங்களைக் காட்டிக்கொடுப் பேனோ? அப்புறம் என் யோக்கியதை என்ன? அவ்வளவு கேவலமாகத் தாங்கள் என்னைக் கருதிவிடலாமா?"

கௌதமி—"ஆனால் சரி காமாக்ஷி, உன் கருத்துப்படி செய்வதைச் செய். நடக்கிறது நடக்கட்டும். விஷயம் மட்டும் பரமரகசியமா யிருக்கவேண்டும் தாமோதரன் உதவியை நாடினாலும், விஷயம் எனக்குச் சிறிதும் சம்பந்த மில்லாதது போல் இருக்கட்டும்."

காமாக்ஷி—"அதெல்லாம் எனக்குத் தெரியும். தாங்கள் எதைப்பற்றியும் கவலைப்படவேண்டாம். என் வேண்டுகோ ளுக்கிரங்கி இவ்வளவுதூரம் ஒப்பினீர்களே, அதுவேபோதும். மற்றவைகளை நான் பார்த்துக்கொள்கிறேன்"

கௌதமி—"சரி, இந்தப் பேச்சை இதோடு விடு வேறு விஷயங்கள் எவைகளைப் பற்றியாவது பேசலாம்."

காமாக்ஷி—"வேறு என்ன விஷயங்களைப் பற்றிப் பேசு வது? பேசிக் காலங்கழிக்க இதுவா நேரம்? முக்கியமான ஒரு காரியத்தைக் கையில் வைத்துக் கொண்டு வீண்பேச்சில் காலங்கழிப்பவள் நானல்ல.

> 'மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண்துஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்;—செவ்வி
> அருமையும் பாரார்; அவமதிப்புங் கொள்ளார்:
> கருமமே கண்ணாயி னார்.'

என்பதை அறியீர்களா ? நான் செய்யவேண்டிய முயற்சிகளைச் செய்யப் போகிறேன். உத்தரவு கொடுங்கள்."

கௌதமி—" ஆனால் சரி, போய்வா. திரும்பவும் நான் உன்னைப் பார்ப்ப தெப்போது ?"

காமாக்ஷி — (சிறிது யோசித்து,) " எப்படியும் நமது காரியம் கைகூட இரவு பத்து நாழிகைக்குமேல் ஆகும். அதற்குமேல் இங்கு வருவது சரியன்று. நான் பொறிவைக்க ஏற்பாடு செய்துவிட்டு வீட்டுக்குப் போய்விடுகிறேன். பொறியில் எலி அகப்பட்டதும் அகப்படாததும் பொழுது விடிந்தால் தெரிகிறது. விடிய இரண்டு நாழிகைக்கெல்லாம் நான் தங்களை வந்து பார்க்கிறேன்."

கௌதமி—" சரி செய். போய்வா."

காமாக்ஷி—(சிரித்துக்கொண்டு) " தங்கள் தமக்கையார் கனவு கண்டதற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறார்களே. தங்கள் நனவு முற்றினால் தாங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் ?"

கௌதமி — (புன்னகை செய்து) " காரியம் ஆகட்டும். பிறகு பார்த்துக்கொள்வோம்."

காமாக்ஷி — " எது செய்தாலும் செய்யாவிட்டாலும் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைதது மோதகம் படைப்பதாக வேண்டியிருக்கிறேன், அதைச் செய்து விடுங்கள்."

கௌதமி—" பிள்ளையார் பிரார்த்தனையைச் செலுத்தத் தானா பின் வாங்குவேன்! நேர்நததற்கு நாலுமடங்காய்ச் செய்துவிடுவோம், போய் வா நேரமாகிறது."

" ஆம்மாம், போய் வருகிறேன். தாங்கள் கவலையற்று நித்திரை செய்யுங்கள்" என்று கூறிக் காமாக்ஷி சென்றுவிட்டாள்.

கௌதமிக்கு ஒவ்வொரு விநாடியும் ஒவ்வொரு நாழிகையாகக் கழிநதது. ஊராருக்கோ ஒரு நாழிகை ஒரு விநாடியாகப் பறந்தது. சாதாரணமாய் அஸ்தமித்து ஏழெட்டு நாழிகைகளுக்கெல்லாம் அடங்கி ஒடுங்கும் கபிலையம்பதி அன்றைத்தினம் பதினைந்து நாழிகைக்குமேல்தான் அமர்ந்தொடுங்கியது. அப்பால், நாளெல்லாம் ஆரவாரித்துக் கொண்டிருந்த அந் நகர், அலை ஓய்ந்த கடல் போல ஓய்வுற்றுக் கிடந்தது. நகரம் முற்றும் ஆனந்த லக்ஷ்மி நடனஞ் செய்து

விட்டுப் போன அரங்கம்போலத் தோற்றியது. சிந்திய சந்தனச் சாந்தும், சிதறிய மென்மலர்த் திரளும், கொட்டுண்ட கற்கண்டுப் பொடியும், மிதியுண்ட இன்சுவைக் கனிகளும், அந்தணர் இறைத்த மங்கல அரிசியும், மகளிர் தூவிய வாசப் பொடியும் கலந்து சிதைந்து எங்கும பரவி மிகுந்து கிடந்தன. எல்லாவற்றையும கண்டு இன்ப நகை செய்யும் விண்ணவன் போல, வெண்மதியம் தண் கதிர் பரப்பி நிலவொளி வீசியது. ஆடி அலுத்த நிலமகளுக்குக் களையாற விசிறுவது போலத் தென்றற்காற்று மெல்லெனத் தவழ்நதது என்றும் ஒரு படித்தாய்ச் செல்லும் காலம் விநாடி விநாடியாய்க் கடந்து சென்றது.

நிலம் தெளிந்தது உறக்கம் நீங்கியும் மயக்கம் தெளியாததுபோல, இருள் ஒழிந்தும் ஒளி விளங்காது மங்கலுற்றிருந்தது. முன்னாள் இரவு காலந்தாழ்த்துக் கண் துயின்றமையால், இந்நாட் காலை நகர மாந்தர் இன்னும் நித்திரை நீங்கி எழவில்லை காக்கைகள் கரைந்தன. கோழிகள் கூவின வேறு சத்தம் எதுவுமின்றி எங்கும் அமைதி நிறைந்திருந்தது. அரண்மனைத் தோட்டத்திலும், ஆலய நந்தவனங்களிலும், சிங்காரச் சோலைகளிலும், நெடுமரத் தோப்புகளிலும் முகையவிழ்நத புதுமலர்கள் சூரிய பகவானுக்குத் தூபம் இடுவதுபோல வாசம் எழுப்பின. எழுகின்ற கதிரவனுக்கு இடுகின்ற பொற்பீடம் போலக் கீழ்வானம் பொன் மயமாய்த் திகழ்ந்தது.

அந்த அதிகாலை வேளையில், அக்கமும் பக்கமும், முன்னும் பின்னும், திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, களவாடிய கள்ளிபோல, அஞ்சி அஞ்சி, அரண்மனையை நாடி நடந்தாள் ஒரு பெண்மகள். அரண்மனை வாயிலின் நெடுங் கதவு சாத்தப்பட்டிருநதது. அது கண்டு அப் பெண்மகள் பின்னிடைந்தாள் இல்லை; பழக்கமுற்றவள் போலத் திட்டிவாசற் கதவைத் திறந்துகொண்டு உட்சென்றாள் யாரோ வருவதறிந்த வாயிற் காவலன் "யாது ?" என்று அதட்டிக் கேட்டுக் கைவிளக்கை எடுத்து அவள் முகத்தெதிரே காட்டி அவளை உற்று நோக்கினான். உடனே அவளை இன்னாளென்று அறிந்துகொண்ட காவலன், விளக்கை எடுத்த

விடத்தில் வைத்துவிட்டுப் புன்னகை செய்து, "ஓ, நீயா! எது இவ்வளவு கருக்கலில் வந்துவிட்டாய்?" என்று கேட்டுக் கொண்டே தன் இருக்கையில் அமர்ந்தான் அவன் கேள்விக்கு விடையொன்றும் சொல்லாமல், ஒரு வெள்ளைச் சிரிப்புச் சிரித்துவிட்டு, அப் பெண்மகள் மேல் நடந்து சென்று, தோட்டத்தைச் சுற்றி அரண்மனைப் பின்கட்டை அடைந்தாள். அங்கே ஏவலாளர்க்குரிய அறைகள் பல வரிசையாய் இருந்தன. கள்ளிபோற் சென்ற கன்னி, அவ்வறைகளில் குறிப்பாய் ஓர் அறையண்டை சென்று நின்று, மெல்லக் கதவைத் தட்டினாள். கதவு தாழ்க்கோலிடப் பெறாதிருந்ததால் தானாய்த் திறந்துகொண்டது. உடனே அப் பெண்மகள் உட்சென்று, அங்கு மங்கலாய் எரிந்துகொண்டிருந்த ஒரு விளக்கைத் தூண்டி விட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

ஆ, அப்பொழுது அவள் கண்கள் கண்ட காட்சியை என்னென்பது! சட்டுருத் திடகாத்திர தேகமுடைய ஆண்மகன் ஒருவன், விழித்த கண் இமையாமல், கோரமுகத்துடன், உயிர்ப்பற்ற கட்டையாய்க் கிடந்தான். அக் கோரக் காட்சியைக் கண்டு அப் பெண்மகள் நடுங்கினாள் பிறகு மெல்ல அவனிடம் சென்று அவன் உடம்பைத் தொட்டுப் பார்த்தாள். உடம்பு பனிக்கட்டிபோற் சில்லென்றிருந்தது. அவள் திடுக்கிட்டு, வைத்த கையை வெடுக்கென்று அப்பால் எடுத்துக்கொண்டு, அவன் முகத்தை உற்றுப் பார்த்தாள். அவள் உடம்பு சிலிர்த்தது; பயத்தால் முகம் வேறுபட்டது. தன் உயிர் தன்னைவிட்டு நழுவுவது போல ஓர் உணர்ச்சி அவளுக்குத் தோன்றியது. அவளது கால்கைகள் அசைவற்று மரம்போலாயின. சுமார் ஐந்து நிமிஷநேரம் அவளும் ஒரு பிணம்போல உயிர்ப்பொடுங்கிச் செயலடங்கி விழித்தகண் விழித்தபடியே அவனருகே முழங்காலிட்டு உட்கார்ந்திருந்தாள்

அதற்குமேல் அவள் ஒரு பெருமூச்சுவிட்டாள். அவள் கண்கள் இமைத்தன. அவள் முகத்தில் வியர்வைநீர் ஊற்றாய்ப் பெருகியது. சிறிது சிறிதாக அவள் கொண்ட அச்சமும் நீங்குவதாயிற்று. முகத்தில் அரும்பிய வியர்வையை அவள் தன் முன்தானையால் துடைத்துக்கொண்டு மெல்லென எழுந்து, கீழே கிடந்த பிரேதத்தை மறுபடியும் ஒரு

முறை குனிந்து நோக்கினாள். அப்பொழுது அப் பிணத்தின் தலைமாட்டருகே ஓலைச் சுருள் ஒன்று கிடப்பதை அவள் கண்டாள். உடனே கெடுத்துவிட்டபொருளைக் கண்டெடுப்பாள் போல, அவள், பொருக்கெனப் பாய்ந்து, அதைத் தன் கையில் எடுத்துக்கொண்டு விளக்கருகே சென்று, அவ் வெளிச்சத்தில் அதைப் பார்த்தாள். அந்தச் சுருள் மீது 'தனது பார்வை-காமாக்ஷிக்கு' என்று எழுதப்பட்டிருந்தது. அதைக் காணவும் அவள் மிக்க பரபரப்புடன் அச் சுருளைப் பிரித்து உள்ளுறையைப் படிக்கலானாள். அவ்வுள்ளுறை வருமாறு:

"என் ஆசைக் கிளியே, காமாக்ஷி! இக் கடிதம் உன் கைக்கு எட்டும் என்ற நிச்சயத்துடன் நான் இதை எழுதுகிறேன். இதை நீ படிக்கும்பொழுது நான் பிணமாய்க் கிடப்பேன். தற்கொலை செய்துகொண்டு சாகும்படி என் தலையில் எழுதியிருந்தால் அதை யார் தடுக்க முடியும்? சாவதைப் பற்றி எனக்குக் கொஞ்சமும் விசனமில்லை. ஆறிலும் சாவு, நூறிலும் சாவு. அப்படியிருக்க, எப்பொழுது செத்தால் என்ன? அதைப்பற்றி ஒன்றுமில்லை. ஆனால் உன்னை விட்டுப் பிரிந்து போகவேண்டியிருக்கிறதே என்றுதான் என் மனம் மிகவும் சங்கடப்படுகிறது. ஆயினும், என்ன செய்வது! நான் கொடுத்துவைத்தது அவ்வளவுதான்! அன்றெழுதியவன் அழித்தெழுதப் போகிறதில்லை.

"என் கண்ணாட்டி, உனக்கேனோ இந்த எண்ணம் தோன்றியது! பெரிய ராணியார், உனக்காகட்டும், எனக்காகட்டும், வேறு எவர்க்காகட்டும் எவ்விதத் தீங்கும் செய்ததில்லையே. அவர்கள்மீது திடீரென்று உனக்கு இந்த வன்மம் உண்டாகக் காரணம் என்ன? நான் எவ்வளவோ தூரம் உன்னைக் கெஞ்சிக் கேட்டும், நீ அதை எனக்குச் சொல்லாமற் போய்விட்டாயே. பொழுதுவிடிவதற்குள் பெரிய ராணியார் பிணமாய் விடவேண்டும் என்று ஒரே பிடிவாதமாய் நின்றாயே, ஏன்? ஒரு சமயம் அவர்கள் உனக்கு ஏதாவது கெடுதல் செய்திருந்தாலும், அதற்காக நீ அவர்களைக் கொன்றுவிட நினைக்கலாமோ? நீ அவ்விதம் நினைக்கக்கூடியவள் அல்லவே. இத்தனை நாள் உன்னோடு பழகிய எனக்கு உன் குணம் தெரியாதா? வேறொருவர் போதனையில்லாமல் இக்

தக் கெடுபுத்தி உனக்குத் தோன்றியதென்று நீ எவ்வளவு சொன்னாலும் நான் நம்பமாட்டேன். என் மனசுக் குகந்த கட்டிக் கரும்பாகிய நீ, எந்தப் படுபாவியின் போதனையிலோ மயங்கிவிட்டாய். நீயாக இவ் வெண்ணம் கொண்டிருக்க மாட்டாய். அதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

"என் கண்ணே, இப்படியெல்லாம் எழுதுவதற்காக என்னைக் கோபியாதே; என்னை வெறுக்காதே. என்ன எழுதி என்ன? உன் எண்ணத்தை முடித்துவிட்டேன். நீ அவ்வளவு தூரம் சொல்லிவிட்டுப் போனபிறகு, உன் விருப்பத்தின் படி செய்யாமலிருக்க என்னால் முடியவில்லை. நீ சொல்லியதைச் செய்வதற்கு முன்னே எனக்கு ஒன்றும் நிதானப்படவில்லை. இருதலைக் கொள்ளியின் நடுவில் அகப்பட்ட எறும்புபோல என் மனம் அவஸ்தைப்பட்டது கடைசியாக ஒருவாறு துணிந்தேன். தங்கள் ஆசைநாயகியர்க்காக எவ்வளவோ பெரியவர்கள் எவ்வளவோ தவறான காரியங்களைச் செய்திருக்கிறார்கள். தசரத சக்கரவர்த்தி கைகேயி மனத்தைத் திருப்தி செய்வதற்காகத் தம் மூத்த மகனைக் காட்டுக் கனுப்பித் தாமும் உயிர்விட்டார். சர்வேசுவரராகிய ஸ்ரீராமர், சீதையைத் திருப்திசெய்ய மாயமானைப் பிடிக்கப் போய் ஏமாறினார். அப்படியெல்லாம் இருக்க அற்பனாகிய நான் உன் பொருட்டு என்ன செய்தால்தான் என்ன? வருவது வரட்டும், என் செல்லக்கிளி திருப்தியடைந்தாற் போதும் என்று செய்வதைச் செய்துவிட்டேன்.

"என் மனத்துக்குகந்த மாணிக்கமே, நீ சொல்லியபடி பெரிய ராணியார்க்குக் கொடுக்கும் பாலில் நஞ்சுகலந்து கொடுத்துவிட்டேன். இப்பொழுதுதான் அவர்கள் அதைச் சாப்பிட்டுக்கொண் டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். காலையில் அவர்கள் பிணமாய்க் கிடப்பார்கள். அவர்களைக் கொன்ற பழி என்னைச் சேரும். இவ்வளவு பெரும்பழியைச் செய்துவிட்டுச் சஞ்சலமற்றிருக்க என்னால் முடியவில்லை. ஆகையால், ராணியார்க்கு இட்ட நஞ்சிலேயே நானும் கொஞ்சம் உண்டு உயிர்விடத் துணிந்தேன். இதோ நஞ்சு தயாராய் இருக்கிறது. அதை நான் உண்டு உறங்கப் போகிறேன். உறங்கிய பின் விழிக்கப்போகிறதில்லை. நீ வந்தால் உன்னை என் கண்குளிரக் காணப்போகிறதில்லை. நீ என்னைப் பிண

மாய்ப் பார்ப்பாய் ; பார்த்து வருத்தப்படாதே ; என் உயிர் நல்ல கதி அடையப் பிரார்த்தித்துவிட்டுப் போ. வேறென்ன இருக்கிறது எழுதுவதற்கு ? ஒன்றுமில்லை. இனி, உனக்குத் துணை நீயே, எனக்குத்துணை ஈசனே

இப்படிக்கு,
உன் ஆசை நேசன்,
தாமோதரன்."

இவ்வாறு எழுதப் பெற்றிருந்த நிருபத்தைப் படித்து முடித்ததும் அவள் சிறிது நேரம் திக்பிரமைகொண்டு நின்றாள் ; பிறகு, பிரித்த ஓலையைச் சுருட்டிக் கையில் வைத்துக்கொண்டு கீழே கிடந்த பிரேதத்தை உற்றுப் பார்த்தாள்.

பிரேதமாய்க் கிடந்த அவனே தாமோதரன் ; அவனைப் பார்த்து நின்ற அவளே காமாக்ஷி !

சிறிது நேரம், உயிரற்றுக் கிடந்த தாமோதரனைப் பார்த்து நின்ற காமாக்ஷி, பிறகு 'ஊம், புத்திகலங்கிய வைத்தியக் காரன்' என்று தனக்குட் சொல்லி உதட்டைப் பிதுக்கித் தலையை அசைத்துக்கொண்டு வெளியே வந்தாள். வாயி வில் ன்றபடி மீண்டும் ஒருமுறை அந்தப் பிரேதத்தைப் பார்த்துவிட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு சென்றாள். அவள் ஐந்தாறடிதான் சென்றிருப்பாள். அப்போது யாரோ எதிர் வருவதுகண்டு அவள் திடுக்கிட்டு நின்று வருபவர் யாரென உற்றுப்பார்த்தாள் ; தனனோடொத்த தோழி பங்கஜமே வருவதென்றறிந்தாள். உடனே, காமாக்ஷி வேறு வழியாகத் திரும்பிப் பங்கஜத்தைப் பார்க்காதவள்போலச் சென்றாள்.

* * * * * *

பொழுது நன்றாய் விடிந்துவிட்டது. கீழ்வானத்தில் ஜோதிமயமாகச் சூரியன் தோன்றியது. எங்கும் ஒளிபரவ இளவெயில் எரித்தது. கபிலையம்பதியும் சிறிது சிறிதாய்த் துயிலெழுந்து நடமாடத் தொடங்கியது. அப்போது அரண் மனையில் ஏதோ சிறிது கலக்கமும் குழப்பமும் உண்டாயின. காவலாட்களும் ஏவலாட்களும் ஒன்று முணராது இங்கு மங்கும் சென்றனர் ; 'என்ன ? என்ன ?' என்று ஒருவரை யொருவர் விசாரித்தனர் ; தனித்தனியாய்த் திரிந்தவர் இரு

வர் இருவராய்ச் சேர்ந்தனர்; இருவர் இருவர் கூடிச் சிறு கூட்டமாயினர்; சிறுகூட்டம் பலகூடி, பெருங்கூட்டமானது. கடைசியாக அரண்மனைச் சிப்பந்திகள் எல்லாரும் ஒரு கூட்டமாய்த் திரண்டு, பிரமையுற்ற முகத்தினராய், அச்சத் தோடும் அதிசயத்தோடும், ஒருவரோ டொருவர் மிகத் தாழ்ந்த குரலில் வார்த்தை யாடினர்.

ஒருவன்—"நேற்றிரவு படுக்கைக்குப் போகும் வரையில் நன்றாய் இருந்தான். நான் பார்த்தேனே"

மற்றொருவன்—"யார் இல்லையென்கிறார்கள்? படுக்கை யில்தானே பிணமாய்க் கிடக்கிறான்!"

பிறனொருவன்—"பாவம், என்ன உடம்பு, என்ன உடம்பு! கோவிற் காளை போலல்லவா இருந்தான்!"

பின்னொருவன்—"ஊம்! உடம்பு எப்படியிருந்தால் என்னடா, எழுத்து பலமாயிருக்கவேண்டும்"

வேறொருவன்—"பாவம், காமாக்ஷி கேட்டாளானால் உயிரை விட்டுவிடுவாள்"

அயலொருவன்—"ஆமாம், பாவம். முன்னேயே அவ னுக்கும் அவளுக்கும் கலியாணமாயிருக்கும். ஏதோ, பரி சத் தகராரில் தவக்கப்பட்டுக்கொண் டிருந்தது. அதுவும் நல்லதுதான்! இல்லாவிட்டால், அவள்பாடு பெரும் பரிதாப மாய் முடிந்திருக்கும்."

வாயிற்காவலன்—"அது சரிதான். அவளைக் காணோமே, எங்கே? எல்லாருக்கும் முன்னே, இருட்டோடு வந்தாளே!"

இவர்கள் இவ்வாறு பேசிக்கொண் டிருக்கையில், அரண் மனைத் தாதியர் பலர் ஒருங்குகூடிப் பேசிக்கொண்டே அவ் வழியாய் வந்தார்கள்.

ஒருத்தி—"என்ன அவசாக்காடு. காமாக்ஷிக்கு இவ் விஷயம் தெரியாமலா இருக்கும்?"

மற்றொருத்தி—"எங்கடி அவளைக் காணோம்!"

வேறொருத்தி—"கொஞ்ச நேரத்துக்குமுன் இளையராணி யார் மாடிக்குப் போனாளே, நான் பார்த்தேன்"

பங்கஜம்—அடி, அடி. நான் ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. விடியற் கருக்கலில் நான் படுக்கைவிட்டெழு ந்து வந்துகொண்டிருந்தேன். அப்பொழுதுதான் காமாக்ஷி தாமோதரன் அறையண்டையிருந்து வந்துகொண்டிருந்தாள்.

என்னைப் பார்த்தும் பாராதவள்போல அவள் வேறு வழி பிடித்துப் போய்விட்டாள். கண்டாற் பரிகாசம் செய்வேன் என்று நாணிப் போகிறுளாக்கும் என்று நினைத்து நான் போய்விட்டேன்."

பின்ஞெருத்தி—"அப்படியா சமாசாரம். ஆனால் அவளுக்கு அந்தரங்கம் தெரிந்திருக்கும். வாருங்களடி, அவளைக் கண்டுபிடித்துக் கேட்டால், எல்லாம் வெளியாய் விடும்."

அயலொருத்தி—"அதுதான் சரி, வாருங்கள். அவள் இளையராணியார் மாடிக்குப் போனதாக எவளோ சொன்னாளே. வாருங்கள். அங்கே போய்ப் பார்க்கலாம்"

"சரி, வாருங்கள்" என்றாள் ஒருத்தி. உடனே ஒவ்வொருத்தியும் "வாருங்கள், வாருங்கள்" என்று சொல்லிக் கொண்டு, கௌதமிக்குரிய இரண்டாவது உப்பரிகைக்குச் செல்லும் பிரத்தியேகப் படிக்கட்டொன்றின் மீதேறிச் சென்றார்கள். அவர்கள் காமாக்ஷியைப்பற்றிப் பேசிக்கொண்டு செல்வதைக் கவனித்திருந்த ஆடவரிற் சிலரும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றனர்.

அப்பொழுது கௌதமி படுக்கையில் இருந்தாள். காமாக்ஷி அவளுக்கருகே தரையில் நின்றவண்ணம் அவளோடு ஏதோ பேசிக்கொண்டிருந்தாள். யாரோ பலர் கும்பலாய் வருவதறிந்து காமாக்ஷி பேச்சை நிறுத்திப் பொருக்கென ஜன்னலருகே சென்று எட்டிப் பார்த்தாள். தாதியரும் ஏவலாளரும் திரண்டு வருவதைக் காணவும் அவள் உள்ளம் திடுக்கிட்டது. ஜன்னல் வழியாய்த் தெரிந்த அவள் முகத்தைக் கண்ட சிலர் "இதோ இருக்கிறாள் காமாக்ஷி! இதோ இருக்கிறாள் காமாக்ஷி!" என்று கூவினர். பயந்தவர் கண்ணுக்குப் பழுதையும் பாம்பாமன்றோ?

'நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்;
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு.—நெஞ்சிற்
கரவுடையார் தம்மைக் கரப்பார்; கரவார்
கரவிலா நெஞ்சத் தவர்.'

என்ற ஆன்றோர் உரையும் உண்மையே யன்றோ? குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுப்பதும் இயல்பே யன்றோ? 'தன்

னுடைய் போதனைக் கிசைந்து தாமோதரன் மாயாதேவிக்குப் பாலில் விஷங்கலந்து கொடுத்துவிட்டான்; அதை உண்டு மாயாதேவி மடிந்திருப்பாள்' என்பது காமாக்ஷியின் எண்ணம். தன் தூண்டுதலால் செய்த பெரும் பழியைப் பொறுக்கமாட்டாமல் தாமோதரன் தற்கொலை செய்துகொண்டு இறந்து கிடப்பதையும் அவள் கண்ணாரக் கண்டுவிட்டாள். இருகொலைக்குக் காரணம் தானே என்றுணர்ந்தால், ஒருத்தி, என்னதான் தீர மனமுடையவளாயினும், மனச்சாக்ஷியின் குற்றுதலைப் பொறுக்க மாட்டுவளோ? மாட்டாள். யாது நிகழினும் அதனால் மனங்கலங்கி மருளாதிருக்க அவளால் முடியுமோ? முடியாது. ஆகவே, அரண்மனை ஏவலாளர் பலர் ஒருங்கு திரண்டு தன் பெயரைச் சொல்லிக் கொண்டு வந்தால் அவள் என்ன நினைப்பாள்? தன் குற்றமெல்லாம் எப்படியோ வெளியாய் விட்டதாகவும், அது காரணமாக அரசன் ஏவலால் தன்னைப் பிடித்துப் போகவே ஏவலாளரெல்லாம் திரண்டு வந்ததாகவும் அவள் நினைப்பது இயல்பே யன்றோ? அப்படியே அவள் நினைத்தாள்; அந் நினைவு தோன்றவும் மற்றைய நினைவுகளையெல்லாம் மறந்தாள். வேட்டை நாய்கள் சூழ்ந்து வருவது கண்டு அஞ்சி ஓடும் நரியென, அவ் வறையை விட்டு வெளியோடினாள். அவ் வுப்பரிகையின் வாயில்களில் எதன் வழியாயும் தப்பிச் செல்வதற்கில்லை; ஏவலாளர் கையிற் சிக்கவேண்டிவரும். ஆதலின் அவள் நிலாமுற்றத்துக்கோடி, அதன் கைபிடி சுவர்மேலேறி முதல் உப்பரிகையின் நிலாமுற்றத்திற் குதித்தாள்.

அச் சத்தங்கேட்டு, மாயாதேவியும் சுத்தோதனனும் பள்ளியறையிலிருந்து விரைந்து வந்தனர் காமாக்ஷியைக் காணவும் மாயாதேவி "என்னடி காமாக்ஷி, என்ன, என்ன? அஞ்சாமல் இப்படி வா" என்றாள்.

மாயாதேவியை உயிருடன் கண்டதும் காமாக்ஷிக்கு ஒரு சிறிதிருந்த நிதானமும் நிலைகுலைந்து விட்டது. அவள் பேய் கண்டவள்போல வெருண்டு, உப்பரிகை வாயிலைக் குறுகி, நெடிய படிக்கட்டை நாலடியிற் கடந்து கீழிறங்கி வெளிப்பட்டு, வெறிகொண்டாற்போலத் தலைவிரி கோலமாய் ஓடினாள். அவள் ஓடுவதுகண்ட காவலர் 'பிடி, பிடி' என்று அவளைத் துரத்தினர். அவள் பொறிகலங்க நெறிகாணாதோடி

அரண்மனைத் தோட்டக் கிணற்றைக் குறுகி அதில் தொப் பெனக் குதித்துவிட்டாள்.

'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்.'

மாயாதேவிக்குரிய முதல் உப்பரிகையின் நிலாமுற்றத்திற் குதித்தபோது, காமாக்ஷி, தான் வைத்திருந்த ஓலைச்சுருளைக் கைநெகிழ்ந்து கீழே விட்டுவிட்டாள். மாயாதேவி உயிருட னிருக்கக் கண்டதால் உண்டான மனக்கலக்கத்தால், விழுந்த சுருளையும் அவள் எடுக்க மறந்தாள்.

சுத்தோதனனும் மாயாதேவியும், தாமோதரன் தற் கொலை செய்துகொண்டு இறந்து கிடப்பதையும் அது கார ணமாக இதுகாறும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் ஒரு சிறிதும் அறியார். ஆதலால், காமாக்ஷி திடீரென்று மேல்மாடியி லிருந்து குதித்ததும், வாவென் றழைத்தும் வராமல் வெருண் டோடியதும் அவர்கட்கு அதிசயமாய்த் தோன்றின.

சுத்தோதனன், தன் காதலரசியை நோக்கி, "என்ன, மாயா. இதேதோ விநோதமாயிருக்கிறதே!" என்றான்

"ஆம், நாதா. விநோதமாகவும் இருக்கிறது, அதிசய மாகவும் இருக்கிறது. அவள் முகத்தைப் பார்த்தீர்களா, என்ன கோரமாயிருந்தது! என்ன ஆபத்தோ, என்ன அச் சமோ! பாவம்! பைத்தியக்காரி, நின்று நிதானித்து உள்ள விஷயத்தை நம்மிடம் சொல்லியிருக்கலாம்; நம்மால் தடுக் கக்கூடாத ஆபத்துண்டா, தீர்க்கமுடியாத அச்சமுண்டா?" என்றாள் மாயாதேவி

"அதுதானே எனக்கும் விளங்கவில்லை" என்று சுத் தோதனன் சொல்லி வாய்மூடும் முன்னே, காமாக்ஷியைத் துரத்திச் சென்ற காவலர்கள் 'பிடி, பிடி' எனவும், 'மடக்கு, மடக்கு' எனவும், 'விடாதே, விடாதே' எனவும் பலவா றுய்க் கூவிய கூச்குரல் அவன் செவிக்கு எட்டியது. அவன் அதை உற்றுக் கேட்டு "இதென்ன மாயா, நம் அரண்மனை யில் என்றும் இல்லாத குழப்பம் ஏதோ இன்று ஏற்பட்டிருப் பதாகத் தெரிகிறது. வா, போய்ப் பார்ப்போம்" என்று கூறி நிலாமுற்றத்தை நோக்கிச் சென்றான்.

"ஆம், நாதா. காமாக்ஷி ஓடுகிறதைக் கண்டு, காவற்காரர்கள் சந்தேகப்பட்டு, அவளைத் துரத்திப் பிடித்து இம்சிக்கிறார்கள் என்று நினைக்கிறேன். பாவம், ஓடுகிறவர்களைத் துரத்துவது உலகவழக்கந்தானே; விரைவாய்ப்போய்ப் பார்க்கவேண்டும். காவலர்கள் கண்டபடி அவளைத் துன்புறுத்திவிடப் போகிறார்கள்!" என்று சொல்லிக்கொண்டே மாயாதேவி சுத்தோதனனைத் தொடர்ந்து செல்கையில், காமாக்ஷி கைநழுவி விட்டுப்போன ஓலைச்சுருள் அவள் காலில் தட்டுப்பட்டது உடனே அவள் குனிந்து அதைக் கையில் எடுத்துப் பார்த்தாள்.

அதைக் கண்டு நின்ற அரசன் "ஓலைச்சுருள் இங்கே கிடப்பானேன்! காமாக்ஷி போட்டுவிட்டாள்போ லிருக்கிறது" என்றான்.

"தங்கள் உத்தேசம் சரியாய்த்தான் இருக்கிறது. இதோ பாருங்கள், இதன்மேல் எழுதியிருப்பதை" என்று கூறி மாயாதேவி அவ் வோலைச்சுருளை அரசன் கையிற் கொடுத்தாள். அரசன் அதை வாங்கி, 'எனது பார்வை—காமாக்ஷிக்கு' என்று அதன் மீது எழுதப்பட்டிருந்ததைப் பார்த்துவிட்டு, "ஆம மாயா, இது காமாக்ஷியுடையதுதான் நாம் பார்க்க வேண்டும் என்று தான் அவள் இங்கே போட்டுவிட்டுப் போனாள்போலும். இதைப் பிரித்து உள்ளுறையைப் பார்த்தால் எல்லாம் விளங்கிவிடும் என்று நினைக்கிறேன். பார்ப்போம்" என்று அதைப் பிரிக்கப் போனான்.

மாயாதேவி அதைத் தடுத்து, "வேண்டா. அதற்கென்ன இப்பொழுது அவசரம்! காமாக்ஷி நம் காவலர்கள் கையிற் சிக்கி இந் நேரம் என்ன பாடு படுகிறாளோ! வாருங்கள், நாதா, விரைவிற் சென்று அவள் நிலையைக் கவனிப்போம்" என்றாள்.

"ஆனால் சரி, வா" என்று அரசன் முன் செல்லத் திரும்பினான். அப்போது, மாடி வாயிலில் பங்கஜம் தோன்றி மாயாதேவியை நோக்கி வந்தாள். அவளுக்குப் பின்னால், அரண்மனைத் தாதியர் வேறு சிலர் வந்தனர். அவர்களைத் தொடர்ந்து காவலாட்கள் சிலரும் வந்தனர்.

அவர்கள் வருகையைக் கண்ட அரசனும் அரசியும், அதிசயம் மிக்கு, முன் செல்ல எடுத்த அடிகளைப் பின் வைத்து நின்று, 'என்ன விசேஷம்?' எனக் கேட்பதுபோல அவர்களை நோக்கினர்; வந்தவர் முகமெல்லாம் வாட்டமுற்றிருக்கக் கண்டனர்; அதனால், காமாக்ஷிக்கு ஏதோ விபத்து நேர்ந்திருக்கிறது என்று எண்ணினர். அவ்வெண்ணம் உண்மையாயிற்று.

பங்கஜம் பயபக்தியுடன் மாயாதேவியைக் குறுகி, "உத்தரவில்லாமல் நாங்கள் இங்கு வந்ததற்கு மன்னிக்கவேண்டும்" என்று கூறி மேல் எதுவும் கூறுவதற்கு முன், மாயாதேவி பரபரப்புடன் "அதெல்லாம் சரிதான். காமாக்ஷி எங்கே?" என்று கேட்டாள்

பங்கஜம்--"அவளைப் பற்றித்தான் சொல்ல வந்தோம்."

மாயாதேவி—"என்ன அவளுக்கு?"

பங்கஜம்—"இவ் வழியாய் ஓடிவந்தா ளல்லவா?—"

மாயாதேவி—"அந்தக் கதையெல்லாம் பிறகாகட்டுமடி. இப்பொழுது காமாக்ஷி எங்கே?"

பங்கஜம்—(தாழ்ந்த குரலில்) "கிணற்றில் விழுந்து விட்டாள். அவளை—"

மாயாதேவி—(திடுக்கிட்டு) "கிணற்றில் விழுந்து விட்டாளா? என்னடி—"

பங்கஜம—"தவறி விழவில்லை. வேண்டுமென்றுதான் குதித்து விட்டாள்—"

மாயாதேவி—"என்னடி மூடத்தனமாய்ப் பேசுகிறாயே! விழுந்தாலென்ன! குதித்தாலென்ன! யாராவது ஆட்களை விட்டு விழுந்தவளை உடனே எடுக்காமல், எல்லோரும் திரண்டு கூடி இங்கு வந்து நிற்கிறீர்களே, என்? சீக்கிரம்! சீக்கிரம்! யாரடா அவன்—"

பங்கஜம்—"ஆட்கள் இறங்கி அவளை வெளியில் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்—"

"ஆனால் சரி யாராவது ஒருவன் சீக்கிரம் போய் வைத்தியரை " என்று மாயாதேவி கூறி வருகையில் வேலைக்காரன் ஒருவன் அங்கே வந்து அரசனையும் அரசியையும் நோக்கிக் கைகூப்பி நமஸ்கரித்துவிட்டு "கிணற்றில் விழுந்தவளை வெளியில் கொண்டுவந்து விட்டார்கள். ஆனால்,—"

என்று கூறித் தொடர்ந்து ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதைச் சொல்வதற்குள் மாயாதேவி பதைபதைப்புடன், "உயிர் இருக்கிறதல்லவா ?" என்றாள்.

வேலைக்காரன் மிகவும் வணக்கத்துடன் "அதுதான் இல்லை" என்றான்

அதைக்கேட்ட மாயாதேவி மிகுந்த கவலையுடன் நிலத்தை நோக்கி மௌனமாய் நின்றாள்.

காமாக்ஷியின் கதியைக் கேட்டு வருத்தமும், அவள் ஒரு தாதியேயாயினும் அவள் க்ஷேமத்தில் தன் பட்டத்தரசி மாயாதேவி கொண்டுள்ள அக்கறையைக் கண்டு மகிழ்ச்சியும் ஒருங்கே கொண்டு அயல் நின்ற அரசன், செய்தி தெரிவிக்க வந்த வேலைக்காரனை நோக்கி, "உயிர் போய்விட்டதென்று உனக்கு எப்படியடா தெரியும்? மூச்சு இல்லையோ?" என்று கேட்டான்.

வேலைக்காரன் —"இல்லை, மகராஜ். கொஞ்சங்கூட மூச்சு இல்லை."

அரசன்—" மூச்சில்லாவிட்டாற் போகிறது. உடம்பிற் சூடு இருக்கிறதல்லவா ?"

வேலைக்காரன்—" அதுவும் இல்லை மகராஜ்."

அரசன்—" என்னடா அதிசயமா யிருக்கிறது! கிணற்றில் விழுந்தாள், விழுந்தவளை உடனே வெளியில் எடுத்தாயிற்று. அதற்குள்ளாகவா உயிர்போய்விடும்!"

வேலைக்காரன்—" இல்லை மகராஜ். விழுந்தவள் சரியாய் விழவில்லை. நிதான மில்லாமல் கண்ணை மூடிக்கொண்டு தாறுமாறாய் விழுந்திருக்கிறாள். கருங்கல்லாற் கட்டிய கிணறல்லவா. எங்கேயோ நன்றாய் அடிபட்டு மண்டை இரண்டு துண்டாய்த் தெறித்துவிட்டது!"

அரசன்—" ச் ச் ச்! பாவம்!"

வேலைக்காரன்—" தண்ணீரில் அவள் விழுவதற்கு முன்னே, உயிர் அவளை விட்டுப் போயிருக்கும் மகராஜ். கிணறெல்லாம் ரத்தம் தண்ணீர் குங்குமம் கரைத்தாற்போல் செக்கச் செவேல் என்றாய்விட்டது. ஒருநாள் வேலைக்குக் குறைவில்லை. நீர் முழுவதையும் இறைத்துவிட்டுத் தூரெடுத்தால்தான் கிணறு இனிப் பயன்படும்."

அரசன் — "அதிருக்கட்டுமடீ. எல்லாவற்றிற்கும் நீ போய் வைத்தியரை அழைத்து வந்து அவள் உடம்பை நன்றாய்க் கவனித்துப் பார்க்கச் சொல். தப்பித் தவறி உயிர் வந்தாலும் வரலாம்"

வேலைக்காரன் — "ஏது மகராஜ். அது முன்னமேயே போய் விட்டது. மூச்சில்லை, சூடில்லை; நரம்பு விறைத்து விட்டது, நக்கண் கறுத்துவிட்டது. இனி எங்கிருந்து உயிர் வரப்போகிறது! மருந்து கொடுக்கக் கூட வழியில்லை. பல்லுக் கிட்டிப்போயிற்று. மகாராஜா உத்தரவுப்படி நான் வைத்தியரை அழைத்துவந்து விடுகிறேன். யார்வந்தாலும் காமாக்ஷிக்கு இனி உயிர் வரப்போகிறதில்லை. பிறகு மகாராஜா சித்தம்!"

அரசன், வேலைக்காரன் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டு, வாட்டமுற்று நின்ற அரசியை நோக்கினான். அரசி அரசனை நோக்கிவிட்டு வேலைக்காரனைக் கடிந்து நோக்கி, "உன் அபிப்பிராயம் இருக்கட்டும். நீ போய் வைத்தியரை அழைத்துவாடா, மூடா" என்றாள்.

வேலைக்காரன் அஞ்சி வாய் பொத்தி "சித்தம். இதோ அழைத்து வருகிறேன்" என்று கூறி அரசனையும அரசியையும் கைகூப்பி வணங்கிப் போய்விட்டான்.

அவன் போனபிறகு பங்கஜம் மாயாதேவியை நோக்கி, "வைத்தியர் வந்தால் தாமோதரனையும் பார்க்கச் சொல்ல வேண்டும்" என்றாள்

"ஏன்? தாமோதரனுக் கென்னடி? உடம்பு குணம் இல்லையா?" என்று வினவினாள் மாயாதேவி.

"தேவரீர் செவிக்கு இன்னும் எட்டவில்லைபோல் இருக்கிறது தாமோதரன் தன் அறையில் இறந்து கிடக்கிறானே" என்றாள் பங்கஜம்

இதைக் கேட்டதும் அரசனுக்கும் அரசிக்கும் உண்டான அதிசயம் சிறிதன்று. காமாக்ஷி இறநதது கேட்டு வருந்திய அவர்களது கனிந்த மனத்திற்கு, பங்கஜம் கூறிய இச் செய்தி, புண்ணிலிட்ட வேல்போல் இருநதது. அரசன் மிகவும் கவலையுடன். ஒளிசிறந்து விளங்கிய கீழ்வானத்தை மறந்த மனத்தோடு நோக்கி, "என்ன, இன்று பொழுது இப்படி விடிந்தது!" என்று தனக்குத் தானே பேசிக்கொள்வது போலப் புகன்றான்.

மாயாதேவியும் பெருங் கவலை கொண்டு திடுக்கமும் வேறு பட்டு, இரண்டு துக்கச் செய்திகளை ஒன்றாய்க் கொண்டு வந்த பங்கஜத்தை நோக்கி, மிகவும் அமைந்த குரலில், "என்னடி, நீ சொல்லும் இச் செய்தி எனக்கு மிகவும் அதிசயமாயிருக் கிறதே! நேற்று நான் அவனைப் பார்த்த ஞாபகமிருக்கிறது. நேற்று யாரோ ஓர் அரண்மனைச் சேவகனுடன் நன்றாய்த்தான் பேசிச் சிரித்துக்கொண்டிருந்தான். இன்று பொழுது இன் னும் சரியாய் விடியவில்லை. இதற்குள் அவன் இறந்து விட் டான் என்கிறாயே! நீ சொல்வது நிச்சயந்தானா! கண்ணாற் கண்டதைச் சொல்லுகிறாயா? காதாற்கேட்டதைச் சொல்லுகி றாயா? விஷயம் உண்மை என்று உனக்குத் தெளிவாய்த் தெரி யுமா?" என்றாள்.

"தெரியும் அம்மா. நேற்றிரவு பத்துமணி வரையில் அவன் நன்றாய்த்தான் இருந்தான். வழக்கம்போல் அவன் காய்ச்சி வைக்கும் பாலைத் தங்களுக்கு எடுத்து வந்து கொடுப் பதற்காக நான் மடைப்பள்ளிக்குப்போனேன். அப்பொ ழுது அவன் அங்கிருந்தான். தங்களுக்கென்று வைத்திருந்த பாலைத் தன் கையாலேயே எடுத்து என்னிடம் கொடுத்தான். நான் அதை வாங்கிக்கொண்டு வந்துவிட்டேன். பொழுது விடிவதற்குள் அவன் இறந்துவிடுவான் என்று கனவிலும் நினைக்கவில்லை. சற்று நேரத்துக்குமுன்தான் யாரோ சொன் னதைக் கேட்டு நான் ஆச்சரியப்பட்டு அவன் அறையைப் போய்ப் பார்த்தேன். வேறு பலரும் என்னோடு பார்த்தார்கள். தாமோதரன் பிணமாய்ப் படுக்கையிற் கிடப்பதை நாங்கள் கண்ணாரக் கண்டோம். அது சம்பந்தமாகக் காமாக்ஷிக்கு ஏதாவது உண்மை தெரிந்திருக்கும் என்று கருதி அவளைக் கண்டு விசாரிக்கவே நாங்கள் அவளைத் தேடிச் சென்றோம்" என்று கூறி மேலும் தனக்குத் தெரிய நிகழ்ந்த அனைத்தையும் விவரமாய்க் கூறினாள் பங்கஜம்.

அவள் கூறியதையெல்லாம் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த அரசனும் அரசியும் ஒருவரையொருவர் நோக் கினர். பிறகு மாயாதேவி பங்கஜத்தை நோக்கி, "நல்லது, நீங்கள் போங்கள். வைத்தியர் வந்ததும் காமாக்ஷியையும் தாமோதரனையும் பார்த்துச் செய்யக்கூடியது ஏதாவதிருந்தால் செய்துவிட்டு இங்கே வரச்சொல்" என்றாள்.

"அப்படியே" என்று கூறி வணங்கிவிட்டுப் பங்கஜம் சென்றாள். அவளோடு மற்ற ஊழியர்களும் சென்றனர்.

அப்பால் சுத்தோதனன் தன் காதற்றேவியை நோக்கி, "மாயா, மகிழ்ச்சியும் துக்கமும் எப்படி மாறிமாறி வருகின்றன, பார்த்தாயா? நேற்று முன்தினம் மகப்பேறில்லையென்றெண்ணி மனம் வருந்தினோம்; நேற்றுத்தான் மகப்பேறுண்டென் றறிந்து மிகக் களித்தோம்; இன்று பார், காலைப் பொழுதே கலக்கத்துக் கிடமாய்விட்டது!" என்றான்.

அதுகேட்டு மாயாதேவி பொருளற்ற புன்னகை ஒன்று புரிந்து, "இதென்ன கலக்கம்! தெய்வச் செயலாய் நேர்ந்ததற்கு நாம் என்ன செய்யக்கூடும், நாதா. தாங்கள் இதை ஒரு பெரிதாகக் கருதி உளங் கலங்காதீர்கள். யார் விதியை யார் தடுக்கக்கூடும்?

'தீங்குவந் தடையு மாறும் நன்மைதான் சேரு மாறும்,
தாங்களசெய் வினையி னாலே தத்தமக் காய அல்லால்,
ஆங்கவை பிறரால் வாரா. அமுதநஞ் சிரண்டி னுக்கும்
ஓங்கிய சுவையின் பேதம் உதவினர் சிலரும் உண்டோ?'

இல்லை. எல்லாம் ஈசன் செயல்" என்றாள்.

"இவ்வளவும் உனக்கு நான சொல்ல இருந்தேன். நீயல்லவோ எனக்குமேல் கவலையுற்று முகம்வாடி யிருக்கிறாய்!" என்றான் சுத்தோதனன்.

மாயாதேவி அரசன் உரைத்தது உண்மையே என்று உணர்ந்து, அவனை அன்புடன் நோக்கி, "காதல, நான் மனம் வருந்துவது உண்மைதான். ஆனால், யோசித்துப் பார்த்தால் அவ் வருத்தம் வீண் என்று தோன்றுகிறதல்லவா? வேறு எவராவது இறந்துபோ யிருந்தால் நான் இவ்வளவு விசனப் படமாட்டேன். காமாக்ஷியும் தாமோதரனும் —பாவம்!— எவ்வளவு நேசமாய் இருந்தார்கள்! அவர்கள் இருவரும் ஒருவர்பின் ஒருவராய் ஒரே நாளில் மடிவதென்றால், என்ன பரிதாபம்! பாருங்கள்" என்றாள்.

"தடையென்ன! இது மிகவும் பரிதாபமான விஷயந்தான். ஆனால், மாயா, இவர்கள் இருவரும் இக்கதி அடைந்ததற்குக் காரணம் விளங்கவில்லையே. இதில் ஏதோ அந்

தாங்கும் இருக்கிறது. அந்த ஓலைச்சுருளைப் பிரித்துப் பார்த்தால் அது விளங்கலாம் என்று நினைக்கிறேன். வா, அப்படி ஊஞ்சலின்மீது அமர்ந்து அதைப் படித்துப் பார்ப்போம்" என்று கூறிச் சென்று ஊஞ்சலின்மீது அமர்ந்தான் சுத்தோதனன். மாயாதேவியும் அரசனைத் தொடர்ந்து சென்று அவனருகே அமர்ந்து, தன் கையில் வைத்திருந்த ஓலைச் சுருளை அவனிடம் கொடுத்து, "தாங்களே படியுங்கள். நான் கேட்கிறேன்" என்றாள்.

சுத்தோதனன் அவ்வாறே சுருளை வாங்கிப் படித்தான். ஆரம்பத்தில், காமாக்ஷியைப் பற்றி எழுதிய காதல் மொழிகளைக் கண்டு ஒருபுறம் நகையும், தற்கொலை செய்துகொள்வதாக எழுதியிருப்பது கண்டு ஒருபுறம் துயரும் கொண்டான சுத்தோதனன். ஆனால், மாயாதேவியைப் பற்றி எழுதிய பகுதிக்கு வரவும், அவன்கொண்ட நகையும் துயரும், வியப்பும் கவற்சியுமாக மாறின அவன் வாய்விட்டுப் படிப்பதைப் பொருக்கென நிறுத்தி, மேல் எழுதியிருந்த விஷயங்களை மௌனமாய்க் கூர்ந்து பார்க்கலாயினான்

"ஆருயிர் நாயக, ஏன் மௌனமாய்ப் பார்க்கிறீர்கள்? நான் அறியக்கூடாத அந்தரங்க விஷயம் ஏதேனும் அதில் உள்ளதா?" என்று வினவினாள் மாயாதேவி.

அரசன் அதற்குப் பதில் உரையாமலும் அரசியைத் திரும்பிப் பாராமலும், சற்றுப பொறுக்குமாறு கையமர்த்தி விட்டு, நிருபத்திலேயே தன் முழுநாட்டத்தையும் செலுத்தி மேற் பார்க்கலானான் வரவர, அவன முகத்தில் தோன்றிய வியப்பும் கவற்சியும மறைவுற்றுக் கடுமையும் வெறுப்பும கலந்து தோன்றின. மாயாதேவி அதைக் கவனித்தாள; கலங்கினாள்; ஐயத் தீயால் உள்ளம்வெதும்பினாள்.

நிருபம் முழுவதையும் படித்தான பிறகு, அரசன் மாயாதேவியை நோக்கி, "மாயா, தாமோதரனும் காமாக்ஷியும் இறந்ததற்காக நீ இவ்வளவு பரிதாபப்படுகிறையே. பார், அவர்கள் செய்கையை!" என்று கூறி ஓலைச் சுருளை அவள் கையிற் கொடுத்தான்

மாயாதேவி அதைக் கையில் வாங்கிக்கொண்டு, மிகுந்த அதிசயத்துடன், "என்ன, நாதா, என்ன சங்கதி?" என்று வினவினாள்.

"நீயே நிருபத்தை முழுதும் படித்துப் பார். வாய்விட்டுரைக்க எனக்கு மனம சகிக்கவில்லை" என்று கூறிவிட்டு அரசன் நிலத்தை நோக்கிய வண்ணம் தன்னை மறந்த சிந்தனையி லாழ்ந்தான்.

மாயாதேவி, தாமோதரன் எழுதிய நிருபத்தை ஆதி முதல் அந்தம் வரையில் அமைதியாய்ப் படித்தாள். அப்பால் அவள் ஓலையைச் சுருட்டிக் கையில் வைத்துக்கொண்டு, ஒளியிழந்த முகத்தில் புன்னகை தவழ அரசனை நோக்கி, "காதல, தெய்வச் செயல் என்பது இங்கேதான் பிரத்தியக்ஷமாகத் தெரிகிறது. என்ன விந்தை பாருங்கள்! எனக்கு நஞ்சிடத் தூண்டியவனும், நஞ்சிட்டவனும இறந்துவிட்டார்கள். நஞ்சுட்கொண்டு இறந்திருக்க வேண்டிய நானோ இதோ உயிருடன் இருக்கிறேன். பாவம்! அவர்கள் ஒன்று எண்ணத் தெய்வம் ஒன்று செய்துவிட்டது!" என்றாள்

அரசன்—"மாயா, விளையாட்டாய்ப் பேசாதே நினைத்தால் என் நெஞ்சம் நடுங்குகிறது. இந்த விஷயத்தை நாம் அலக்ஷியமாய் விடக்கூடாது. இருக்கட்டும் இந்தக் கொடிய சூழ்ச்சிக்கு அடிப்படை யாரென ஆராய்ந்தறிந்து அவர்க்கு ஏற்ற தண்டனையைப் பின்னர்ச் செய்கிறேன் இப்பொழுது நீ இக்கொடியர் சூழ்சசியிற் சிக்காமல் தப்பிய வகையைக் கூறு."

அரசி—"வகையென்ன? ஒன்றுமில்லை எல்லாம் தெய்வச் செயல். பங்கஜம் பால்கொண்டு வருவதற்குச் சற்று முன்னேதான், சுவாமிக்கு நிவேதனம் செய்து குருக்கள் கொண்டுவந்து கொடுத்துப் போன சித்திரான்னங்களிற் சிறு துண்டு பாயசத்திலும் சிறிது பருகினேன் அதனால் வயிறு சிறிது மந்தப்பட்டிருந்தது; தலையும் சிறிது மயக்கமுற்றிருந்தது. வேறொன்று உண்ணவோ பருகவோ கொஞ்சமும் வேட்கையில்லை. அச் சமயத்தில் பங்கஜம் பால்கொண்டு வந்தாள் நான் வேண்டா வெறுப்பாய் அதை வாங்கி அருகேயிருந்த பீடத்தில வைத்துவிட்டுப் பங்கஜத்தை அனுப்பிவிட்டேன். மயக்கம் தலையைச் சுற்றியது. வைத்த பாலை மறந்தேன்; தங்கள் வருகையை மறந்தேன்; என்னையும் நான் மறந்தேன். மஞ்சத்தின் மீதேறிப் படுத்தேன். அயர்ந்த

உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டேன். விடிந்துதான் எழுந்தேன். வைத்த பால் வைத்தபடியே இன்னும் அங்கிருக்கிறது!"

அரசன்—"ஆனால், நீ தப்பியது தெய்வச் செயல்தான். உனது மீட்சி அதிசய மீட்சியாகவே இருக்கிறது."

அரசி — "தெய்வத்தின் சம்மதமில்லாமல், யார் யாரை என்ன செய்யக்கூடும், நாதா ?

'நல்வினை யுடைய நீரார் நஞ்சுணின் அமுத மாகும்:
இல்லையேல் அமுதும் நஞ்சாம். இன்னதால் வினையின் ஆக்கம்,
கொல்வலியானிவனை என்றும் இவன்கொல்லுமென்னையென்றும்
அல்லன நினைதல் செய்யார் அறிவினற் பெரிய நீரார்!'

காமாக்ஷியும் தாமோதரனும் யார்? அறிவிற் சிறியார் தானே. அதனால்தான், இந்த மூடநினைவுக்கும் மூடச் செயலுக்கும் ஆளாகி முடிவுற்றனர்."

அரசன் — "அப்படிச் சொல்லாதே மாயா. அவர்கள் மூடரானாலும் தாமாக இச் செயலுக்குத் துணிந்திருக்கமாட்டார்கள். உன்னைக் கொல்வதால் அவர்களுக்கு என்ன பயன்? ஒன்றுமில்லை. யாரோ பிறர் ஒருவர் போதனையால் தான் இதற்குத் துணிந்திருக்கவேண்டும். தாமோதரனுக்கே இந்த எண்ணம் தோன்றியிருக்கிறது 'எந்தப் படுபாவியின் போதனையிலோ நீ மயங்கி விட்டாய்' என்று எழுதியிருக்கிறான், பார்த்தாயா? அந்தப் படுபாவி யார் என்று கண்டுபிடிக்க வேண்டும்."

அரசி - "அவன் என்ன கண்டான்! காமாக்ஷிமேற் குறை காண மனமில்லாமல் ஏதோ எழுதினான். என்னைக் கொல்வதால் அவர்களுக்குப் பயன் ஒன்றுமில்லை யென்பது சரிதான். வேறு யாருக்குத்தான் என்ன பயன்?"

அரசன்—"ஏன்? உன் தங்கை கௌதமிக்குப் பயன் இல்லையா?"

அரசி—"வாய் கூசாமல் என்ன வார்த்தை கூறுகிறீர்கள், நாதா. கௌதமியைத் தாங்கள் இவ்வளவு கேவலமாக மதித்திருந்தால் தங்களுக்கு அவள்மீது என்ன அன்பு இருக்கக் கூடும்! தங்கள் அன்பு தனக்குக் கிட்டவில்லை யென்றுதான் அவள் நெஞ்சுடைந்து நைகிறாள்; கண்ணீர்

விட்டுக் கலங்குகிறாள். தங்கள் கண்ணுக்கு அவையும் குற்றமாய்த் தோன்றுகின்றன. பொறாமைக்காரி என்கிறீர்கள், கொடுமைக்காரி என்கிறீர்கள், ஆதிரக்காரி என்கிறீர்கள். குற்றத்தைத் தங்கள்மீது வைத்துக்கொண்டு அவளை அப்படியெல்லாம் சொல்வது நியாயமா? சர்வோத்தமமாகிய தாங்கள் அவள் விஷயத்திலமட்டும இப்படி இருப்பது எனக்குச் சற்றும் பிடிக்க வில்லை."

அரசன்—"அதெல்லாம் இருக்கட்டும் மாயா. நீ உன் தங்கை கௌதமியை, உனது இயற்கைபபடி, சற்குணபர்வதத்தின் உச்சியிலிருநது பார்க்கிறாய். அதனால், அவள் எவ்வளவு கேவலமான இழிகுணச் சேற்றில் உழலுகிறாள் என்று உனக்குத் தெரியவில்லை பாரபட்சந்தால் மறைபடாத ஆராய்ச்சிக் கண்ணாடியால் அவளை உற்றுப் பார். அப்பொழுது அவள் உண்மை நிலை உனக்கு விளங்கும்."

அரசி—(புன்னகை செய்து) "நல்ல கண்ணுக்குக் கண்ணாடி ஏன்? தங்கள் ஆராய்ச்சிக் கண்ணாடிதான் தங்கள் அருட்பார்வையைக் கெடுத்து விடுகிறது; பூதக்கண்ணாடி போல் சிறிதைப் பெரிதாய்க் காட்டுகிறது. அதை எறிந்து விடுங்கள். காதற் கண்ணால் அவளைக் கனிந்து பாருங்கள்"

அரசன்—"எப்பொழுதும் அப்படியே பார்த்தால் அதர்மக் கிருமி கண்ணுக்குத் தெரியாது; கைக் ககப்படாது; பல்கிப் பெருகி வளரும் அதனால் அறப்பயிர் அழியும்; செங்கோல் சிதையும். வேறு யார் அதற்கு இடங்கொடுத்தாலும் அரசனாகிய யான் அதற்கு மிதமிஞ்சி இடங்கொடுக்க லாகாது."

அரசி—"மணந்த மனைவியிடத்திலுமா?"

அரசன்—"ஆம். யாராய் இருந்தால் என்ன? தர்மதேவதைக்குத் தமரென்றும் பிறரென்றும் வேறுபாடு உண்டோ? தர்ம தேவதையின் பிரதிநிதி அரசன். அரசனுக்குறுதி செங்கோல். செங்கோ லாவ தென்ன?"

'எய்திய குற்றந் தோர்கள் யாவரா யினுங்கண் ணோடா
தைதென நாடி நீதி அறந்தலைப் பிழையாத் தண்டம்
செய்தலே செங்கோ லாகும் செய்யகோ லின்றேல் என்னும்
உய்திசெய் மழையான் மக்கள் உறுபயன் உற்ற போதும்?'

உனக்குப் பாலில் நஞ்சிட்டவன் தாமோதரன். தாமோதரனை அவ்வாறு செய்யத் தூண்டியவள் காமாக்ஷி. காமாக்ஷிக்கு அவ்வெண்ணத்தைப் புகட்டியவள் கௌதமி. இதிற் சிறிதும் ஐயமில்லை"

அரசி — "வேண்டா. தெளிவாய்த் தெரியாததொன்றைத் தீரமாய்க் கூறிப் பாவத்துக் காளாகாதீர்கள்"

அரசன்—"ஏன்? விஷயம் தெளிவாய்த் தெரியவில்லையா? உன்னிடத்தில் நான் பிரியமாயிருப்பது உன தங்கைக்குப் பொறுக்கவில்லை. அதை நான் நெடுநாளாய் அறிவேன். நேற்று அது நன்றாய் விளங்கிவிட்டது. நீ கருப்பமுற்றதற்கு நாம் விழாக்கொண்டாடியது அவளுக்குச் சகிக்கவில்லை. நேற்று முழுவதும், இவ்வளவு ஆரவாரத்திலும் அவள் படுக்கைவிட்டு அசையவில்லையே!"

அரசி — "நோயுற்றுப் படுத்திருந்தால் அதுவும் குற்றமா?"

அரசன்—"என்று மில்லாத நோய் நேற்றுத்தான் நாள் பார்த்து வந்ததோ? அது போகட்டும். நேற்று விளக்கு வைக்கும் வரையில் காமாக்ஷியும் அவளும் தனித்திருந்து ஏதோ இரகசியம் பேசியிருக்கிறார்கள் அதுவும் தற்செயலாய் என் காதுக் கெட்டியது.—"

அரசி—"தற்செயலாய்க் கேட்டது ஓர் ஆதாரமாகுமா?"

அரசன்—"போகட்டும். இன்று அதிகாலையில், காமாக்ஷிக்கு அவளிடத்தில் என்ன வேலை?"

அரசி—"எஜமானி நோயுற்றிருக்கிறாளே என்று சிரத்தையோடு பார்க்கப் போயிருக்கலாம்"

அரசன் — "போகட்டும். சதியாலோசனை செய்திராவிட்டால் ஏவலாளரைக் கண்டதும் காமாக்ஷி அஞ்சி ஓடுவானேன்?"

அரசி—"அதனால் கௌதமிக்கென்ன? நாதா, 'கண்ணாற் கண்டதும் பொய்; காதாற் கேட்டதும் பொய்; தீரவிசாரித்ததே மெய்'"

அரசன்—"அது நியாயம். இதை நான் தீர விசாரியாமல் விடேன்."

அரசி—(சிரித்துக்கொண்டு) "அதெல்லாம் வேண்டா. சூழ்ச்சி பலன்படவில்லை. நான் உயிருடனிருக்கிறேன். ஏன் அனாவசியமாக, இந்த அருவெருப்பான விஷயத்தைக் குத்திக் கிளறிக்கொண்டிருக்கவேண்டும்? விடுங்கள்."

அரசன்—"அப்படியன்று மாயா. நியாயம்—

அரசி—"நியாய நூல் கற்ற தாங்கள் எவ்வளவு வேண்டுமானாலும் பேசலாம். தங்களோடு நியாயம் பேச என்னால் முடியாது. கர்ப்பிணியான எனக்குத் திருப்தியாகச் செய்ததாயிருக்கட்டும். தயவுசெய்து இவ் விஷயத்தை இதோடு விட்டுவிடுங்கள். யாவும் நம் மனத்திலேயே மறைந்து போகட்டும்."

அரசன் முகமலர்ந்து நகைத்து, "மாயா, சுலபத்தில் நீ என்னை மடக்கிவிட்டாய். உன் விருப்பம் அதுவானால் அப்படியே ஆகட்டும்" என்றான்.

அச் சமயம் வைத்தியரும் பங்கஜமும் அங்கு அவர்களை நாடி வந்தார்கள்.

அரசன் வைத்தியரை நோக்கி, "என்ன, இருவரையும் பரிசோதித்தாயிற்றா?" என்று வினவினான்.

"ஆயிற்று மகாராஜ். உயிர் போய்விட்டது. இனி என்ன செய்தும் பயனில்லை" என்றார் வைத்தியர்.

"ஆனால் சரி! அவர்களைச் சுடலைக் கெடுத்துப் போய்த் தகனஞ் செய்ய ஏற்பாடுகள் செய்யச் சொல்லும். நீர் போகலாம்" என்று அரசன் வைத்தியரை அனுப்பிவிட்டான்.

அப்பால் மாயாதேவி பங்கஜத்தை நோக்கி, "பங்கஜம், நேற்றிரவு நீ கொண்டுவந்த பாலை நான் பருகவில்லை. அது கெட்டுப்போயிருக்கும். அதை எடுத்து இப்படியே சாக்கடையில் ஊற்றிவிட்டுப் பாத்திரத்தைக் கழுவி வைத்துப் போ" என்றாள்.

பங்கஜம் அரசியின் கட்டளையை உடனே நிறைவேற்றிப் போய்விட்டாள். அப்பால் அரசனும் அரசியும் காலைக்கடன்களைக் கழிக்கச் சென்றனர்.



## அதிகாரம்—6

# திருவவதாரம்

ஓயாது செல்லும் காலச் சக்கரம் பகலும் இரவுமாய் மாறி மாறிச் சுழன்றுகொண்டே சென்றது. ஒவ்வொன்றாய் மாதங்கள் ஒன்பது கடந்தன. பத்தாம மாதம் பிறந்தது. அப்பொழுது, சுத்தோதனன், மாயாதேவியின் விருப்பத்துக்கிணங்கி, உலும்பினி என்னும் அழகிய பூஞ்சோலைக்குத் தனது ஜாகையை மாற்றிக்கொண்டான். அச் சோலையின் நடுவே அமைக்கப்பட்டிருந்த சிங்கார மாளிகையில் சுத்தோதனனும் மாயாதேவியும ஏவலாளர், மெய்காப்பாளர், மருத்துவர், சோதிடர் முதலியோர் சூழ இனிதுறைந்து வந்தனர். மாயாதேவியின் மனதிருப்திக்காகச் சுத்தோதனன் கௌதமியையும் அங்கு அழைத்து வந்திருந்தான்.

கௌதமி முன்னையினும் இப்பொழுது அதிக விகாரமுற்று உரு வேறுபட்டிருந்தாள். அவள் கண்கள் உட்குழிந்து கலங்கிய நோக்கம் உடையனவாய் இருந்தன; கன்னங்கள் ஒட்டி வறண்டிருந்தன; உதடுகள் மிகவும் நிறம் வேறுபட்டுத் தடித்துத் தோன்றின; மேனி திரைந்திருந்தது. தன்னை அலங்கரித்துக்கொள்வதிலும் அவள் லட்சியமற்றவளாய்க் காணப்பட்டாள். மாயாதேவியைவிட மிகவும் இளையவளான அவள், இப்பொழுது, மாயாதேவியைவிட மிகவும் முதியவளாகத் தோன்றினாள்.

மாயாதேவி அவள் உருமாற்றத்தைக் கவனியாமல் இல்லை; கவனித்து மனம் வருந்தினாள். தன் கணவன் காதலைப் பெருததால் உண்டான மன ஏக்கமே, அவளை இவ்வாறு உருக்குலைத்து விட்டது என்று எண்ணி மாயாதேவி அடிக்கடி உள்ளம் உருகினாள். ராஜ்ய விவகாரங்களின் நிமித்தம் அரசன் வெளியே சென்றிருக்கும் காலங்களில் மாயாதேவி தன் தங்கையோடு இன்னுரையாடியும், சோலையில் உலாவியும், தாமரைத் தடத்தில் தண்புனல் குடைந்தும், செடி கொடி பூத்த செழுமலர் பறித்தும், கண்ணுக்கினிய காட்சிகள் கண்டும், காதுக்கினிய இன்னிசை கேட்டும் அவளை மகிழ்விக்க முயல்வாள். ஆனால், கௌதமி, தமக்கையின்

வற்புறுத்தலை மறுக்க வகையில்லாமல், அவள் இழுத்தவாறு நடைபபிணம்போல அவளுடன் செல்வாளே யொழிய மனங் கலந்து அவளோடு மகிழ்ச்சியுறாள். அதுகண்டு மாயாதேவி உள்ளம் உடைவாள். தன் தங்கை இங்ஙனம், ஆற்றியும் ஆறுமல, தேற்றியும் தேருமல் இருக்கிறாளே என்ற கவற்சி ஒன்றைத் தவிர, வேறு எவ்விதமான கவற்சியும் மாயா தேவிக்கு இல்லை.

அரசனோ கௌதமியைத் திரும்பியும் பார்ப்பதில்லை. மாயாதேவி அவளிடம் பற்றுவைத்திருப்பதும் அவனுக்குப் பிடிக்கவில்லை. காமாக்ஷியும தாமோதரனும் இறநதது முதல், அரண்மனைச் சிப்பந்திகள் அனைவரும், இன்னதென்று தங்களுக்கே புலப்படாத ஏதோ ஒரு காரணத்தால், கௌத மியை வெறுக்கத் தொடங்கினார்கள். அவர்கள் கொண்ட வெறுப்பு வரவர அதிகமாயிற்றே யொழியக் குறையவில்லை. ஆதலால் மாயாதேவியைத தவிர, அவள் நிலைமைக்கு இரங்கு வார் வேறெவரும் இலராயினர்.

இவ்வாறு சில நாட்கள் சென்றன.

* * * * *

ஒரு நாள் மாலைப்பொழுதாயிற்று. வழக்கம்போல் மாயா தேவியும் சுத்தோதனனும் சோலையில் உலவச் சென்றனர் கரு வுயிர்க்கும் காலம் நெருங்கிற்றாகலால் தாதியொருத்தி எப் பொழுதும் மாயாதேவியின் அருகிருப்பது நல்லதென்று கருதி, பங்கஜம் என்னும் தாதியை அவ்வாறிருக்கப் பணித் திருந்தான் சுத்தோதனன். ஆதலின், சுத்தோதனனும் மாயா தேவியும் உலவச் சென்றபோது, பங்கஜமும் அவர்களைத் தொடர்ந்து சென்றாள்.

சிறிது தூரம் செல்லவும் அவர்கள் ஒரு மகிழ மரத் தைக் குறுகினார்கள். அம் மரத்தின் கீழ் சலவைக்கல் மேடை ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. சுத்தோதனன் அதை மாயா தேவிக்குச் சுட்டிக்காட்டி, "காதலீ, அதோ உள்ள மேடை மீது அமர்வோம், வா. நீ இனி அதிகதூரம் நடத்தல் தகாது" என்றான்.

மாயாதேவி புன்னகைசெய்து, "நடப்பதால் எனக்குச் சிறிதும் வருத்தம் தோன்றவில்லை. ஆயினும் என்ன? தங்

கள் விருப்பம்போல் அம் மேடைமீதே அமரலாம், வாருங்கள்" என்றாள்.

இருவருமாய்ச் சென்று அந்தச் சிலாதலத்தில் அமர்ந்தார்கள். மாயாதேவிக்கருகே, பொற்றுகள் தூவினாற்போல மலர்கள் உகுத்த மகரந்தப் பொடி படிந்திருந்த மணற்றரையில், பங்கஜம் உட்கார்ந்தாள்.

இளவேனிற் பருவமாதலால், ஆகாயம் மாசு மறுவற்றுத் தெளிந்து விளங்கியது. காற்று இன்பமாய் வீசியது. நானாவகைப் பறவைகள் இங்குமங்கும் பறந்தன. சலியாதுழைக்கும் தேனீக்கள் மலர்தோறுஞ் சென்று தேன் சேகரித்துக் கொண்டிருந்தன. சோலையில் வளரும் இள மயில் ஒன்று, தன் கலாபத்தை விரித்து ஆடிக்கொண்டு மாயாதேவியை நோக்கி வந்தது.

அதை அரசன் கண்டு, "மாயா, பார்த்தாயா? அம் மயில் உன் சாயலைக் கண்டு தன் இனமென்று கருதி உன்னை நாடி வருகிறது" என்றான்.

மாயாதேவி சிறுநகை செய்து, "அப்படியா. ஆனால் கிட்ட வரட்டும். அதைக் கேட்போம்" என்று அரசனுக்குக் கூறிவிட்டு, அம் மயிலை நோக்கிக் கை நீட்டி "வா, கிட்ட வா" என்று கூறி அதை அழைத்தாள்.

உடனே அது மாயாதேவியை நோக்கி வருவதை விட்டு வேறு புறமாய்த் திரும்பி ஓடியது.

"பார்த்தீர்களா, நாதா. எதிர்சென்றழையாமல் இருந்த விடத்திலிருந்தே கூப்பிடுகிறேன் என்று அது கோபித்துக் கொண்டு போகிறது. சற்றிருங்கள், நான் போய் அதை அழைத்து வருகிறேன்" என்று எழுந்தாள் மாயாதேவி.

அரசன் அவள் செல்வதைத் தடுத்து "நீ இரு. நான் போய் அதைப் பிடித்துக்கொண்டு வருகிறேன்" என்றான்.

"கூடாது, கூடாது. தாங்கள் அதை நெருங்கவும் கூடாது. இனத்தாரை இனத்தார்தான் உபசரித்து அழைக்க வேண்டும். தாங்கள் இவ்விடத்திலேயே இருங்கள். நான் ஒரு நொடியில் அதை அழைத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, மாயாதேவி, சென்ற மயிலைத் தொடர்ந்து போனாள். அவளை விட்டுப் பிரியக்கூடாது என்பது பங்க

ஜத்துக்கு இடப்பட்டிருந்த கட்டளையாதலால் அவளும் மாயாதேவியோடு சென்றாள்

அவர்கள் தன்னைத் தொடர்ந்து வருவதறிந்த மயில் விரைந்தோடி ஒரு செடிமறைவில் மறைந்தது. அவர்களும் அதை விடாது தொடர்ந்து சென்று, அரசன் கண்ணுக்கு மறைந்தார்கள்.

அப்பால் அரசன், தனக்கு எதிரே இருந்த ஒரு பரு மரப்பொதும்பில், கூடுகட்டி வாசஞ்செய்த மென்சிறைப் பறவை ஒன்று தன் பார்ப்புக்கு உணவு கொண்டு வந்து ஊட்டுதலை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். சிறிது நேரம் சென்றது. மரப்பொதும்பில் இருந்த பறவை வாயில் வைத்திருந்த உணவைத் தன் பார்ப்புக்கு ஊட்டியபின் விர் ரென்றெழுந்து மேலே பறந்துபோயிற்று. அதோடு அரசன் கவனமும் அதைவிட்டு நீங்கிற்று. மயிலைத் தொடர்ந்துபோன மயிலையாள் ஞாபகம் அவனுக்கு வந்துற்றது. 'எங்கே அவளைக் காணோம். நெடுநேரமாயிற்றே!" என்று கருதி அவன் சுற்றுமுற்றும் பார்த்தான்.

அப்பொழுது அவன், தாதி பங்கஜம் கையில் ஒரு தட்டை ஏந்திய வண்ணம் முகமலர்ந்து தன்னை நோக்கி வரக் கண்டான். மாயாதேவிக்குத் துணையாய்ச் சென்ற பங்கஜம், அவளை விட்டுத் தனியே வரக் காரணம் என்னவென்று அரசன் அதிசயித்துக்கொண்டிருக்கையில் பங்கஜம் அவனை நெருங்கித் தன் கையில் கொண்டு வந்த பொற்றட்டை அவன் திருமுன்பு வைத்து வணக்கமாய்க் கைகூப்பி நின்றாள். வெற்றிலைப் பாக்கும், சீனி கற்கண்டும், வாழைக் கனிகளும் நிறைத்து வைத்திருந்த அப் பொற்றட்டைக் கண்டு, அரசன் புன்னகை புரிந்து, பங்கஜத்தை நோக்கி, "என்ன விசேஷம்? மாயா தேவி எங்கே?" என்று விசாரித்தான்.

"மகாராஜரே, மகாராணியார் அவர்கள் ஓர் ஆண்குழந்தையைப் பெற்றிருக்கிறார்கள்" என்றாள் பங்கஜம்.

அதைக் கேட்டதும் அரசன் திடுக்கிட்டான்; ஒரு சில விநாடிகள் ஆனந்தாதிசயத்தில் ஆழ்ந்திருந்தான். பிறகு பங்கஜத்தை நோக்கி, "குழந்தையும் தாயும் க்ஷேமமாயிருக்கிறார்களா?" என்று வினவினான்.

"க்ஷேமமாய் இருக்கிறார்கள். யாதொரு குறைவுமில்லை" என்றாள் பங்கஜம்.

"சந்தோஷம். இதோ நான் வருகிறேன். நீ இந்தத் தட்டை எடுத்துக்கொள்" என்று கூறிச் சுத்தோதனன் ஒரு சிறு கற்கண்டுத் துண்டை எடுத்து வாயிற் போட்டுக் கொண்டு எழுந்தான். பங்கஜம் பொற்றட்டைக் கையில் எடுத்துக்கொண்டு அரசனைத் தொடர்ந்து செல்லத் தயாராய் நின்றாள்.

"இப்பொழுது யார் மாயாதேவியுடன் இருப்பது?" என்று அவளை நோக்கி வினவினான் சுத்தோதனன்.

"எல்லாரும் இருக்கிறார்கள் குழந்தை ஜனனமானவுடன் நான் மருத்துவர், சோதிடர், தாதியர் அனைவர்க்கும் விஷயத்தைத் தெரிவித்து ஆகவேண்டியவற்றைச் செய்யும்படி சொல்லிவிட்டுத்தான் தங்கள் திருச்சமுகத்திற்கு வந்தேன்" என்றாள் பங்கஜம்

"நல்ல காரியம் செய்தாய். ஆனால் நாம் பேசிக்கொண்டு மெதுவாய்ப் போகலாம் வா, போவோம" என்று முன் செல்லத் தொடங்கினான் சுத்தோதனன்.

பங்கஜம் அவனைத் தொடர்ந்து பின் சென்றாள்.

சுத்தோதனன்—"யாரோ, பெண்கள் பலர் கூடிப் பாடுகிற சத்தம் கேட்கிறதே!"

பங்கஜம்—"ஆம், மகாராஜரே. அரண்மனைத் தோழிப் பெண்கள் வாழ்த்துப்பாட்டுப் பாடுகிறார்கள்."

சுத்தோதனன்—"பிறந்த குழந்தைக்கா?"

பங்கஜம்—"ஆம், மகாராஜரே."

சுத்தோதனன்—(புன்னகை செய்து) "தந்தையை எதிர் பாராமலே குழந்தைக்கு எல்லாம் நடக்கிறதே. சந்தோஷம். குழந்தை எப்படியிருக்கிறது?"

பங்கஜம்—"அழகே திரண்டு ஒரு வடிவெடுத்து வந்தாற் போல் இருக்கிறது."

இவ்வாறு பேசிக்கொண்டே சுத்தோதனனும் பங்கஜமும் இறைவி கருவுயிர்த்த இடத்தை நெருங்கினார்கள். சற்றுமுன் திறந்த வெளியாயிருந்த அவ்விடம் இப்பொழுது கலியாண மண்டபம்போல் மாறியிருந்தது. பங்கஜமே அந்த மாறுத

லக் கண்டு ஆச்சரியப்பட்டாள். அவ் வசோக மரத்தைச் சுற்றி ஒரு பெரும் பந்தர் இடப்பட்டிருந்தது. அதைச் சுற்றிப் பல பட்டுத் திரைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. உட்செல்வதற்குப் பிரதான வாயில் ஒன்றும் வேறு சில சிறு வாயில்களும் அமைக்கப்பட்டிருந்தன. அரசன் அந்த நூதனப் பந்தரின் உட்புகுந்தான். எந்த அசோகமரத்தின்கீழ்ப் பிரசவ மாயிற்றோ, அந்த அசோக மரத்தின் கீழேயே, ஒரு மஞ்சத்தின்மீது, மாயாதேவி படுத்திருந்தாள். அவளுக் கருகே அவள் வயிற்றில், உலகுய்யத் திருவவதாரம் செய்த அற்புதக் குழந்தை, கண்டவர் மனத்தைக் காந்தம்போற் கவரும் சுந்தரத் தோற்றத்தோடு படுத்திருந்தது.

அரசன் தன்னை அணுகவும், மாயாதேவி முகம்நாணி மெல்லெனப் படுக்கைவிட்டெழ எத்தனித்தாள். அரசன் அவளைத் தடுத்து, "எழாதே, மாயா. உடம்பை அலட்டாமற் படுத்திரு. தெய்வானுக்கிரகப்படி ஆயிற்று," என்று கூறிக் குழந்தையை மெல்லக் கையில் எடுத்து ஏந்தி, "என் சிந்தையிற் கொண்ட விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வந்த செல்வா! சித்தார்த்தா! நின்னைப் பெற்றதால் நான் அனைத்தையும் பெற்றேன். நீ சர்வார்த்த சித்தி!" என்று கனிவோடு பாராட்டி, முத்தமிட்டுவிட்டு, அதை மறுபடியும் மஞ்சத்தில் தாயருகே கிடத்தினன்.

அப்பால் மன்னன், மாயாதேவியை நோக்கி, "மாயா, உனக்கு உடம்பு எப்படி யிருக்கிறது? மருத்துவர்கள் மருந்து கொடுத்தார்களா?" என்று விசாரித்தான்.

"உடம்புக்கு ஒன்றுமில்லை. கொஞ்சம் பலவீனமாயிருக்கிறது, அவ்வளவுதான். மருத்துவர் கைபார்த்துவிட்டு 'பிரசவித்த உடம்பாகவே தோன்றவில்லை. மருந்துகூட அனாவசியம்' என்றார். எனக்கும் அப்படியே தோன்றியது" என்றாள் மாயாதேவி.

"குழந்தை எப்படி யிருக்கிறது?"

"குழந்தைக்கும் ஒன்றுமில்லை. பால்மட்டும் குடிக்க மாட்டேனென்கிறது."

"பால் குடிக்காவிட்டால்! ———"

"மருத்துவரிடம் சொன்னேன். அவர் 'அதனுல் குற்ற மில்லை. பசியெடுத்தால் தானே குடிக்கும் அதைப்பற்றிக் கவலைவேண்டா' என்ருர்."

"அப்படியன்று, மாயா. அதைக் கவனித்துப் பார்க்க வேண்டும். நல்லது, நீ இங்கிருப்பது சரியன்று. மாளிகையில் பிரசவத்துக்கென்று தக்க இடம் ஒன்று தனியே சித்தப் படுத்தி வைத்திருக்கிறதே. அங்கே போய்விட்டால் நல்ல தன்றோ?"

"வேண்டா. நாதா, குழந்தை ஜனனமான இந்த அசோகமர நிழலை விட்டுப்போக எனக்கு விருப்பமில்லை. அதனுல்தான் இங்கே பந்தரிட்டுத் திரைகள் கட்டச் சொன்னேன் தாங்களே பாருங்கள், இப்பொழுது இவ்விடம் ஒரு கட்டடமாகத் தோற்றுகிறதே யொழியச் சோலையாகவா தோற்றுகிறது! இங்கிருப்பதில் என்ன குற்றம்?"

"மாளிகைக்குள் இருப்பது சௌகரியமாயிருக்கும் என்று நினைத்தேன்."

"இங்கும் சௌகரியத்துக்குக் குறைவில்லையே."

"உன் விருப்பம் அதுவானுல் அப்படியே செய். வேறு விருப்பம் ஏதாவதிருந்தால் அதையும் சொல்லு. அந்தப் படியே செய்விக்கிறேன்."

"கௌதமியோடு தாங்கள் பேசி வெகுநாளாயிற்றன்றோ நமக்குப் புதல்வன் பிறந்த இந்தப் புண்ணிய தினத்தில் தாங்கள் அவள் மனக்குறையை மாற்றவேண்டும்."

"என்ன குறை? அதை எப்படி மாற்றுவது?"

"பேசவில்லை என்ற குறைதான். அதை மாற்ற, நமக்குப் புதல்வன் பிறந்த செய்தியைத் தாங்களே அவளுக்கு அறிவித்து அவளை இங்கு வரச் செய்யவேண்டும்"

"ஆனுல், அவள் இன்னும் இங்கு வரவே இல்லையோ?"

"இல்லை."

அரசன் சிறிது நேரம் ஏதோ சிந்தித்தான். பிறகு மாயா தேவியை நோக்கி, "சரி, உன் விருப்பப்படியே செய்கிறேன். வேறு விருப்பம் ஒன்றும் இல்லையா?" என்றான்.

"இல்லை, நாதா" என்றாள் மாயாதேவி.

"சரி. நான் போய், இன்னும் கொஞ்ச நேரத்தில் திரும்பி வருகிறேன்" என்று சொல்லிச் சுத்தோதனன் சென்றுவிட்டான.

அவன் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் கௌதமி மாயா தேவியை நாடி வந்தாள. நெடுநாளாய் மகிழ்ச்சியற்றிருந்த அவள் முகம், அப்பொழுதுதான் சற்று மகிழ்ச்சியுற்றிருந்தது. அதனால் தனது விருப்பத்தை அரசன் நிறைவேற்றிவிட்டான் என்றுணர்ந்து மாயாதேவி உள்ளம் மகிழ்ந்து கௌதமியை நோக்கிப் புன்னகை செய்தாள.

கௌதமியும் புன்னகை செய்து அவள் அருகுற்று, மஞ்சத்திற் கிடந்த குழந்தையை நோக்கினாள். உடனே அவள் மனத்தில் திடீரென்று ஒரு மாறுதல் தோன்றியது; கண்களில் நீர் ததும்பியது: தன்னையும மறந்து, அக் குழந்தையை எடுத்து முத்தமிட்டு மார்போடணைத்துக் கொண்டாள். பெற்றவளுக்குச் சுரக்காத பாலமுதம் அவளுக்குச் சுரந்தது. குழந்தையும் தன் மெல்லிய பூங்கரங்களால் அவளைத் தழுவிக் கொண்டு, ஆவலோடு பால் குடித்தது.

இவ் விந்தையைக் கண்டு மாயாதேவி அதிசயமும் ஆனந்தமும் ஒருங்கடைந்தாள். அரசனும் பின்னர் இதையறிந்து பேரதிசயமுற்றான்.

அன்றையதினம் நகரெங்கும், 'ஈசான சகாப்தம், அறுபத்தெட்டாம் வருஷம் வைகாசிமாதம் பூர்ணிமையும் விசாக நக்ஷத்திரமும் கூடிய வெள்ளிக்கிழமையாகிய இந்தச்சுபதினத்தில், ராஜராஜேந்திர-சுத்தோதன மகாராஜர்க்குப் புண்ணிய குமாரர் திருவவதாரமாயினர்' என்று அறிவித்துப் பேரிகை முழக்கப் பெற்றது.



## அதிகாரம்—7

## பெற்றவளும் வளர்ப்பவளும்

ஆறு நாட்கள் சென்றன. ஏழாவது நாள் மாலை சுமார் நான்குமணி இருக்கும். மாயாதேவி தெய்வீகமாகத் தான் பெற்ற திருமகவை அருகணைத்துக்கொண்டு மஞ்சத்திற் படுத்திருந்தாள். அவள் உடம்பு மிகவும் இளைத்திருந்தது. முகமும் சிறிது செழுமை குன்றியிருந்தது; ஆயினும் அழகு குறையவில்லை; ஒருவகையில் முன்னையினும் அதிக அழகுற்றிருந்தது என்று சொல்லலாம். அவள் கண்களுக்கு இயற்கையாயிருந்த, சேல்போற் பிறழ்ந்து மிளிரும் இன்பத் தோற்றம் இப்பொழுது இல்லை. ஆனால், அதற்குப் பிரதியாக, கருணாரசம் கனிந்தொழுகும் ஒருவகை அருள்நோக்கம் பொருந்தித் திகழ்ந்தது. அழகின் வடிவாய் அமைந்த அவள் வதனம், இப்பொழுது அமைதிக்கும் சாந்தத்துக்கும் உறைவிடமாய்த் தோன்றியது. மடைதிறந்து ஓடும் வெள்ளம் போலத் தனது கண்திறந்து பாயும் கருணைப் பெருக்கில், தான் பெற்ற மகவுக்குத் திருமஞ்சனம் செய்விப்பாள் போல, அவள் தனது குழவியைக் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தாள்.

பிறந்து ஆறு நாட்களே ஆயினவேனும், அக் குழந்தை ஆறுமாதம் முற்றப்பெற்றது போலத் தோன்றியது. அதன் சுருண்ட மயிரும், பரந்த நெற்றியும், அழகிய கண்களும், தெளிந்த நோக்கமும், பாலொழுகும் மெல்லிதழ்களும், பசும்பொன்னின் திருநிறமும் பார்ப்பவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. தனது சிறு கால்களை உதைத்துக்கொண்டு, கன்னங்கள் குழியச் சிரித்தவண்ணம், அக் குழந்தை தன் அருகிருப்பவர்களை மாறிமாறிப் பார்த்தது.

குழந்தையின் அருகே, மாயாதேவியின் இடப்பாரிசத்தில் கௌதமி உட்கார்ந்திருந்தாள். கௌதமிக்கெதிரே, மாயாதேவியின் வலப்பாரிசத்தில் சுத்தோதனன் அமர்ந்திருந்தான்.

கௌதமியின் தோற்றம் முன்னையினும் இப்பொழுது சற்று நன்றாயிருந்தது. பொச்சாப்பாலும் பொறாமையாலும் ஏற்பட்டிருந்த அவளது முகவிகாரம் முற்றும் மாறிவிட்டது. ஆனால் அவளது வயதுக்கும் அந்தஸ்துக்கும் ஏற்ற பொலி

வும் கிளர்ச்சியும் அவள் முகத்திற் காணப்படவில்லை. உள்ளிருந்து உயிரைச் சிறிது சிறிதாக அரித்தொழிக்கும் கொடிய யனம்நாய்க்கு ஆளானவள்போல, அவள் வாடி வதங்கி வனப்பழிந்திருந்தாள். வெளியிட்டு ஆற்றமுடியாத ஏதோ ஒரு துயரத்தீயால் அவள் உள்ளம் வெதும்பிக் குழைந்துவிட்டதென்பதை, அவளது சோர்ந்த நோக்கம் தெளிவாய்க் காட்டியது. அவளருகே கிடந்த குழந்தை, கால்களை உதைத்தும், கைகளை அசைத்தும், வாயாரச் சிரித்தும் அவளைப் பார்ப்பது, "ஏன் சோர்ந்திருக்கிறாய்? உன் விசனத்தை நான் உதைத்து ஓட்டிவிடுகிறேன். சிரித்து மகிழ்ந்து என்னுடன் விளையாட வா" என்று சொல்லுவதுபோ லிருந்தது. அந்தச் சுந்தரக் குழந்தைமீதே படிந்திருந்த கௌதமியின் பார்வை, சில சமயங்களில் மாயாதேவிமீது சென்று மீண்டது; எதிரேயிருந்த மன்னனை நாடி மறந்தும் சென்றதில்லை.

சுத்தோதனனது கண்ணும் கருத்தும் மாயாதேவிமீதே சென்றிருந்தன. மகப்பேறடைந்ததால், அவனுக்குற்ற மன மகிழ்ச்சியும் முகமலர்ச்சியும், மேகத்தால் மறைபடும் சூரிய கிரணங்கள்போல, ஏதோ ஒரு நினைவால் ஒரொருகால் திடீரென்று மறைவுறலாயின. மாயாதேவி அதை அடிக்கடி கவனித்தாள்; மகிழ்ந்து பேசிவருகையில் அவ்வாறு முகமலர்ச்சி குன்றக் காரணம் யாதாயிருக்கலாம் என்று தனக்குட் சிந்தித்தாள். காரணம் விளங்கவில்லை. 'சந்தர்ப்பம் பார்த்துக் கேட்போம்' என்றெண்ணி, அவள் அரசன் பேச்சில் தனது கவனத்தைச் செலுத்தியிருந்தாள்.

"—அதுமட்டுமா? குழந்தை ஜனனமான விந்தையை நினைத்து நாம் அதிசயமும் ஆனந்தமும் கொண்டிருக்கும் போது, நாற்றிசை அரசரும் விலைமதிப்பில்லா இரத்தினக் கற்களையும் பட்டாடைகளையும் நமக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்தனரே! அதை என்னென்பது! இன்னும் எவ்வளவோ நன்னிமித்தங்கள் நிகழ்ந்தன! அவைகளையெல்லாம் நோக்க, நமக்குக் கிடைத்த மகவு சாமானிய மகவன்று என்பது தெளிவாய்த் தெரிகிறதல்லவா! வர்மனர் சொன்னது சரியாய்த்தான் இருக்கிறது. சாமுத்திரிகா லக்ஷணம் அறிவ

தில் மகாவல்லவரான அந்தணர் ஒருவர் அன்று வந்தனரே. அவர் குழந்தையைப் பார்த்துவிட்டுச் சொல்லியது உனக்கு ஞாபகம் இருக்கிறதா?" என்றான் சுத்தோதனன்.

"ஏதோ, மிகவும் சிறப்பாகத்தான் கூறினார்" என்றாள் மாயாதேவி.

சுத்தோதனன் அவளுக்கு அதை நன்றாய் ஞாபகமூட்டக் கருதி, "அவர் சொல்லியதை நீ சரியாய்க் கவனிக்கவில்லைபோல் இருக்கிறது 'உலக குருவாய் வருவோர்க்குரிய லக்ஷணங்களெல்லாம் இந்தக் குழந்தைக்குப் பூரணமாய் அமைந்துள்ளன. இவன் அஞ்ஞான இருளகற்ற வந்த மெய்ஞ்ஞான ஜோதியாய்த் திகழ்வான். இவனால் உலகம் சீர்திருந்தும்' என்று மொழிந்தனரே. உனக்கு நினைவில்லையா?" என்றான்

"நினைவிருக்கிறது அப்படிப்பட்ட புத்திரனைப் பெற்றால் நாம் கிருதார்த்தர்களானோம். அல்லவா?" என்றாள் மாயாதேவி.

"அதிலும் சந்தேகமா!" என்று சுத்தோதனன் மாயாதேவிக்கு மறுமொழி கூறிவிட்டுத் தொடர்ந்து, "அந்தணர் சொன்ன சொற்களையும், நாம் கண்ட நன்னிமித்தங்களையும் சிந்தித்துப் பார்த்தால், நமது குழந்தை புத்தாவதாரமாயிருக்கலாம் என்று தோன்றுகிறது

'புத்த ஞாயிறு தோன்றுங் காலைத்
திங்களும் ஞாயிறும் தீங்குறா விளங்கத்
தங்கா நாண்மீன் தகைமையின் நடக்கும்;
வானம் பொய்யாது; மாநிலம் வளம்படும்;
ஊனுடை உயிர்கள் உறுதுயர் காணா;
வளிவலம் கொட்கும்; மாதிரம் வளம்படும்;
நளியிரு முந்நீர் நலம்பல தரூஉம்;
கறவை கன்றார்த்திக் கலநிறை பொழியும்;
பறவை பயன்துய்த்(து) உறைபதி நீங்கா;
விலங்கும் மக்களும் வெரூஉப்பகை நீங்கும்;
கலங்கஞர் நரகரும் பேயும் கைவிடும்;
கூனும் குறளும் ஊமும் செவிடும்
மாவும் மருளும் மன்னுயிர் பெறாஅ.'

என்பர். யாம், இந் நிமித்தங்களிற் பெரும்பாலன நிகழக் கண்டோமன்றோ ?" என்றான்.

"உண்மைதான். புத்தனாகும் புண்ணிய மூர்த்தியைப் புத்திரனாய்ப் பெற்ற நாம் எவ்வளவு புண்ணியசாலிகள்! அதிலும் நான் பெரும் புண்ணியசாலி யாய்விட்டேன். பாவ நாசனைப் பத்துமாதம் வயிற்றிற் சுமந்திருந்ததாலே எனது பாவங்களெல்லாம் நசித்திருக்குமன்றோ! இனி எனக்குப் பிறவித் துன்பம் ஏது ?" என்றாள் மாயாதேவி.

அரசன் அதற்குப் பிரதியுத்தரமாக ஏதும் உரையாமல் மௌனமா யிருந்தான். அவன் முக ஒளி மங்கலுற்றது.

"நாதா, ஏன் மௌனமாய் இருக்கிறீர்கள்? தங்கள் திருமுகம் நகையிழந் திருக்கிறதே, ஏன் ?" என்று வினவினாள் மாயாதேவி.

"ஒன்றுமில்லை" என்றான் சுத்தோதனன்.

"பொய் சொல்கிறீர்கள். ஏதோ ஒரு மனக்குறை சில நாட்களாய்த் தங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. நான அதை அடிககடி கவனித்து வருகிறேன். என்னிடத்தில் அதை ஒளியாதீர்கள். தங்களுககு ஒரு குறை இருப்பதாகத் தெரிந் தால் அதை அறிகிற வரையில் என் மனம் சமாதான மடை யாது" என்றாள் மாயாதேவி.

அரசன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். தொண்டை கம்மியது. சிறிது கனைத்துத் தொண்டையைத் தெளிவு செய்து கொண்டு, அவன் மாயாதேவியின் முகத்தை உற்று நோக்கி, "ஒன்றுமில்லை. நீ ஏன் சஞ்சலப்படுகிறாய் ?" என்றான்.

"தங்கள் சஞ்சலந்தான் என்னைச் சஞ்சலப்படுத்துகிறது. வேறு சஞ்சலம் எனக்கு இல்லை அடுத்த நாழிகையில இறக்க நேர்ந்தாலும், யாதொரு மனக்குறையுமின்றி இறப்பேன்" என்றாள் மாயாதேவி.

அதைக் கேட்டதும் சுத்தோதனனது உள்ளம் துணுக் குற்றது; உடல் நடுங்கியது; உரோமம் சிலிர்த்தது. அவன்

பார்வை, மாயாதேவிக்கும் கௌதமிக்கும் இடையே கிடந்த குழந்தைமீது சென்றது. அவன் இரண்டொரு நிமிஷநேரம் குழந்தையை நோக்கியவண்ணம் மௌனமா யிருந்தான்; பிறகு மாயாதேவியைத் திரும்பிப் பார்த்து, "மாயா, உனக்கு உடம்பு எப்படி யிருக்கிறது?" என்று கேட்டான்.

"நன்றாய்த்தான் இருக்கிறது. ஏன் திடீரென்று அப்படிக் கேட்கிறீர்கள்?" என்றாள் மாயாதேவி.

அவள் கேள்விக்கு விடைகூறாமல் சுத்தோதனன், "உடம்பு சிறிதாவது அசௌக்கியமா யிருந்தால் சொல்லு. வெளிநாட்டிலிருந்தேனும் தக்க வைத்தியர்களை வருவித்துப் பார்க்கச் சொல்லுகிறேன். பிரசவித்த உடம்பல்லவா, மிகவும் ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டும்" என்றான்.

மாயாதேவி புன்னகை செய்து "தெரிகிறது. தங்கள் மனோசஞ்சலம் என் உடம்பைப் பற்றித்தான் போலும். நான் இறந்துவிடுவேன் என்று சோதிடர் எவரேனும் சொன்னாரோ?" என்றாள்.

"மாயா, ஏன் அடிக்கடி இறப்பைப்பற்றியே பேசுகிறாய்? நீ சாதாரணமாய் நினைத்துச் சொன்னாலும் அது என் மனத்தை நடுங்கச் செய்கிறது" என்றான் அரசன்.

மாயாதேவி ஒன்றும் உரையாது ஏதோ எண்ணமிட்டுக் கொண்டு மௌனமாய் இருந்தாள். கௌதமியும் சுத்தோதனனும் அவளையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சில விநாடிகள் சென்றன. அப்பால் மாயாதேவி, சுத்தோதனனை நோக்கி, "காதலரே, எங்கே—அன்று கலியாணமண்டபத்தில் தங்கள் உள்ளத்தையும் என் உள்ளத்தையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கட்டுவதுபோல, என் கழுத்தில் மாங்கல்யம் கட்டினீர்களே—அந்த மலர்க்கரம் எங்கே, அதைச் சற்றுக் காட்டுங்கள்" என்று கூறித் தன் வலக்காத்தை நீட்டினாள்.

அவள் கூறிய சொற்கள், யாரோ தன் கண்ணுக்கு மறைவாக எங்கோ வெகுதூரத்திலிருந்து பேசும் சொற்கள்போலச் சுத்தோதனன் செவிக்கு எட்டின. அவன், வசீகர நித்திரையில் தன்வயமிழந்தவன்போலத் தன் உணர்ச்சி ஒரு சிறிதும்

இன்றி, மாயாதேவி சொன்னபடி, தன் வலக்கரத்தை நீட்டி னன். மாயாதேவி அதைத் தன் வலக்கரத்தால் மெல்லப் பற்றி இழுத்துத் தன் கண்ணருகே வைத்து உற்று நோக்கி னள்; பிறகு அதைத் தன் இருகண்களிலும் மாறிமாறி ஒற் றிக்கொண்டாள். அப்பொழுதுதான் அரசனுக்குத் தன் உணர்ச்சி வந்தது. உடனே அவன் தன் கரத்தை வெடுக் கெனப் பின் இழுத்துக்கொண்டு அவள் முகத்தை உற்று நோக்கினன். அவள் கண்களில் நீர் ததும்பியிருந்தது. அதைக் காணவும், இன்னும் அவள்பிடியினின்று விடுபடா திருந்த அவன் கரம் நடுங்கியது அவன் கண்கலங்க, நாக் குழற, மாயாதேவியை நோக்கி, மிகவும் அமைந்த குரலில், "மாயா, என்ன இது! என் வருந்துகிறாய்? தக்க வைத்தி யரை வரவழைக்கிறேன் என்றாலும் வேண்டாமென்கிறாய். உடம்புக்கு ஒன்றுமில்லை என்று ஒரே பேச்சாய்ச் சொல்லி விடுகிறாய். நான் வேறென்ன செய்யக்கூடும்!" என்றான்.

"நாதா, தாங்கள் செய்யக்கூடியது ஒன்றுமில்லை என் உடம்புக்கு ஒன்றுமில்லை என்பதும் உண்மை எந்த வைத்தி யர் வந்து என்ன செய்யக்கூடும்? வைத்தியநாதனை பரமேசு வரன் என் பிறவிப்பிணியை நீக்கிவிட்டான் பிறவித் துன்பம் எனக்கு இன்றோடு ஒழிந்தது. அதற்குத் தாங்கள் சந்தோ ஷப்பட மாட்டீர்களா?" என்றாள் மாயாதேவி.

"நீ சொல்வதொன்றும் எனக்கு விளங்கவில்லையே" என் றான் சுத்தோதனன்.

"விளங்கச் சொல்கிறேன் கேளுங்கள்" என்று மாயா தேவி கூறலானாள்: "நேற்றிரவு நான் ஒரு கனவு கண்டேன். அப்பொழுது மாலைப்பொழுதுபோ லிருந்தது. ஆகாயத்தி லிருந்து கந்தருவர் இருவர் ஒரு புஷ்ப விமானத்தைச் சுமந்து கொண்டு என்னை நாடி வந்து பணிந்து 'அம்மா, தாங்கள் புத்தப்பெருமானைப் பெற்றவர்கள். ஆதலால் பிறவித் துன்பம் தங்களைவிட்டு நீங்கிவிட்டது புத்தர் பிறந்து சரியாய் ஏழு நாட்கள் ஆய்விட்டன இனி அரைக்கணமும் தாங்கள், பிணி மூப்புத் துன்பச் சாக்காடுகளுக்கு இடமான இப் பூவுலகில் இருத்தல் தகாது. பேரின்ப வீட்டுக்கு எழுந்தருளுங்கள்' என்றனர். உடனே நான் இறைவனை இறைஞ்சி அவர்கள்

கொண்டுவந்த விமானத்தில் ஏறி அமர்ந்தேன். அக்கணமே அவர்கள் விமானத்தைத் தூக்கிக்கொண்டு ஆகாய மார்க்க மாய்ப் பறந்து சென்றனர். அப்பொழுது, தாங்கள், கௌதமி, பங்கஜம் முதலியோர் எல்லாரும் நான் உயரச் செல்வது கண்டு அஞ்சி ஓவென்றலறி அழுத சத்தம் என் செவிக் கெட்டியது. உடனே விழித்துக்கொண்டேன். கண்ட கன வின் பொருள் இன்னதென் றறிந்துகொண்டேன். கந்தருவர் கூறியதுபோல, அப்பொழுது புதல்வன் பிறந்து ஏழு நாட்கள் ஆகவில்லை. இன்றுதான் ஏழாவது நாள். இன்னும் ஒரு நாழிகை சென்றால், நமது செல்வன் பிறந்த நேரமாகும் என்று நினைக்கிறேன். அதற்குள் நான் தங்களுக்கும் கௌதமிக்கும் சொல்லவேண்டிய விஷயங்களைச் சொல்லிவிடுகிறேன்."

இதைக் கேட்டதும் அரசன், ஆவி துடிக்க, நெஞ்சு பதைக்க, மாயாதேவியை நெருங்கிவந்து, "என்ன சொல்லப் போகிறாய்? அதைப் பொறுத்துப் பின்னால் சொன்னால் என்ன?" என்றான்.

கௌதமியும் மிகுந்த மனக்கலக்கத்தோடு, அவளை நெரு ங்கி, "அக்காள், என்ன அது? ஏதோ ஒருவகையாய்ப் பேசு கிறீர்களே!" என்றாள்.

மாயாதேவி தன் இடக்கரத்தால் கௌதமியின் வலக்கரத் தைப் பற்றிப் பிடித்துக்கொண்டு தன் கணவனையும் தங்கை யையும் மாறிமாறிப் பார்த்து, "பிராணேசா! தங்காய், கௌதமி!" என்று இருவரையும் அன்போடழைத்து, "நான் கண்ட கனவின் பொருள் உங்களுக்கு விளங்கவில்லையா?" என்றாள்.

இருவரும் ஒன்றும் பதிலுரைக்க ஏலாதவர்களாய் மௌன முற்றிருந்தனர்

"இன்னும் ஒரு நாழிகைக்குள் நான் இறந்து விடு வேன்" என்றாள் மாயாதேவி.

அவ்வுரை, வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற்போல, வேந்தனது செவியில் நுழைந்தது. அவன் வியர்த்து வெய் துயிர்த்துத் தன் இடக்கரத்தால் முகத்தை மூடிக்கொண்டு பெருமூச் செறிந்தான்.

கௌதமியோ, இடியோசை கேட்ட நாகம்போலக் கலங்கி நடுங்கிக் கண்ணீர் உகுத்து, 'அக்காள்!' என்று கூவினாள். அதற்குமேல் அவள் ஏதும கூறமுடியாதபடி, துயரம் தொண்டையை அடைத்தது.

மாயாதேவி அவர்கள் இருவரையும் நோக்கிப் புன்னகை செய்து, "இறப்பேன என்றதும நீங்கள் இவ்வாறு துயருறுவது அழகன்று. இவ்வுடம்பின் இயலென்ன?

'என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோய் சுற்றி னுக்கும் உறையுளாய்ப் புறநதோன் மூடும்
வன்புலை யுடம்பே ஆவி வருத்திடும் பிணிவே றில்லை.'

இப்படிப்பட்ட உடம்பை விட்டு நான் நற்கதியடைவதால் நீங்கள் வருந்தலாமோ? மகிழ்வதன்றோ அறிவுடைமையாகும்! அன்புடையாரை விட்டுப் பிரிவது மனத்தைத் துன்புறுத்தும் என்பது உண்மைதான். ஆனால், இது நிலையான பிரிவன்று. வழியிடைச் சத்திரம்போன்ற இந்த உலகத்தில் எதுதான் நிலையானது! ஒன்றும் நிலையன்று நமது பிரிவும் நிலையுடையதன்று. என்றும் நிலையுள்ளது இறைவன் திருவடி ஒன்றுதான். அவன் திருவடியை அடையக்கூடிய நற்காலம்" (குழந்தையைக் கண்ணால் சுட்டி) 'இதோ, புத்தாவதாரமாக என் வயிற்றில் வந்து பிறந்திருக்கும் இந்தப் புண்ணிய மூர்த்தியால், விரைவிற் கிடைத்துவிட்டது. உரிய காலத்தில் நீங்கள் எல்லாரும் அந்த நிலையான பதவியை அடைவீர்கள். அப்பொழுது நாமனைவரும் ஒன்று சேரலாம் அப்பால் நமக்குப் பிரிவில்லை. ஆதலால், இப்பொழுது நேரும் இந்த நிலையற்ற பிரிவுக்காகத் துக்கப்படாதீர்கள். உங்களை விட்டுப் பிரிவது எனக்கும் ஒரு சிறிது வருத்தமாய்த்தான் இருக்கிறது. ஆயினும், மக்கட் பிறவிக்கு இயற்கையாயுள்ள மாயையின் செயல் அது என்பதை நான் உணர்கிறேன். நீங்களும் அதை உணர்ந்து, என் பிரிவால் மனம் உடையாமல் ஆறியிருங்கள். நான் செல்லும் காலம் மிக நெருங்கிவிட்டதாகையால், என் மனத்தில் உள்ள சில முக்கியமான விஷயங்களைக் கூறிவிடுகிறேன்" என்று தன் கணவனை நோக்கிக் கூறலானாள் :

"என் ஆருயிர்க் காதலரே, அடியாளிடம் தாங்கள் வைத்த அன்பே என்னைப் புனிதப்படுத்தியது. அன்பின் வல்லமை இத்தகைய தென்பதை யான் தங்களால்தான் அறிந்தேன். ஆதலால், அவ்வன்பின் வன்மையால் தாங்கள் இதுகாறும் என்னை எவ்வாறு புனிதப்படுத்தினீர்களோ அவ்வாறே என் தங்கை கௌதமியையும் புனிதப்படுத்துங்கள். தங்களைவிடச் சிறியவள் நான். என்னை விடச் சிறியவள் கௌதமி. ஆதலால், அவள் அறிந்தோ அறியாமலோ இது வரையில் செய்திருக்கக் கூடிய பிழைகள் எவையேனும் இருந்தால் அவைகளை மன்னித்துவிடுங்கள் இனி ஏதேனும் பிழை செய்தாலும், நல்வழி காட்டி அவளைத் திருத்துங்கள்; கடிந்து வெறுத்து ஒதுக்கிவிடாதீர்கள். இதுதான் எனது கடைசி வேண்டுகோள்" (கௌதமியின் கரத்தை இழுத்துச் சுத்தோதனன் கரத்தில் வைத்து,) "இதோ, நான் என் தங்கையை அடைக்கலமாகத் தங்கள் கையில் ஒப்புவித்துவிட்டேன்."

இவ்வாறு கூறிவந்ததைக் கேட்கக் கேட்கச் சுத்தோதனனுக்குத் துயரம் பொங்கியது. அவன் தாரை தாரையாய்க் கண்ணீர் வடித்துப் பொருமினான். கௌதமி முகத்தை முன்தானையால் மூடிக்கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள். மாயாதேவியின் கண்களிற் கலங்கி நின்ற நீரும் சிறு துளிகளாய்த் திரண்டு சொட்டியது. அவள் தன் கணவனையும் தங்கையையும் பற்றியிருந்த பிடியை விட்டுவிட்டு, தன் கண்களில் அரும்பிய நீரை அவர்கள் காணாமல் துடைத்துக் கொண்டு கௌதமியை நோக்கி, "கௌதமி நான் உனக்குச் சொல்ல வேண்டுவது அதிகமில்லை. நீ யாருக்குச் சுதந்தரமாயினையோ, அவர் கையில் உன்னை ஒப்புவித்து விட்டேன். அவர் சர்வோத்தமர்; உன்னைக் கைவிடமாட்டார் அவர் மனங்கோணாமல் நடந்து நீ கடைத்தேறு. என்னைப்பற்றி நான் உனக்குச் சொல்லவேண்டுவது ஒன்றுண்டு உன் வாழ்க்கைக்கு நான் இடையூறாயிருப்பதாக உனக்குத் தோன்றியிருக்கலாம் அப்படித் தோன்றுவது இயல்புதான். அதை நான் குற்றமாகக் கொள்ளவில்லை. ஆனால், உன் வாழ்க்கைக்கு என் மனமார நான் ஓர் இடையூறும் செய்ததில்லை. என் மனச்சாக்ஷி அறியச் சொல்கிறேன். இதை நீ

நிச்சயமாய் நம்பு. என்னையும் அறியாமல் நான் எவ்வகையிலாவது உனக்கு இடையூறாய் இருந்திருக்கக்கூடும். அப்படியிருந்தால், தமக்கை என்ற முறையை நினைத்து நீ அதை மறந்துவிடு" (கௌதமி ஓவென்று வாய்விட்டுக் கதறுகிறாள்.) "அழாதே. பொறு இன்னும் நான் உனக்குச் சொல்ல வேண்டுவது ஒன்றுண்டு அதையும் கேள். எனக்குக் குழந்தை பிறந்தது; உனக்குப் பால் சுரந்தது. இதனாலேயே, பெற்றவள் நானும் வளர்ப்பவள் நீயுமாய் இருக்கவேண்டும் என்பது தெய்வசித்தம் எனத் தெரிகிறதன்றோ? ஆதலால், இந்தச் சிசுவை வளர்ப்பது உன்னைப் பொறுத்த கடமை. எந்தக் காரணத்தை உத்தேசித்தும், அந்தக் கடமையை நிறைவேற்றுவதில் நீ அணுவளவும் தவறக் கூடாது இந்தக் குழந்தை சாமானியமானதன்று இதை வளர்க்கும் உனக்கு நான் அதிகம் சொல்லவேண்டுவதில்லை. பாலகனது ஸ்பரிச மகிமையால் நீயே எல்லாவற்றையும் அறிந்துகொள்வாய். எனது பிறவியை ஈடேற்ற வந்த அந்தப் புண்ணிய மூர்த்தியை இப்படி எடு என் கண்குளிர அதைப் பார்த்துவிட்டுச் செல்கிறேன்" என்று,தன் இரு கைகளையும் நீட்டினாள்.

கௌதமி, கண்ணீரால் நனைந்திருந்த தன் முகத்தை முன்தானையால் துடைத்துக்கொண்டு, குழந்தையை எடுத்து மாயாதேவியிடம் கொடுத்தாள். மாயாதேவி அதைவாங்கித் தன் மார்பகத்தில் வைத்துப் புன்னகை செய்தவண்ணம் சிறிது நேரம் அதை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். குழந்தை தன் இரு சிறு பாதங்களாலும் அவள் முகத்தில் உதைத்தது. மாயாதேவி, ஒரு கையால் குழந்தையைப் பிடித்துக்கொண்டு, மறு கையால் அதன் பாதங்களைப் பற்றிப பலமுறை முத்தமிட்டாள். பிறகு, அதைத் தூக்கிக் கௌதமியிடம் கொடுத்து, "எடுத்துக்கொள் பத்திரமாய்ப் பாதுகாத்து வளர்த்து வா" என்றாள்.

கௌதமி அவள் கொடுத்த குழந்தையை வாங்கி முன் போலக் கிடத்திவிட்டு, கன்னத்திற கைவைத்துத் தலையிறங்கிக் கண்சோர்ந்திருந்தாள். சுத்தோதனனும் குனிந்த தலை நிமிராமல், சோர்ந்த கண் இமையாமல் இருந்தான். மாயா

தேவி கண்களை ஏறிட்டு மஞ்சத்தின் விதானத்தைக் கூர்ந்து
பார்த்துக்கொண்டிருந்தாள்.

சுமார் ஐந்து நிமிஷநேரம் மூவரும் மௌனமுற்றிருந்த
னர். அது அவர்களுக்கு ஒரு கற்பகாலம் போலத் தோற்றி
யது. உலகமே ஓய்வுற்றிருப்பது போலக் காணப்பட்டது.
சோலையில் வீசும் காற்றும் விரைந்தோட அஞ்சியதுபோல,
மெல்ல மெல்ல அசைந்தது. பக்ஷிகள் கூவாமற் பறந்தன.
அங்குமிங்கும் சென்றுகொண்டிருந்த தாதிகள், வளையல்கள்
குலுங்குமென்று பயந்து கைவீசாமல் அடிமேல் அடிவைத்
துப் பூம்பாவைகள்போல நடந்தார்கள். சூரியன் தன் கிர
ணங்களை யெல்லாம் ஒடுக்கிக்கொண்டு மேற்றிசைக்கோடியில்
ஒதுங்கி நின்றான். கப்பலோடி மறைந்த நெடுங்கடல்போல
வானம் வெறுமையுற் றிருந்தது.

அண்டபிண்ட சராசரங்கள் யாவுமே அயர்ந்திருப்பது
போற் காணப்பட்ட அந்தச் சமயத்தில், ஓம் என ஓர் இன்
னொலி எழுந்தது. குழந்தை ஜனனமான நாள் முதல் ஒவ்
வொரு நாளும் அதே வேளையில் மங்கையர் சிலர் மாளிகையி
லிருந்து வீணைமீட்டிப் பாட்டிசைப்பது வழக்கம். அவ்
வழக்கப்படியே இப்பொழுதும் அவர்கள் பாடுதற்கு ஆயத்
தமாய் வீணையை மீட்டிச் சுருதி கூட்டினார்கள். அவ்
வொலியே, நிறைந்து தோன்றிய அமைதியிடையே, ஓமென்
றெழுந்தது. அதற்கிசையத் தானும் இராககமனம் செய்ய
விரும்பியவள்போல, மாயாதேவி மேலே பார்த்தபடி,
ஓமென இசைக்கத் தொடங்கினாள். அதைக் கேட்டதும்,
சுத்தோதனனும் கௌதமியும் யாது காரணத்தாலோ திடுக்
கிட்டு, மஞ்சத்தைவிட் டிறங்கி மாயாதேவியின் தலைமாட்
டருகே சென்று மிகவும் கவலையுடன் அவள் முகத்தை உற்று
நோக்கி, 'மாயா' என்றனர்.

மாயாதேவி, கணவனையும் தங்கையையும் கடைக்கண்
ணால் நோக்கினாள். பிறகு, அவள் பார்வை குழந்தையின்
மீது சென்று ஒரு நிமிஷநேரம் தங்கியிருந்தது. அப்பால்,
அவள் கண்ணிணையின் கருவிழிகள் இரண்டும் ஒன்றை
யொன்று நெருங்கி மேல்நோக்கின. அவள் முன்கரங்கள்
இரண்டும் மெல்லென மேலெழுந்தன. கைவிரல்கள் ஒன்றோ

டொன்று கோப்புண்டன. அங்ஙனம் இணைந்த மலர்க்கைகள், நெஞ்சை அணைத்துத் தழுவிக்கொண்டாற்போல, அவள் மார்பகத்தில் படிந்தன. மேலே நோக்கிய கண்கள் இரண்டும், குவளைமலர் இரண்டு குவிவதெனக் குவிந்து மூடுண்டன. அடங்கி நடந்த அவளது சுவாசம், நெய்வற்றிய தீபம்போல ஓய்வுற்று நின்றது

அரசன் அவள் நெற்றியைத் தொட்டுப் பார்த்தான். நெற்றி சில்லென்றிருந்தது உடனே அவன் கையை அப்பால் எடுத்து அவள் முகத்தை உற்று நோக்கினான். அவன் இடக் கரம் மஞ்சத்தைப் பற்றியிருந்தது. மாயாதேவியின் நெற்றியைவிட்டு எடுத்த வலக்கரம் அவள் தலையணைமீது ஊன்றியிருந்தது. அந் நிலையில் அவன் பிரதிமைபோல அசைவற்று நின்றான்.

கௌதமி, அரசன் நிற்கும் நிலையைப் பார்த்தாள்; மாயாதேவியின் முகத்தைப் பார்த்தாள்; குனிந்து முகத்தோடு முகம்வைத்து அவளை முத்தமிட்டாள்; நிமிர்ந்தாள்; 'அக்காள்!' என்றாள்; முகத்தில் அறைந்து கொண்டாள்; தெய்வமே! இதுவோ உன் நீதி' என்று கூறி மஞ்சத்தின்மீது குப்புறச் சாய்ந்து விழுந்து விம்மிவிம்மி யழுதாள். தன்னை மீறி எழுந்த துயரம் சிறிது ஆறி அடங்கும்வரையில் பலபல பண்ணிப் புலம்பினாள்; பிறகு எழுந்தாள்; பல்லைக் கடித்தாள்; கையை நெரித்தாள்; தன் பலங் கொண்டமட்டும் ஓங்கித் தலையில் அடித்துக் கொண்டாள். முடி நெகிழ்ந்திருந்த அவள் கூந்தல் சோர்ந்து விழுந்து தொங்கியது. அழுததாற் சிவந்து இமை வீங்கியிருந்த தன் கண்களால் அவள் மாயாதேவியின் உயிர்ப்பற்ற முகத்தை உற்றுப் பார்த்துவிட்டு, மார்பின்மேற் கோத்து வைத்திருந்த அவள் கைகளைத் தன் கையால் தொட்டாள். தொட்ட கையை அக்கணமே வெடுக்கெனப் பின்னிழுத்து, "பாவியேன் கையால் உன்னைத் தொடவும் தகுமோ!" என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு, எதிர் நின்ற அரசனை ஏறெடுத்துப் பார்த்தாள்.

அரசன் இன்னும் அப்படியே, பிரதிமைபோல நின்று கொண்டிருந்தான். கௌதமி மஞ்சத்தைச் சுற்றி அரசனெதிர் சென்று நின்று, துணிவும் தீரமும் தொனிக்க "அரசே!

என்றாள். அரசன் கண்கள் இமைத்தன. அவ்வளவுதான். அவன் கௌதமியைக் கண்ணெடுத்துப் பார்க்கவுமில்லை; அவள் அழைத்ததற்கு ஏன் என்று கேட்கவுமில்லை. கௌதமி அதனால் சற்றும் மனந்தளர்ந்தவளாகக் காணப்படவில்லை. அவன் காது கொடுத்துக் கேளாவிட்டாலும் தான் சொல்ல வந்ததைச் சொல்லிவிடுவதெனத் தீர்மானித்தவள்போல, அவள் தன் பார்வையை அரசன் முகத்திற் பதித்து, "அரசே, நான் யார் தெரியுமா?" என்றாள்.

அப்பொழுதுதான் அரசன் சற்று அசைந்தான்; கடைக் கண்ணால் அவளைப் பார்த்தான்; மறுகணமே அந்தப் பார்வையை மீட்டு, அவளைப் பார்ப்பதொழிந்தது, முன்னிருந்தவாறே, கற்சிலை நிற்பதென நின்றான். கௌதமி அனைத்தையும் கண்டாள்; ஆனால், மனத்தில் எதையும் கொண்டாள் இல்லை. தான் என்ன சொல்ல வந்தாளோ அதைச் சொல்லியொழிப் பதிலேயே கருத்தாய், அரசன் முகத்திற் பதித்த பார்வையை அப்பால் அகற்றாமற் கூறுவாளாயினள்:

"அமுதுடன் பிறந்த நஞ்சு நான். சீதேவியுடன் பிறந்த மூதேவி நான். அந்த மூதேவி முன் பிறந்தாள்; நான் பின் பிறந்தேன். என்னைவிடக் கொடியபிறவி வேறெதுவும் இராது. எனக்கு முன்னே பிறந்து, எனக்கு முன்னே இதோ இறந்து கிடக்கும் இவளைவிடச் சிறந்த ஒரு பிறவியும் வேறில்லை. இவளும் நானும் எவ்வாறு ஒரே தாய்வயிற்றிற் பிறந்தோம் என்பது எனக்கே விளங்கவில்லை. பூவுடன் கூடிய நாரும் மணம் பெறுகிறது. நானோ நாரினும் கீழானேன். நல்லாள் உடன் பிறந்தும் பொல்லாளானேன். எனக்குத் தமக்கையும் தாயும் தோழியுமாயிருந்த இந்த உத்தமிக்கு நான் செய்த பொல்லாங்குகளை நினைத்தால் என் மனமே கூசுகிறது. அவ்வாறாக, எவ்வாறு அவைகளை வாய்விட்டுரைப்பேன்! வாய்விட்டுரைப்பதைவிட உயிர்விட் டொழியலாம் ஆயினும், உரைக்கத் துணிந்தேன். ஏன்? உள்ளதை உரையாவிட்டால் என் உயிர் உடலைவிட்டு ஒழியாது. அரசே! தாங்கள் செலுத்தும் நீதியும் தண்டமும் எவ்வளவுதூரம் செல்லும்! தர்மாலயத்தின் வாயிற்படிவரையுங்கூடச் செல்வது அரிது செல்லும்வரையிற் சீராகச் செல்லும் என்ற நிச்சயமேனும் உண்டா? இல்லை.

'பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே! மெய்போ லும்மே!
மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையாற்
பொய்போ லும்மே! பொய்போ லும்மே!'

ஆதலால, பொய்யை மெய்யாகவும், மெய்யைப் பொய்யாகவும் கொண்டு நீதியும தண்டமும் நெறிதவறக் கூடும். ஆனால், தர்மதேவதைக்குத் தங்கள் செங்கோலைவிடச் சிறந்த செங் கோல் வேறொன்றுண்டு. அது செலுத்தும் நீதி இம்மியளவும் நெறிதவறுவதில்லை. அதுவே மனச்சாக்ஷி. நான் செய்த பொல் லாங்குகளுக்குத் தகுந்த அரசாக்கினை எனக்கு இன்னும் கிட்டவில்லை மனச்சாக்ஷியின் ஆக்கினை அப்பொழுதே தொடங் கிவிட்டது. இதுகாறும் நான் பட்ட மனோவேதனை இவ்வள வென்று சொல்லமுடியாது. ஆனால், நான் செய்த பெரும் பழிக்கு அதுவும் தகும, அதற்கு மேலும் தகும்.

"நான் செய்த பெரும்பழி என்ன, தெரியுமா? பஞ்சமா பாதகங்களுள் முதன்மையான கொலை. இந்த உத்தமியை, என் உடன்பிறந்த தமக்கையை, எத்தனையோமுறை கொல்ல வகை தேடினேன். என் சூழ்ச்சிகள் ஒன்றும பயன்படவில்லை என்பது உண்மை. அதோடு போயிருந்தால் என் மனோ வேதனை அவ்வளவு அதிகமாயிராது ஆனால், ஒரு கொலைக் குச் சூழ்ச்சி தேடிய நான் வேறு இருகொலைக்குக் காரணமாய் விட்டேன். காமாக்ஷியும் தாமோதரனும் இறந்தது என்னால் தான். என் தமக்கையைக் கொல்லும்படி நான் அவர்களைத் தூண்டினேன். தெய்வசங்கற்பத்தால், என் தமக்கை உயிர் தப்பினாள்; அவர்கள் உயிரிழந்தார்கள். அதற்குப் பின்னும் நான் எத்தனையோ முறை என் தமக்கையின் உயிரைப் போக்க முயன்றேன். என் முயற்சிகள் பயன்படவில்லை. விதிவசத்தால் இப்பொழுது அவள் தானே இறந்துவிட்டாள். அவளுடைய பிரிவைப் பொறுக்க என்னால் முடியவில்லை."

இவ்வாறு அவள் கூறவும், அரசன் சிறிது திரும்பி அவள் முகத்தைப் பார்த்தான். கௌதமி அதைக் கவனி யாமல் தன் உரையைத் தொடர்ந்து, "நானே கொல்லக் கரு திய தமக்கை, தானே இறந்ததற்கு இப்பொழுது நான் விச னப்படுகிறேன். இது தங்களுக்கு அதிசயமாகத் தோற்ற

லாட. ஆனால், எனது விசனம் உண்மையானது. என் தமக்கை பெற்ற குழந்தை இதோ கிடக்கிறது. எப்பொழுது இதைக் கண்ணுற் கண்டேனோ, அப்பொழுதே என் மனம் மாறி விட்டது. என்னையும் அறியாமல் என் உணர்வு தெளி வடைந்தது. ஆனால், அதைப்பற்றி இப்பொழுது ஆகவேண்டு வது ஒன்றுமில்லை. என் தமக்கை இறந்துவிட்டாள். நான் இனி உயிர் தரித்திரேன். தற்கொலை செய்துகொள்ளலாம். அதற்கு அஞ்சுகிறேன். ஏன்? உயிர்விட மனமில்லாமலா? இல்லை. எக்கொலையும் பாவமானால் தற்கொலையும் பாவந் தானே. பண்ணிய பாவம் போதும். மற்றொன்று செய்ய எனக்கு மனமில்லை. ஆதலால், அரசே! தங்களுக்குரிய அரசநீதிப்படி, கொலைகாரியான என்னைத் தாங்களே கொன் றுவிடுங்கள்," என்றாள்.

அரசன் அவளை உற்றுப் பார்த்தபடியே ஸ்தம்பித்து நின்றான். கௌதமியும் அவனை உற்றுப் பார்த்தபடியே நின் றாள். சில விநாடிகள் சென்றன. அப்பால் கௌதமி, அர சனை இன்னும் சிறிது நெருங்கி, "ஏன் தாமதிக்கிறீர்கள்? யோசனை என்ன? எப்படிக் கொல்வதென்றோ? இதோ இருக்கிறதே தங்கள் சிற்றுடைவாள்" என்று அரசன் இடை யில் என்றும் அகலாதிருக்கும் சிற்றுடைவாள் ஒன்றைப் பற்றி உறையினின்றும் அதனை வெடுக்கென உருவினாள். அரசன் திடுக்கிட்டுப் பொருக்கெனப் பின்வாங்கி நின்று அவளை வெறித்து நோக்கினான். கௌதமி, கையிலுருவிய வாளை அரசனெதிர் நீட்டி, 'பிடியுங்கள் வாளை. கொல்லுங் கள் என்னை. என் உயிர் வல்லுயிரானாலும், இவ் வாள் போதும் அவ் வுயிரைப் போக்க. போக்கிவிடுங்கள் சீக்கி ரம்" என்றாள். சுத்தோதனன், அவள் நீட்டிய வாளை வாங்கி, அப்பால் வீசி எறிந்தான். வாள் ஒரு மூலையிற்போய் விழுந்தது.

கௌதமி, மூலையில் விழுந்த வாளைச் சிறிதுநேரம் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்து, பிறகு அரசனை நோக்கி, "அரசே, தங்கள் கருத்தை அறிந்துகொண்டேன். என் உடல் தங்கள் வாளால் வெட்டுண்ணத் தகுதியுடையதன்றுபோலும். நல் லது, தாங்கள் எனக்குச் சிரசாக்கினை விதித்ததாகத் தங்க

ளுக்குக் கீழ்ப்பட்ட நியாயாதிகாரியிடம் நானே சென்று தெரிவித்து எனக்குரிய தண்டனையை ஏற்றுக்கொள்கிறேன்," என்று கூறி வெளியே செல்லத் திரும்பினாள். அதுகாறும் மௌனம் சாதித்து நின்ற அரசன் அப்பொழுதுதான் வாய் திறந்து, "கௌதமி, நில்லு" என்று கூறி அவள் கையைப் பிடித்திழுத்து அவளை நிறுத்தினான். அதுகாறும் கௌதமிக் கிருந்த தீரமும் துணிவும் அப்பொழுதுதான் தளரத் தொடங்கின. அவள் கண்களில் வற்றிய நீர் மீண்டும் சுரக்கத் தொடங்கியது. "ஏன் என்னைத் தடுக்கிறீர்கள்? வேண்டா. தண்டனையைத் தாமதப்படுத்தி என் மனோவேதனையை அதிகப்படுத்தாதீர்கள். நான் கொடியளானாலும் தாங்கள் கொடியராகாதீர்கள்" என்று விழிநீர் பெருகத் தழுதழுத்த மொழிகளால் கல்லென்ற நெஞ்சும் இளகி இழுதெனஉருக உரை நவின்று, கண் சோர்ந்து மெய்சோர்ந்து நின்றாள்.

சுத்தோதனன் கண்களிலும் நீர் ததும்பியது. அவன் அவளை நோக்கி, "கௌதமி, நீ செய்த கொடுஞ்செயல்களை நீயே உணர்ந்து வருந்துகின்றனை. அது போதும் மாயா தேவியை உதாசீனம் செய்ததும், அவள் உன்னிடம் ஒப்புவித்த குழந்தையை உதாசீனம் செய்ததும் உன்னுடைய குற்றங்கள் அனைத்தையும் நான் மன்னித்துவிட்டேன். உன் மனோவேதனையை மாற்றப் பிறர் எவராலும் ஆகாது உன் குணம் திருந்தத் திருந்த அந்த வேதனையும் மாறி மறைந்துபோகும். வேறெதற்கில்லாவிட்டாலும், உன் தமக்கை மரணத்தறுவாயில் தெரிவித்த விருப்பத்தை நிறைவேற்றுவதற்கேனும் நீ உயிர்வைத்திருக்கவேண்டியவளாயிருக்கிறாய் ஆதலால், உயிர்விடும் எண்ணத்தை விட்டொழி. மாயாதேவி இறந்துவிட்டாள்.

'புத்தன்தாய் நண்(டு)இப்பி வாழை புனமூங்கில
கத்தூரி விரியன் கடுஞ்சிலந்தி—இத்தனையும்
வேலாலும் வாளாலும் அன்றியே தாம்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு'

என்னும் உலகவசனம் மெய்யாயிற்று. என் காதலரசியின் உயிர்ப்பற்ற முகத்தைப் பார்த்தால் என் நெஞ்சம் பிளக்கிறது. இனி இங்கிருக்க என்னால் முடியாது செல்கிறேன். மந்திரிக்குச் செய்தி சொல்லியனுப்புகிறேன். அவர் வந்து தக

னக்கிரியைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார். நீயும் இங்கிராதே. குழந்தை, பிரேதத்தருகே கிடக்கக்கூடாது. அதை எடுத்துக்கொண்டு மாளிகைக்குள் சென்றிரு. குழந்தையை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்" என்று கூறி வெளியே சென்றுவிட்டான். கௌதமி, சிந்தைகலங்கியவளாய், அரசன் கட்டளைப்படி குழந்தையை எடுத்துக்கொண்டு மாளிகைக்குச் சென்றாள்.



அதிகாரம்—8.

## சிற்றிளம் பருவம்

'ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ! மாநிலத்தீர்,—வேண்டா:
நமக்கும் அதுவழியே. நாம்போ மளவும்
நமக்கென்னென் றிட்டுண் டிரும்'.

என்னும் ஔவைப் பிராட்டியார் உபதேச நெறியைக் கடைப்பிடித் தொழுகுவது, பற்றற்ற பரமஞானியர்க்கன்றிப் பிறர் எவர்க்கும் எளிதன்று. மனத்துக்கு உகந்தவர் மாண்டொழிந்தால், அதனால் ஏற்படும் துயரை ஆற்ற வல்லது, மாண்டவர் மீளார் என்ற உணர்ச்சியுமன்று; துயருற்றுப் பயனில்லை என்ற ஞானமுமன்று; நாமும் ஒரு நாள் மடிந்தொழிவோம் என்ற உண்மையுமன்று: வேறு யாதெனின், காலம் ஒன்றே யாம்.

காலத்தால் மாறாதது, என்றும் அழியாப் பரம்பொருள் ஒன்று தவிர, வேறு எது உண்டு? இன்பம், துன்பம், துயரம், மகிழ்ச்சி முதலிய யாவற்றையும் காலம் உருக்குலைத்துவிடுகிறது. மாயாதேவியின் பிரிவால் சுத்தோதனன் முதலியோர்க்கு உண்டான பெருந்துயரத்தையும் அந்தக் காலம் என்னும் வைரவாளே சிறிது சிறிதாகக் குறைத்துக்கொண்டுவந்தது.

ஆயினும், சுத்தோதனன் முகத்தில், முன்னிருந்த கிளர்ச்சி இப்பொழுது இல்லை. மாயாதேவி உயிருடனிருந்தபொழுது அவன், ராஜ்யவிவகாரம், நூலாராய்ச்சி, தெய்வதியானம் முதலியவைகளில் ஈடுபட்டிருக்கும் சில சமயங்களில் அவளை

மறந்திருப்பதுண்டு. இப்பொழுதோ மாயாதேவியின் ஞாபகம் அவன் மனத்தில் இடையறாது குடிகொண்டிருந்தது. உருவைப் பிரியா நிழல்போல அவள் அவன் நினைவைப் பிரியாது தொடர்ந்திருந்தாள். அவள் இறந்து ஐந்தாறு வருஷங்களாயினவேனும், சுத்தோதனனுக்கு அவள் நேற்றுத்தான இறந்தவள்போலத் தோன்றினாள். குழந்தையைக் காணும்போது, அவன் முகம் அலருமாயினும், அப்பொழுது தான் மாயாதேவியின் ஞாபகம் மிகவும் தெளிவாக அவனுக்குத் தோன்றும் சிறுவன அவ்வளவுதூரம தாயின் சாயலாக இருந்தான

கௌதமியே சிறுவனை வளர்த்துவந்தாள். கௌதமியின் தோற்றம முன்னையைவிட இப்பொழுது எவ்வளவோ திருந்தியிருந்தது. இப்பொழுது தான் அவள மாயாதேவியின் சகோதரியாகக் காணப்பட்டாள். அவள் தன் தமக்கை உயிருடனிருந்தபோது அவளமீது எவ்வளவு பகைமை பாராட்டினாளோ, அவ்வளவுக் கவவளவு இப்பொழுது அவள்மீது அன்பு பாராட்டினாள். சிற்சில சமயங்களில தமக்கையை நினைந்துக்கொண்டு மாலை மாலையாய்க் கண்ணீர் உகுப்பாள். ஆனால், அவ்வளவுதூரம் துயரம் தன்னைமீறி வெளிப்படுவதற்கு அவள் அதிகமாய் இடங்கொடுப்பதில்லை ஏனென்றால், சிறுவன அவள் அழுவதைக்கண்டால் தானும் அழத் தொடங்கிவிடுவான். அதுமட்டுமன்று. அவள் சற்று முகம் வாடியிருந்தால், அவன் அவள் கன்னத்தைக் கிள்ளியும், கழுத்தைக் கட்டியும, மூடிண்ட அவள் இதழ்களைத் தன் சிறு விரல்களால் திறந்தும் அவளை முகமலர்ந்து நகைக்கும்படி செய்துவிடுவான. அதனால், கௌதமியிடம் துயரம நிலைகொள்ள இடம் இல்லாமற் போயிற்று.

மரணகாலத்தில் மாயாதேவி தன்வசம் ஒப்புவித்த அந்தக் குழந்தையே தனக்கு எல்லாச் செல்வமும் எல்லா இன்பமும் என்றெண்ணிக் கௌதமி அதை மிகவும் அருமையாக வளர்த்து வந்தாள். நெறிப்படி குழந்தைக்கு நாமகரணம் செய்தபோது, தந்தையின் விருப்பத்திற்கிணங்க, ' சித்தார்த்தர் ' என்று பெயரிடப்பெற்றது அப்பெயராலேயே சுத்தோதனன் குழந்தையை அழைப்பது வழக்கம்; சில சமயங்களில் 'சர்

வார்த்த சித்தி' என்றும் அழைப்பதுண்டு மற்றையோர் பலரும், கௌதம கோத்திரம் விளங்கவந்த சிறுவா ஆதலால், அவருக்குக் 'கௌதமர்' என்று பெயா வழங்கிவந்தார்கள். கௌதமியோ, 'என் செல்வமே' என்றுதான் சிறுவரை அழைப்பாள்.

கௌதமிக்கு, மாயாதேவி இறந்தபிறகு. ஓர் ஆண் குழந்தையும பெண்குழந்தையும் பிறந்திருந்தன. ஆண் குழந்தைக்கு நந்தன் என்றும, பெண் குழந்தைக்கு உரூபநந்தை என்றும பெயா. நந்தன், சித்தார்த்தனுக்கு இரண்டு வயது இளையவன் உரூபநந்தை என்னும் பெண் குழந்தை நந்தன் பிறந்த மூன்றாவது வருஷம் பிறந்தது இப்பொழுது நான் அதற்கு முதல் வயது முடிந்து இரண்டாவது வயது தொடங்கியது தன் வயிற்றிற் பிறந்த இந்த இரண்டு குழந்தைகளையும், கௌதமி அவ்வளவாகக் கவனிப்பதில்லை. அவளது கருத்தெல்லாம் கௌதமா மேலதான.

கௌதமருக்கு நான்கு வயது நிரம்பும்வரையில், அவர் கௌதமியைவிட்டுப் பிரிந்திருக்கமாட்டார அவளும் அவரைப் பிரியவிடமாட்டாள். ஐந்தாவது வயதில், சித்தார்த்தருக்கு முறைப்படி வித்தியாரம்பம் செய்விக்கப் பெற்றது. அதுமுதல் அவா தினந்தோறும் காலையிலும மாலையிலும் சிறிதுநேரம் கௌதமியை விட்டுப் பிரிந்திருக்க வேண்டியவரானார். அது கௌதமிக்கு மிகவும் மனவருத்தத்தையும் முகவாட்டத்தையும உண்டுபண்ணியது அதை நினைத்துத் தான் இப்பொழுதும் வருந்தப்பட்டுக்கொண்டு, அவள் தனது உப்பரிகையின் முன்கட்டில் ஒரு சாய்மணைமீது சாய்ந்து கொண்டிருந்தாள். அவள் அருகே, தரையில் விரிக்கப்பட்டிருந்த இரத்தினக் கம்பளத்தின்மீது, குழந்தை உரூநந்தையைத் தோள்மீது சார்த்திக்கொண்டு. தாதி பங்கஜம் உட்கார்ந்திருந்தாள். அப்பொழுது மாலை ஐந்துமணி இருக்கும். கௌதமி ஜன்னல் வழியாய் வெளியே ஆகாயத்தைப் பார்த்து விட்டுப் பங்கஜத்தை நோக்கி, "பங்கஜம், பொழுது போய் விட்டதே. எங்கே, என் செல்வம் இன்னும் வரக்காணேம்!" என்றாள்.

பங்கஜம்—"வருகிற வேளைதான். விளக்குவைக்க இரண்டு நாழிகை இருக்கும்போதுதானே, வித்தியாப்பியாசம் முடியும்."

கௌதமி—"நல்ல வித்தியாப்பியாசம்!"

பங்கஜம்—(சிரித்துக்கொண்டு) "ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் நாளைக்கு ராஜாவாகச் சிம்மாசனத்தில் அமரவேண்டிய குழந்தையல்லவா? இன்றைக்கே தெரியவேண்டிய வித்தைகளைத் தெரிந்துகொண்டால்தான் நாளைக்கு ராஜ்யத்தை நன்றாய் ஆளலாம்.'

கௌதமி—"உண்மைதான் நீ சொல்வது—அதிருக்கட்டும் பங்கஜம், நீ சற்று யோசித்துப்பார். 'குழந்தை இல்லை' என்று எத்தனையோபேர் குறைப்படுகிறார்களே, ஏன்?"

பங்கஜம்—' ஏன் என்றால்?—குழந்தைப் பாக்கியத்தை விடச் சிறந்த பாக்கியம் வேறென்ன இருக்கிறது!"

கௌதமி—"அதைத்தானே நான் கேட்கிறேன். என்ன வகையில் எல்லாப் பாக்கியங்களிலும் குழந்தைப் பாக்கியம் சிறந்தது? அஷ்ட ஐஸ்வரியம் என்கிறார்கள் மக்கள், மகுடம், தனம், தானியம், ரத்தினம், பந்து, வாகனம், அடிமை—என்னும் அந்த எட்டு வகைச் செல்வத்தில், மக்கட் செல்வத்தைவிட நிலையில்லாத செல்வம் வேறு எது?"

பங்கஜம்—"புத்திரபாக்கியமா நிலையில்லையென்று சொல்கிறீர்கள்?"

கௌதமி—"நான் சொல்வதென்ன! உனக்கே தோன்றவில்லையா? மற்ற ஐஸ்வரியங்களை ஒரு கணம் அனுபவித்து மறுகணத்தில் இழந்தாலும் இழக்கலாம்; ஆயுள் முழுவதும் அனுபவித்தாலும் அனுபவிக்கலாம். புத்திர ஐஸ்வரியம் அப்படி இல்லையே!"

பங்கஜம்—"ஏன் இல்லை?"

கௌதமி—"இருந்தாலும் அனுபவிக்க முடியாமல் இதற்கொரு வரையறை ஏற்பட்டுவிடுகிறது, பார். குழந்தை என்பதெல்லாம் ஐந்து வயதுவரையில் தானே!"

பங்கஜம்—"அதற்கு மேல்?——"

கௌதமி—"அது வித்தியாப்பியாசம் செய்யப் போய் விடுகிறது. வித்தியாப்பியாசம் முடிந்தால் உத்தியோகஞ் செய்யப் போய்விடுகிறது. அப்பால பெற்றவள் அதைப் பார்ப்பது கூட அரிதாய் விடுகிறது!"

பங்கஜம் — (சிரித்துக்கொண்டு) "பின்னை என்ன? பிறந்த குழந்தை என்றும் குழந்தையாகவே இருந்துவிட வேண்டுமோ?"

கௌதமி—"ஆமாம் அப்படியிருந்துவிட்டால் எனக்கு மிகவும் திருப்தியாயிருக்கும்."

பங்கஜம் —(கல்லென்று சிரித்து) "நல்ல கதைதான்! தங்கள் திருப்திக்குச் சிருஷ்டிக் கிரமமே மாறவேண்டும்."

கௌதமி—"இதென்ன சிருஷ்டிக் கிரமம்! அக்கிரமந்தான். நீயே பார் நான்கு வருஷகாலமாக என் செல்வன் என்னைவிட்டு அரைக்கணமும் பிரியாமலிருந்தான். இப்பொழுது வித்தியாப்பியாசத்துக்குப் போய்விட்டான் அவனுக்கு வித்தியாரம்பம் செய்த நாளாய், பகற்பொழுது முழுவதும் அவனைக் கண்ணால் பார்ப்பதே அருமையாய்விட்டது. அவன் என்னருகே இல்லாவிட்டால் எனக்குப் பொழுதுபோகிறது என்ன கஷ்டமாயிருக்கிறது தெரியுமா!"

பங்கஜம்—"கஷ்டந்தான்."

கௌதமி—"பொழுது விடிந்தால் எப்பொழுது போகும் என்றிருக்கிறது. இரவானால் விடியாமலிராதா என்று தோன்றுகிறது."

பங்கஜம்—"அப்படி நினைக்கலாமா? விடியாமல் இருந்தால் விடியாமலே போய்விடும். குழந்தை படித்துத் தேர்ந்தால், நாலுபேர் புத்திசாலியென்று மெச்சுவார்கள் அது நமது காதில் விழுந்தால் அதைவிட வேறு ஆனந்தம் என்ன!"

கௌதமி—"என் செல்வன் படித்துத்தான் புத்திசாலியாக வேண்டுமா என்ன! இப்பொழுதே அவனுடைய புத்திசாலித்தனத்தைக் கண்டு எல்லாரும் ஆச்சரியப்படுகிறார்களே!"

பங்கஜம் — "வாஸ்தவந்தான். அப்படிப்பட்ட குழந்தை படித்தால் இன்னும் எவ்வளவு புத்திசாலியாகும்!"

கௌதமி—'சாதாரண பிள்ளைகள் தானடி படித்துப் புத்திசாலிகளாகவேண்டும். என் செல்வன் சாதாரணமான பிள்ளையா? ஓதாமல் உணரும் அற்புத மூர்த்தியாயிற்றே! அவனுடைய யுக்தியும் புத்தியும் குணமும் நிறமும் யாருக்கு வரும்!"

பங்கஜம்—"தடையென்ன! இந்த வயதில் இவ்வளவு புத்திசாலியான பிள்ளை வேறெதையும் நான் இதுவரையில் பார்த்ததேயில்லை."

கௌதமி "இனித்தான் பார்க்கப் போகிறாயா என்ன! ஒருநாளுமில்லை என் செல்வன் சாமானிய மகவல்லடி. ஏதோ தெய்வாவதாரம்! ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறேன் கேள்: ஒருநாள் நானும் மகாராஜாவும் ஊஞ்சலிலிருந்து என்னவோ பேசிக்கொண்டிருந்தோம். பக்கத்தில் நந்தனும் என் செல்வனும் சிறு தேர் உருட்டி விளையாடிக்கொண்டிருந்தார்கள். குழந்தை உரூபநந்தை தொட்டிலிற் படுத்திருந்தாள். நீ அப்பொழுது குழந்தையண்டை இல்லை ஏதோ வேலையாய் நான்தான் உன்னை அனுப்பியிருந்தேன்"

பங்கஜம்—"இருக்கலாம். இல்லாவிட்டால் நான் குழந்தையைவிட்டு எங்கும் போயிருக்கமாட்டேன்."

கௌதமி — "அப்பொழுது, இருந்தாற்போலிருந்து குழந்தை அழுதது உடனே, விளையாடிக்கொண்டிருந்த என் செல்வன், விளையாட்டை விட்டுவிட்டு விரைந்தோடித் தொட்டிலை ஆட்டினான். நானும் மகாராஜாவும் அதைப் பார்த்தும் பாராதவர்கள்போல் பேசிக்கொண்டிருந்தோம். சிறிதுநேரம் என் செல்வன் தொட்டிலை ஆட்டிக் குழந்தையின் அழுகையை ஓய்விக்கப் பார்த்தான். குழந்தை அழுவதை நிறுத்தவில்லை. அதன்மேல் அவன் என்னிடம் ஓடிவந்து 'அம்மா, அம்மா! பாப்பா அழுகிறது! ஓடி வாருங்கள். எடுத்துப் பால் கொடுங்கள்' என்றான். நான் எழுந்துபோய்க் குழந்தையின் அழுகையை ஓய்விக்க என்னென்னவோ செய்து பார்த்தேன் ஒன்றும் பயன்படவில்லை. குழந்தை ஓயாமல் அழுதுகொண்டேயிருந்தது."

பங்கஜம்—" ஏன் அப்படி அழுதது ?"

கௌதமி—" பொறு சொல்கிறேன். ஏன் அப்படி ஓயாமல் அழுகிறது என்று எனக்கு விளங்கவில்லை. மகாராஜாவுக்கும் ஒன்றும் தோன்றவில்லை. செய்வதென்னதென்று அறியாது நாங்கள் கவலைப்பட்டுக்கொண்டிருந்தோம். அப்போது என் செல்வன் என்ன செய்தான் தெரியுமா ? தொட்டிலின் கீழே கிடந்த ஒரு பொம்மையை எடுத்துவந்து, என்னிடம் கொடுத்து, 'அம்மா, இந்தப் பொம்மை பாப்பாவுடையது. வைத்து விளையாடிக்கொண்டிருந்தது. தவறிக் கீழே போட்டு விட்டிருக்கும் அதனால்தான் அழுகிறது. இதைப் பாப்பாவிடம் கொடுங்கள். அப்புறம் அழாது' என்றான். அவன் விருப்பப்படி நான் பொம்மையை வாங்கிக் குழந்தை கையில் கொடுத்தேன். உடனே, என் செல்வன் சொன்னபடி குழந்தை அழுவதை நிறுத்திவிட்டது."

பங்கஜம்—" என்ன ஆச்சரியம் !"

கௌதமி—" ஒரு விதத்திலா ! பால் மணம் மாறாப் பாலகன் ! அவனுக்குத் தோன்றிய யோசனை எனக்கும் தோன்றவில்லை, மகாராஜாவுக்கும் தோன்றவில்லையே ! நந்தனுக்கும் வயது நாலாயிற்றே. அவனுக்கு, என் செல்வனுக்குள்ள கருத்திலும் அறிவிலும் காற்கூறு கூட இல்லையே !"

பங்கஜம்—" இன்னும் இரண்டு வயது சென்றால், சின்ன ராஜாவும் அப்படி ஆய்விடுவார்."

கௌதமி—" நினைக்கிறையா என்ன ! என்ன வயதானாலும் நந்தன் என் செல்வனுக்கு ஈடாகமாட்டான்."

பங்கஜம் " என்னவோ பார்ப்போம். எங்கே அவரைக் காணோம் ?"

கௌதமி—" யாரை ?"

பங்கஜம்—" சின்னராஜாவைத்தான் "

கௌதமி—" நந்தனா ? கீழே யாரிடத்திலாவது விளையாடிக்கொண்டிருப்பான்."

பங்கஜம்—"யாரிடத்தி லாவதென்றால்? — கொஞ்சம் குழந்தையை வைத்துக் கொள்கிறீர்களா? நான் போய் அவரைத் தேடிப்பார்த்து அழைத்து வருகிறேன்."

"குழந்தையைக் கொடு வைத்துக் கொள்கிறேன். நந்தனை அழைத்து வருவது பிறகாகட்டும் நீ முன்னே கலா கூடத்துக்குப்போய் என் செல்வனை அழைத்து வா" என்றாள் கௌதமி

பங்கஜம், தன் தோளிற் சார்த்தியிருந்த குழந்தை உரூபநந்தையைக் கௌதமியிடம் கொடுத்துவிட்டு எழுந்தாள். கௌதமி, குழந்தையை வாங்கி மடி மீது வைத்துக்கொண்டு பங்கஜத்தை நோக்கி, "போ சீக்கிரம் போய் என் செல்வனை அழைத்து வா. அப்படியே உபாத்தியாயரைக் கண்டு, குழந்தையை அனுப்புவதற்கு என் இவ்வளவு தாமதமாகிறது என்று விசாரித்து வா. இனிமேல் இப்படித் தாமதப் படுத்தவேண்டாம் என்று நான் சொல்லச் சொன்னதாகவும் சொல்' என்றாள்.

"நல்லது," என்று பங்கஜம் சித்தார்த்தரை அழைத்துவர அரண்மனைக் கலாகூடம் நாடிச் சென்றாள்

* * * *

அரண்மனைக் கலாகூடம் என்பது, சித்தார்த்தர் பிறந்த பிறகு கட்டப்பட்ட ஓர் அழகிய கட்டடம். அது அரண்மனை எல்லைக்குள்ளாகவே, தென்பாரிசத்தில் மனைக்கும் மதிலுக்கும் இடைப்பட்ட தோட்டத்தின் நடுவே அமைந்திருந்தது. அடுத்திருந்த ராஜமாளிகையை நோக்க அது அளவில் சிறுத்துக் காட்டியது ஆயினும் சிற்ப சித்திர அலங்காரங்களில் ராஜமாளிகையைவிட அது மிகவும் சிறந்திருந்தது. எண் கோணமாய் அமைந்த அக்கட்டடம் முழுவதும் மாசுமறுவற்ற வெள்ளைச் சலவைக்கல்லால் நிருமாணஞ்செய்யப்பெற்றிருந்தது. சந்தனமரத்தாற் செய்யப்பட்ட அறுபத்துநான்கு பெருந்தூண்கள் அதைத் தாங்கி நின்றன. கட்டடத்தின் கீழ்ப்புறத்தில் பிரதான வாயிலும், வடபுறத்திலும் தென்புறத்திலுமாக இரண்டு உபவாயில்களும் இருந்தன. பிரதான வாயிலில் நால்வரும், உபவாயில்களில் ஈரிருவருமாக எண்மர் காவல்வீரர்கள் கட்டடத்தைக் காத்திருந்தார்கள்.

கட்டடத்தின் மேற்கோடியில், வெள்ளியாற்செய்த அறு கால் விமானம் ஒன்றிருந்தது. அதன் நடுவே ஆணிமுத்தால் அமைத்த நாற்கால் பீடம் ஒன்றில், அலர்ந்து விரிந்த வெண்டாமரை வடிவாய் வைரம் வைத்திழைத்த தங்க ஆசனத்தில், ஸ்படிகத்திற் கடைந்தெடுத்த சரஸ்வதி விக்கிரகம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதன் எதிரே, கட்டடத்தின் மத்தியபாகத்தில் வெண்பட்டு விரிக்கப்பெற்ற சதுர மேடை ஒன்று இருந்தது. அதுவே கலாமேடை.

அதன் வடபுறத்தில், சித்தார்த்தனுக்கு வித்தை கற்பிக்கு மாறு நியமிக்கப்பட்ட உபாத்தியாயர் உட்கார்ந்திருந்தார். அவர் ஒரு கம்பீர புருஷர்; பிராமணோத்தமர்; அறிவிற் சிறந்தவர்; குணத்தில் உயர்ந்தவர்; வடிவிற் பெரியவர்; வயதில் முதிர்ந்தவர்; மித்திரர் என்னும் பெயரினர். செழித்து வளர்ந்து மார்பளவும் தொங்கிய அவரது தாடியிலாகட்டும், சேர்த்து முடித்த அவரது சிகையிலாகட்டும், ஆசைக்கேனும் ஒரு கறுப்புமயிர் காணமுடியாது. அரசன் ஒருவன் தனது செங்கோலை எவ்வளவு பெருமையாகக் கையிற் பற்றியிருப்பானோ, அவ்வளவு பெருமையாக அவர் ஒரு பிரப்பங்கோலைத் தமது கையிற் பற்றியிருந்தார். ஆனால், அதை அவர் ஒருபொழுதும் கையாளுவதில்லை. இவ்வுண்மையை மாணவர்கள் நன்கறிவார்கள்.

அவரிடம் கல்விபயின்ற மாணவர்களில் பிரதானமானவர்கள் நால்வர். சித்தார்த்தரே பிரதம மாணவர். இரண்டாவது மாணவன் ஆனந்தன்; மூன்றாவது மாணவன் தேவதத்தன். இவர்கள் இருவரும் சித்தார்த்தரது சிறிய தந்தையின் குமாரர்கள். நான்காவது மாணவன் உதாயி என்னும் ஒரு பிராமணச் சிறுவன். இந்த நான்கு மாணவர்களும சுவடியுங் கையுமாய் உபாத்தியாயர் எதிரே தென்புறத்தில் அமர்ந்திருந்தனர்.

ஜனகாதி நால்வருடன் கல்லாலின் கீழமர்ந்த தக்ஷிணாமூர்த்திபோல் விளங்கினார் மித்திரர்.

கலைபயிலுதல் முடியும் நேரம் நெருங்கியது. மித்திரர் கம் மாணவர்களை நோக்கி, "இப்பொழுது சொல்லிக்கொடுத்தவைகளை நன்றாய் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். நாளைய

தினம் கேட்பேன். தட்டுத் தடங்கலில்லாமல் சொல்லவேண்டும்" என்றார்.

"அப்படியே சுவாமி" என்றார்கள் சிறுவர்கள்

"நல்லது, நீங்கள் ஸ்தோத்திரம் சொல்லிவிட்டுப் போவதற்குமுன், நேற்று பகலைஞ ஜாவது நிகண்டு சொல்லத் தொடங்கி, முதல் சூத்திரம் கற்பித்தேன் அல்லவா? அதைப் பாராமல் சொல்லிவிட்டுப் போங்கள். பேருக்கு ஒவ்வோர் அடியாய்ச் சொன்னால் போதும்" என்று கூறிச் சித்தார்த்தனை நோக்கி, "எங்கே, கௌதம, நீ உனக்குரிய முதல் அடியைச் சொல்லு பார்க்கலாம்" என்றார்.

உடனே சித்தார்த்தர்,

'பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனேபுத்தன்

என்று பாட்டின் முதலடியைக் கூறி நிறுத்தினார்.

"அப்பால்—" என்று அடுத்த மாணவனை நோக்கினார் மித்திரர். உடனே அம் மாணவன்,

'பகலே நாளொரு முகூர்த்தம பகலவன் நடுவே தேசு

என்று பாட்டின் இரண்டாவது அடியைக் கூறி நிறுத்தினான். பிறகு உபாத்தியாயர் மூன்றாவது மாணவனை நோக்க, அவன்,

'மகரமே சுறுப்பூந் தாதாம் வசிகூர்மை வசியம் வாளே

என்று பாட்டின் மூன்றாவது அடியைக் கூறி நிறுத்தினான். மித்திரர் நான்காவது மாணவனைப் பார்த்தார் அவன் உபாத்தியாயரைப் பார்த்துப் பசுபசவென்று விழித்தான். ஒருவிநாடியாயிற்று; இரண்டு விநாடியாயிற்று அவன் தன் கண்களை மட்டும் அகலத் திறந்திருந்தானே யொழிய வாயைத் திறந்தானில்லை. மித்திரர் ருத்திரராய் விட்டார்; கண்களை உருட்டி விழித்தார்; பற்களைக் கடித்தார்; தமது பிரப்பங்கோலை ஓங்கினார்; "என்னடா விழிக்கிறாய்? ஒரு நாளைக்கு ஒரு சூத்திரம் கூடப் பாடம்பண்ண முடியவில்லையோ? வாயில் என்ன இருக்கிறது? திறவடா வாயை!" என்றார்.

மாணவன் வாயைத் திறந்தான்; "பாடம் பண்ணினேன். கடைசி அடி மட்டுந்தான் மறந்துபோய் விட்டது" என்று நடுங்கிக்கொண்டு சொன்னான்.

மித்திரர் கோபம் அடங்கியது; ஓங்கிய கோலும் தாழ்ந்தது. அவர் அவனைப் பார்த்து "பிராமணப் பிள்ளையென்று பெயர் வைத்துக்கொண்டு ஒரு சூத்திரம் பாராயணம் செய்ய முடியாமல் இருக்கிறையே, உனக்கு வெட்கமில்லையா? நீ எப்படியடா வேதபாராயணம் செய்யப்போகிறாய்? உன்னிலும் இளையவன், ராஜகுமாரன், அவனுக்குப் படிப்பில் உள்ள கருத்தில் கால்கூறுகூட இல்லையே உனக்கு!" என்று கூறி விட்டுச் சித்தார்த்தனை நோக்கி, "எங்கே, கௌதமா, நீ சொல்லப் பார்க்கலாம் அந்த நான்காவது அடியை" என்றார். அவர் சொல்லி வாய் மூடு முன்னே,

'அகமன மனையே பாவ மகலிடம் உள்ளு மாமே'

என்று சித்தார்த்தர் அந்த அடியைக் கூறி முடித்துவிட்டார்.

"பேஷ்! பாடம்படித்தால் அப்படித்தான் படிக்கவேண்டும்" என்று மித்திரர் சித்தார்த்தனை மெச்சிவிட்டு அவனையும் அவருக்கு அடுத்திருந்த மாணவர்களையும் நோக்கி, "நீங்கள் தோத்திரம் சொல்லிவிட்டுப் போங்கள்" என்றார்.

பாடம் துவங்கும் முன் விநாயகர் தோத்திரம், சரஸ்வதி தோத்திரம், குருதோத்திரம் மூன்றும் சொல்வதும்; பாடம் முடிந்ததும், சரஸ்வதி தோத்திரமும் குரு தோத்திரமும் மட்டும் சொல்லிச் செல்வதும் மாணவர்களுக்கு ஏற்பட்டிருந்த முறை. அம் முறைப்படியே, மாணவர்கள்,

'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை,— தூய
உருப்பளிங்கு போல்வாள் என் உள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்'

என்று சரஸ்வதியையும்,

'தந்தைதாய் ஆவானும் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும்—எந்தமுயிர்
தானாகு வானும் சரணாகு வானும்அருட்
கோனாகு வானும் குரு'

என்று தமது குருவையும் தோத்திரம் செய்துவிட்டு, தத்தம் சுவடிக் கட்டையும் எழுத்தாணியையும் எடுத்துக்கொண்டு எழுந்து மேடையைவிட் டிறங்கினார்கள். எப்பொழுதும்

போல கௌதமரும், ஆனந்தனும், தேவதத்தனும் உடனே அவ்விடம் விட்டுப் போய்விடவில்லை. உபாத்தியாயருக்குப் பின்னால் ஒரு தூணடியில் நின்றுகொண்டிருந்தார்கள். தங்கள் தோழன் நான்காவது மாணவன் கதி என்ன ஆகிறது என்று அறியாமற் போவதற்கு அவர்களுக்கு மனமில்லை.

குற்றம் ருசுவாகி நியாயாதிபதி முன் நிற்கும் கைதி, தனக்கு விதிக்கப்படும் தண்டனை யாதென்றறிய எவ்வளவு கவலையும் ஆவலும் கொண்டிருப்பானோ, அதற்கு மேலான கவலையும் ஆவலும் கொண்டிருந்தான் நான்காவது மாணவன். மித்திரர் அவனை நோக்கி, "அடே உதாயி, நீ புத்திசாலி, கருத்தாய்ப் படிப்பாய் என்றெண்ணி, நான் உன்னை ராஜகுமாரனோடு சேர்த்துப் படிப்புச் சொல்லிக்கொடுத்து வருகிறேன். நான் எதிர்பார்த்தபடி நீ படிப்பதாய்க் காணோம். இனிமேல் இப்படியிருந்தால் நான் உன்னை இங்கே சேர்த்துக்கொள்ள மாட்டேன். தெரியுமா?" என்றார்.

உதாயி அஞ்சி நடுங்கி "தெரியும்" என்று மெல்லக் கூறினான்.

"என்ன தெரியும்?" என்று கடிந்துகேட்டார் மித்திரர்.

"இனிமேல் சரியாய்ப் படித்து விடுகிறேன்" என்று கெஞ்சினான் உதாயி.

உபாத்தியாயர்க்குக் கோபம் தணிந்துவிட்டது. அவர் அவனைக் கருணையுடன் நோக்கி, "உதாயி, சித்தார்த்தன் சார்பில் நீ இங்கே படிக்கிறாய். அவன் ராஜகுமாரன். படிப்பில் மனம் செலுத்துவது கஷ்டம். இருந்தும் அவன் உங்கள் எல்லாரையும்விட எவ்வளவு அக்கறையாகக் கருத்துவைத்துப் படிக்கிறான் பார். நீ வேதமோதிப் பிழைக்கவேண்டிய பிராமணன். படிப்பில் இவ்வளவு அலக்ஷியமாய் இருக்கலாமா?" என்றார்.

உதாயி தைரியம் கொண்டான். 'இனிமேல் எப்படியாவது ஆகட்டும். இப்பொழுது யாதொரு தண்டனையுமில்லாமல் தப்பித்துக்கொண்டோமே. இதுவே போதும்' என்றெண்ணி மனமகிழ்ந்து குருவை நோக்கி, "சுவாமீ, இனிமேல் நான் சரியாய்ப் படித்துவருகிறேன்" என்றான்.

"சரி. கீழிறங்கி அப்படி நின்று, இப்பொழுது படிக்கத் தவறிய செய்யுளைப் பாடஞ்செய்து ஒப்புவித்து விட்டுப் போ. நாழிகை என்னவாறாலும் சரி. செய்யுளை ஒப்புவிக்காமற் போகக்கூடாது" என்றார் உபாத்தியாயர்.

மாணவனுக்குக் கணநேரம் தோன்றியிருந்த மகிழ்ச்சி மறைந்துபோயிற்று. அவன் முகவாட்டத்துடன் மேடையைவிட்டுக் கீழிறங்கி நின்று நிகண்டையும் தன ஞாபகக் குறைவையும் நொந்துகொண்டு, அச் செய்யுளை உருப்போடத் தொடங்கினான்.

அதுவரையில் பொறுமையாய் நின்று நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்த மூவரில், தேவதத்தன் சித்தார்த்தனை நோக்கி, "ஏன், வா. நாம் போகலாம்" என்று மெதுவாய் அழைத்தான்

"கொஞ்சம் இருங்கள். உதாயி பாடம் ஒப்புவித்து விட்டு வந்துவிடுவான். அவனையும் அழைத்துக்கொண்டு போகலாம்" என்றார் சித்தார்த்தர்

அதற்குத் தேவதத்தன் சம்மதிக்கவில்லை

"நாம் எல்லாரும் போய்விட்டால், உதாயி தன்னந்தனியனாய் இருப்பான் நீங்கள் இருவரும் வேண்டுமானால் போங்கள் ஒருவர்க்கொருவர் துணையாய் இருக்கும். நான் உதாயி போம்போதுதான் போவேன்" என்றார் சித்தார்த்தர்.

"ஆனால் சரி. உன் இஷ்டம்போல் செய் உதாயி பாடம் ஒப்புவிப்பதற்குள் விளக்கு வைத்துவிடும். நாங்கள் போகிறோம்" என்று கூறி தேவதத்தன் ஆனந்தனையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு போய்விட்டான்.

அவர்கள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் பங்கஜம் அங்கு வந்து மித்திரரை நோக்கிக் கை கூப்பி நமஸ்கரித்தாள். மித்திரர் அவளைப் பார்த்துப் புன்னகை செய்து, "என்ன பங்கஜம். எது இங்கே வந்தது?" என்றார்.

பங்கஜம் மிகவும் பணிவுடன், "சுவாமீ, ராஜாவை அழைத்து வரும்படி ராணியார் என்னை அனுப்பினார்கள்," என்றாள்.

மித்திரர் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்துச் சித்தார்த்தரை நோக்கி, ' என் அப்பா, கௌதமா! நீ இன்னும் அரண்மனைக்குப் போகவில்லையா! நீ போய்விட்டாய் என்றன்றோ இருக்கிறேன் " என்றார்.

" இல்லை, சுவாமி. உதாயியை அழைத்துக்கொண்டு போகலாம் என்றிருக்கிறேன் " என்றார் சித்தார்த்தர்.

மித்திரர் சிரித்துக்கொண்டு, " இவனுக்காகவா காத்திருக்கிறாய் ? " என்று கூறிவிட்டு உதாயியை நோக்கி, " என்னடா, பாடம் பண்ணிவிட்டாயா ? " என்றார்.

" இன்னும் அரையடி இருக்கிறது சுவாமி " என்றான் உதாயி.

" நீ அரையடி பாடம் பண்ணுவதற்குள் அஸ்தமித்துவிடும் போலத் தோன்ற நாளைக்காவது சரியாய்ப் பாடம் பண்ணிக்கொண்டு வா " என்று அவனுக்குச் சொல்லிவிட்டுப் பங்கஜத்தை நோக்கி, " இந்த மடையனுக்காகக் கௌதமன் காத்திருப்பதை நான் கவனிக்கவில்லை. சாஸ்திராப்பியாசம் முன்னமே முடிந்துவிட்டது. நீ கௌதமனை அழைத்துப் போ " என்றார்.

" நல்லது சுவாமி, இனிமேல் குழந்தையைத் தாமதப்படுத்தாமல் அனுப்பிவிடும்படி ராணியார் சொல்லச் சொன்னார்கள் " என்றாள் பங்கஜம்.

மித்திரர் புன்னகைசெய்து, " அப்படியே ஆகட்டும். கௌதமன் ஒருபொழுதும் தாமதஞ்செய்யமாட்டான். நீ அழைத்துக்கொண்டு போ " என்றார்.

பங்கஜம் உபாத்தியாயருக்கு நமஸ்காரம் செய்துவிட்டுக் கௌதமனை அழைத்துக்கொண்டு சென்றாள். கௌதமர் கலாகூடத்தின் வாயிலைக் கடக்கவும், காவல வீரர் நால்வரில் இருவர், அவருக்கு இருபுறத்திலுமாக வந்து அவருடன் சென்றனர். அரண்மனையிலிருந்து வெளிவரும்போதும், அரண்மனைக்குச் செல்லும்போதும் மெய்காப்பாளராக வீரர் இருவர் கௌதமருடன் செல்லவேண்டுமென்பது ராஜ ஆக்ஞை. அதன்படியே காவல் வீரர் இருவரும் தம்மைக் காத்து

வர, இளஞ்சிங்கம்போல் செல்லும் சிறுவர் சித்தார்த்தர் தம் தோழன் உதாயியை நோக்கி, "நீ ஏன் பாடத்தைச் சரியாய்ப் படிக்காமல் வருகிறாய்?" என்றார்

அதற்கு உதாயி "இல்லை, கௌதமா, அந்தப் பாழும் நிகண்டைப் பாராயணம் செய்வது எனக்குக் கஷ்டமாயிருக்கிறது," என்றான்.

"இருந்தாலும் கொஞ்சம் கஷ்டப்பட்டுப் பாடம் பண்ணிவிடு. உனக்கும் நல்லது, எனக்கும் நல்லது உபாத்தியாயரும் சந்தோஷப்படுவார்" என்றார் சித்தார்த்தர்.

உதாயி — "அதற்கென்ன. இனிமேல் எப்படியாவது அதைப் பாராயணம் செய்துவிடுகிறேன்."

சித்தார்த்தர் — "ஆமாம். அப்படியே செய். இல்லாவிட்டால் உன்னால் எனக்குக் கஷ்டம் உண்டாய்விடும்"

உதாயி — "என்னால் உனக்கென்ன கஷ்டம்?"

சித்தார்த்தர் — "நீ சரியாய்ப் படிக்காவிட்டால், உன்னை இங்கே சேர்த்துக்கொள்ள மாட்டேன் என்று உபாத்தியாயர் சொன்னாரன்றோ?"

உதாயி — "ஆமாம் அதனால் உனக்கென்ன?"

சித்தார்த்தர் — "யோசித்துப் பார். உன்னை அவர் இங்கே சேர்த்துக்கொள்ளாவிட்டால், அப்புறம் நான் உன்னை எப்படிப் பார்க்கக் கூடும்?"

உதாயி — "பார்க்காவிட்டால் என்ன? எப்படியும் நான் உன்னைப் பார்ப்பேன் மகாராஜா உன்னைத் தேர்மேல் ஏற்றிக்கொண்டு கோவிலுக்குப் போம்போது நான் என் வீட்டுத் திண்ணைமேல் ஏறி நின்றுகொண்டு உன்னைப் பார்ப்பேன்"

சித்தார்த்தர் — "எனக்கு உன் வீடு எதுவென்றுகூடத் தெரியாதே நான் எப்படி உன்னைப் பார்ப்பேன். ஒருநாள் நீ ஏதோ காரணமாய்க் கலாகூடத்துக்கு வாராமல் நின்றுவிட்டையே,——".

உதாயி — "ஆமாம். என் பாட்டி ஸ்ரார்த்தத்தன்று."

சித்தார்த்தர் —" அன்று உன்னைப் பாராமல் இருந்தது எனக்கு எவ்வளவு கஷ்டமாயிருந்தது! அப்படியிருக்க அடியோடு பார்க்க முடியாமற்போனால் என்ன செய்வது! எனக்காகவாவது நீ இனிமேல் சரியாய்ப் படித்து வந்துவிடு."

உதாயி — " ஆகட்டும்."

இப்படிப் பேசிக்கொண்டே கௌதமர் அரண்மனை போய்ச் சேர்ந்தார்



## அதிகாரம் — 9

## அஸ்தமயகிரியில் அஸிதமாமுனிவர்

அப்பொழுதுதான், கோலிய தேசத்தினின்று தன்னைப் பார்த்துப்போக வந்த தன் மைத்துனன் சுப்பிரபுத்தனுடன் அளவளாவிக் கொண்டிருந்த சுதத்தாதனன், சித்தார்த்தர் தன்னை நோக்கி வருவது கண்டு முகமலர்ந்து, " இதோ வந்துவிட்டான் கௌதமன் — குழந்தாய், கௌதமா, விரைந்து வா. உன் மாமனார் உன்னைப் பார்க்க வந்திருக்கிறாரே!" என்றான்.

சித்தார்த்தர் விரைந்தோடித் தம் தந்தையருகுற்று, எதிரிருந்த தம் மாமனை ஏறெடுத்துப் பார்த்துவிட்டுத் தலைகுனிந்து சிரித்துக்கொண்டு நின்றார்.

சுப்பிரபுத்தன், கௌதமரது அழகையும் வடிவையும் கண்டு அதிசயமெய்தி, சில விநாடிகள் கண்ணிமையாமல் அவரையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான்

'முதிர்ந்தழ கொழுகு மாறு முகங்களுட் சிறந்த ஒன்றோ
டெதிர்ந்துள முருக னென்ன இளமையோ டழகு வாய்ப்ப'

பத்தரை மாற்றுத் தங்கம்போல ஞானதேஜசு ஜொலிக்கும் திருமுகத்தில் பாலமணம் மாறா மெல்லிதழ்கள் சற்றே திறந்திருக்க, முத்துச்சரம் போன்ற பற்கள் சிறிதே தெரிய, ஒன்றோடு ஒப்பிட முடியாத அபூர்வ அழகும் வடிவும் வாய்ந்த கண்களின் கருவிழிகள் இரண்டும் ஒன்றையொன்று துரத்தி விளையாடும் கருவண்டுகள் இரண்டைப்போல ஓடி ஓடி மீளும்

படி, குனிந்த வண்ணமே தன்னைப் பார்ப்பதும் மீண்டும் நிலத்தைப் பார்ப்பதுமாய் நின்றுகொண்டிருந்த சிறுவரைப் பார்க்கப்பார்க்கச் சுப்பிரபுத்தனுக்கு ஆனந்தம் பொங்கியது. அவன் ஆவலோடு சிறுவரைத் தூக்கியெடுத்துத் தன் மடிமீது வைத்துக்கொண்டு, "என்ன, கௌதமா, நான் வந்தால் என்னோடு பேசாமல் இருக்கிறாயே! யாப்பிள்ளை முறுக்கா?" என்றான்.

கௌதமர் சிரித்துக்கொண்டு ஒன்றும் பதில் சொல்லாதிருந்தார்.

சுத்தோதனனும் சிரித்துக்கொண்டு கௌதமரை நோக்கி, "சித்தார்த்தா, உன் மாமனும் மாமியும் நீ பிறந்தபோது வந்துவிட்டுப் போனவர்கள். வருஷம் ஆறாயிற்று இப்பொழுது தான் உன்னைப் பார்க்க வந்திருக்கிறார்கள். இவ்வளவு அபூர்வமாய் வரும் மாமனோடு நீ பேசாமலிருக்கலாமா?" என்றான்.

சுப்பிரபுத்தனுக்கு மனம் சுருக்கென்றது. அவன் தன் மைத்துனன் குறிப்பாய்த் தெரிவித்த மனக்குறையை மாற்ற வேண்டி, "இல்லை, அதுதான். இடையில் எத்தனையோதரம் இங்குவரப் பிரயாணப்படுகிறதுதான் பிரயாணத்தைத் தடைசெய்ய ஏதாவது ஒரு விவகாரம் முளைத்துக்கொண்டே இருந்தது. அரசனாய் இருந்து ஆள்வதைவிடக் குடியாயிருந்து வாழலாம். உங்களுக்குத் தெரியாததா என்ன! எல்லாப் பாரத்திலும் பெரும்பாரமாயிற்றே இந்த ராஜ்யபாரம். ஒரு நிமிஷமாவது நிர்ச்சிந்தையாயிருக்க நமக்கு இடமில்லையே. ஆறு வருஷமாயிற்று நான் இங்கு வந்து. நீங்கள் கோலியத்துக்கு வந்து பத்து வருஷத்துக்குமேல் இருக்குமே" என்றான்.

சுத்தோதனன் அதற்குப் பிரதி யுத்தரம் கூறும்முன், கௌதமர் கூச்சம் விட்டுத் தம் மாமனை நோக்கி, "ஏன், மாமா, மாமிகூட வந்திருக்கிறார்களா?" என்றார்.

"வந்திருக்கிறார்கள்" என்று விடையளித்தான் சுப்பிரபுத்தன்.

"சும்மா வரவில்லையப்பா உன் மாமி; உனக்குப் பெண் கொண்டு வந்திருக்கிறார்கள்" என்றான் சுத்தோதனன்.

"ஆம், கௌதமா. உனக்குப் பெண் கொண்டுவந்திருக்கிறோம். ஆனால், உன்னுடைய கெட்டிக்காரத்தனத்தைப் பார்த்துவிட்டுத்தான் பெண்ணைக் கொடுப்போம். நீ இப்பொழுது என்ன வித்தை கற்றுவருகிறாய்?" என்று கௌதமாது வித்தியாப்பியாசத்தைப் பற்றி விசாரித்தான் சுப்பிரபுத்தன்.

கௌதமர்—"சிற்றிலக்கணம் முடித்துவிட்டேன். நீதி நூல் படித்து வருகிறேன் முதல் பத்து நிகண்டு முடித்து, நேற்றுத்தான் பதினொன்றாவது நிகண்டு ஆரம்பித்திருக்கிறேன் நிகண்டு முடிந்ததும் தருக்க சாஸ்திரம் தொடங்குவதாக உபாத்தியாயர் சொல்லியிருக்கிறார்"

சுப்பிரபுத்தன்—"நீ படித்த பாடங்களில் ஏதாவதொன்று சொல், பார்க்கலாம்"

கௌதமர்—"எதிலிருந்து சொல்ல? இலக்கணத்திலா, நிகண்டிலா, நீதி நூலிலா?"

சுப்பிரபுத்தன்—"நீதி நூலில்தான் சொல், பார்க்கலாம்"

கௌதமர் —"இன்று காலையில் படித்ததையே சொல்கிறேன்."

'இளமை கழியும்; பிணிமூப் பியையும்;
வளமை வலியிவை வாடும: உளநாளால்
பாடே புரியாது—பால்போலும் சொல்லினாய்!—
வீடே புரிதல் விதி'

சுப்பிரபுத்தன் — "நல்ல பாடந்தான்! (சுத்தோதனனை நோக்கி,) "என்ன அத்தான்! தாங்கள் வைத்திருக்கும் உபாத்தியாயர் யார்? ஞானப் பைத்தியங்கொண்ட கிழம் போல் இருக்கிறது!"

சுத்தோதனன் — "அவர் ஞானத்திற் சிறந்தவர்தான்; வயதில் முதிர்ந்தவர்தான் ஆனால் நீங்கள் சொல்வதுபோலப் பைத்தியம் ஒன்றும் இல்லை"

சுப்பிரபுத்தன் — "பின்னை ஏன், 'இளமை போகும், மூப்புவரும்' என்று இந்தப் பழங் கதைகளையெல்லாம் நமது குழந்தைக்குச் சொல்லிக் கொடுக்கிறார்?"

**சுத்தோதனன்**—“அதனால் என்ன? இவ்வுண்மைகளை அறிந்திருக்க வேண்டியது அவசியந்தானே.”

**சுப்பிரபுத்தன்**—“மற்றவர்களுக்கு அவசியமா யிருக்கலாம். ராஜகுமாரனாய்ப் பிறந்த நமது குழந்தைக்கு இவைகள் ஏன்? வில்வித்தை, வாள்வித்தை முதலியவைகளல்லவா நமக்கு அவசியமானவை!”

**சுத்தோதனன்**—“உண்மைதான் இன்னும் இரண்டொரு வயது போனபிறகு அவைகளைக் கற்பிக்கலாமென் றிருக்கிறேன்.”

**சுப்பிரபுத்தன்**—“இப்பொழுதுதான் என்ன? வயது ஆறு முடிந்து ஏழாவது தொடங்கப் போகிறதே. இந்த வயதிலேயே தொடங்கினால்தான் நல்லது.” (கௌதமரை நோக்கி) “கௌதமா, நீ நிகண்டும் நீதிநூலும் கற்பதில் பயனில்லை. ஆயுதவித்தைகளை நன்றாய்க் கற்றுக்கொள் நீ வில் வளைத்து அம்பெய்யும் திறமையைப் பார்த்துத்தான் நான் உனக்குப் பெண் கொடுப்பேன். தெரியுமா?”

**சுத்தோதனன்**—“எல்லாம் தெரியும் பெண்ணும் பிள்ளையும் சம்மதித்தால், நீங்கள்தான் என்ன செய்யக்கூடும், நான்தான என்ன செய்யக்கூடும்? ஐந்தாறு வருஷத்துக்கு முன்னே யசோதரை பிறந்த செய்திவந்ததும், ‘என் செல்வனுக்குப் பட்டத்தரசி பிறந்துவிட்டாள்’ என்று கௌதமி சொன்னாள் என்னவோ பார்ப்போம். பிராரத்துவம் இருந்தால் விட்டுப்போகாது.”

**சுப்பிரபுத்தன்**—“அது மெய்தான் அத்தான். அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. நீங்கள், உபாத்தியாயரிடம் சொல்லி, ராஜகுமாரர்க்குரிய வித்தைகளைக் கற்றுக் கொடுக்கச் செய்யுங்கள். இலக்கணம் படித்து அலக்கண் படுவதும், நிகண்டு கற்று நடையகாதியாவதும் ஏன்? நான் மறுதரம் இங்கே வரும்போது, ஆயுதப் பயிற்சியில்தான் மாப்பிள்ளையின் சமர்த்தைப் பார்க்கப்போகிறேன்.”

கௌதமர் புன்னகைசெய்து, அங்கே ஒருபுறமாய் ஒதுங்கிநின்ற பங்கஜத்தைப் பார்த்தார்.

பங்கஜமும் கௌதமனை அன்போடு நோக்கி நகைத்தாள். அப்போதுதான் அவள் நின்றுகொண்டிருப்பதைக் கவனித்த சுத்தோதனன் அவளை நோக்கி "பங்கஜம், நீ ஏன் இங்கேயே நின்றுகொண்டிருக்கிறாய் ?" என்று வினவினான்.

"ராணியார் ராஜகுமாரனை அழைத்துவரச் சொன்னார்கள் கலாகூடத்துக்குப் போய் அழைத்துவந்தேன்." என்றாள் பங்கஜம்.

"அப்படியா சித்தார்த்தன் மாமனோடுடன் பேசிக்கொண்டிருப்பதாகச் சொல், போ" என்றான் சுத்தோதனன்.

"நல்லது" என்று பங்கஜம் ஓடி எடுத்துவைத்தாள். அப்போது சுப்பிரபுத்தன் அவளை நோக்கி "நில்லம்மா, நில். குழந்தையை அழைத்துக்கொண்டு போ. மாமியாரும் பெண்ணும் மாப்பிள்ளையைப் பார்க்கக் காத்துக்கொண்டிருக்கமாட்டார்களா ?" என்று சொல்லிக் கௌதமனைக் கீழிறக்கிவிட்டு, "போ, அப்பா. போய் மாமியாரைப் பார்த்துப் பேசிவிட்டு வா. பெண் வேண்டுமானால் முன்னே மாமியார் தயவைச் சம்பாதித்துக்கொள்" என்றான்.

சிறுவர் ஒன்றும் உரையாது சிரித்துக்கொண்டே பங்கஜத்திடம் சென்றார் பங்கஜம் அவரை அழைத்துக்கொண்டு போய்விட்டாள்.

மைத்துனர் இருவரும் சிறிதுநேரம் மௌனமுற்றிருந்தார்கள். அப்பால், சுப்பிரபுத்தன் சுத்தோதனனை நோக்கி, "என்ன அத்தான், ஏதோ யோசனையில் இருக்கிறீர்களே என்ன ?" என்றான்

சுத்தோதனன் — "ஒன்றுமில்லை. குழந்தை யசோதரையோடு நீங்கள் இங்கு வந்திருப்பதற்கு, மாயாதேவி இருந்தால்—!"

சுப்பிரபுத்தன் — "ஹும்! அதற்கென்ன செய்வது! நாம் கொடுத்துவைத்தது அவ்வளவுதான் !"

சுத்தோதனன் — "சித்தார்த்தனைப் பார்த்தால், எனக்கு அவள் எதிரில்வந்து நிற்பதுபோல் இருக்கிறது."

போய்விட்டால் எனக்கு ராஜ்யவிவகாரத்தில் கொஞ்சங்கூட மனம் ஓடாது. அதற்குத்தான் யோசிக்கிறேன்."

சுப்பிரபுத்தன் —"பையனுக்குப் பருவகாலம் வரட்டும். பிறகு யோசித்துக்கொள்ளலாம். எல்லாம் அதுவரையில் எப்பொழுதும்போல இங்கிருந்தே ராஜ்ய விவகாரங்களைப் பார்த்து வாருங்கள். மாதத்தில் இரண்டொருநாள் வேண்டுமானால் அஸ்தமயகிரிக்குப் போய் வரலாம்."

சுத்தோதனன் "அப்படித்தான் செய்து வருகிறேன். ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையிலும் நாங்கள் அஸ்தமயகிரிக்குப்போய் ஆலயத்திற் பண்டாரத்தலைவனைத் தரிசித்துவிட்டு மாளிகையிற் சிறிதுநேரம் தங்கிவருவது வழக்கம்."

சுப்பிரபுத்தன் "ஓ, அப்படியா? ஆனால் நாளை மாலை அங்கே போவீர்கள்?"

சுத்தோதனன் —"ஆமாம். இன்று வியாழன், நாளை வெள்ளியல்லவா? நாளையதினம் மாலை அஸ்தமயகிரிக்குப் போய்வர வேண்டியதுதான்."

சுப்பிரபுத்தன் —"ஆனால் சரி. நானும் வருகிறேன்."

சுத்தோதனன் —"எல்லாரும் போகலாம். நீங்கள், தங்கை, குழந்தை யசோதரை, கௌதமி, சித்தார்த்தன் எல்லாரும் குடும்ப சகிதமாய்ப் போய் வரலாம்."

சுப்பிரபுத்தன்—"அப்படியே செய்வோம். அஸ்தமயகிரியில் மாளிகையைப் பெயர்த்துக் கட்டியதாக நீங்கள் எழுதிய நாள்முதல், இங்கு வந்து அதைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் எனக்கு மிகவும் உண்டு. அது பூர்த்தியாவதற்கு இப்பொழுதுதான் சமயம் வாய்ந்தது. உலும்பினிச் சோலையில் இருந்த மாளிகையை அப்படியே பெயர்த்துக் கட்டிவிட்டீர்களோ?"

சுத்தோதனன் —"ஆமாம். மாயாதேவியின் உடம்பைத் தகனஞ்செய்து, அவளுடைய அஸ்தியையும் சாம்பலையும் ஒரு குடத்தில் நிறைத்து வைத்திருப்பதாக எழுதியிருந்தேனன்றோ? அந்தக் குடத்தையும் அஸ்தமயகிரியிற் பெயர்த்துக் கட்டிய மாளிகையிலேயே அடக்கஞ் செய்துவிட்டேன்.

அவருடைய பெருமையை உலகத்தார் அறியும்படி, மாளிகையினருகே கட்டிய ஆலயம் மிகவும் அழகாக அமைந்திருக்கிறது. சித்தார்த்தன் எந்த அசோகமரத்தின்கீழ்ப் பிறந்தானே, அந்த அசோகமரத்தையும் பெயர்த்து அவ்வாலயத் தெதிரே நட்டுவிக்கிருக்கிறேன்."

சுப்பிரபுத்தன்—"அப்படியா அவசியம் அவைகளையெல்லாம் பார்க்கவேண்டும். நாளையதினம் எந்நேரத்துக்குப் புறப்படலாம்?"

சுத்தோதனன்—"சாதாரணமாய், மத்தியானம் இருபது இருபத்தைந்து நாழிகைக்குமேல்தான் நாங்கள் அங்கே போவது வழக்கம் எப்பொழுதுபோனால் உங்களுக்கு அனுகூலமாயிருக்கும்?"

சுப்பிரபுத்தன்—"காலையில் சிற்றுண்டி முடிந்ததும் ஏழெட்டு நாழிகைக்கெல்லாம் போய்விடலாமே?"

சுத்தோதனன்—"சரி. அப்படியே ஆகட்டும்."

சுப்பிரபுத்தன்—"மத்தியான போஜனத்துக்கு அங்கேயே ஏற்பாடு செய்துகொள்வோம்"

சுத்தோதனன்—"அதற்கென்ன, அப்படியே செய்வோம்"

சுப்பிரபுத்தன்—"ஒரு பகலாவது அங்கே தங்கினால்தான் எல்லாவற்றையும் சாவகாசமாய்ப் பார்க்கலாம்."

"ஆமாம். காலையிலேயே போவதுதான் நல்லது. காலை ஏழெட்டு நாழிகைக்கெல்லாம் இவ்விடம் விட்டுப் புறப்பட்டு விடலாம் அதற்குச் சித்தமாயிருக்கும்படி கௌதமிக்கும் இப்பொழுதே அறிவித்துவிடுகிறேன். வாருங்கள் மாடிக்குப் போகலாம்" என்று கூறி எழுந்தான் சுப்பிரபுத்தனும் எழுந்தான் இருவருமாக மாடிக்குச் சென்றார்கள்.

* * * *

மறுநாள் காலை எட்டுமணி இருக்கும். சுத்தோதனன் அரண்மனை வாயிலிலிருந்து, ஒன்றன்பின் ஒன்றாக ரதங்கள் பல புறப்பட்டன. ரதங்களில் முன்னும் பின்னும் மருங்குகள் இரண்டினும் முடுக்குடைய குதிரைவீரர்கள் அணிவகுத்

துச் சென்றனர். முன்சென்ற இரண்டு ரதங்கள்மட்டும் நந் நான்கு குதிரைகள் பூட்டப் பெற்றனவாயும் பின்வந்த ரதங் களில் பெரும்பாலன இவ்விரண்டு குதிரைகள் பூட்டப் பெற் றனவாயும், கடைப்பட்ட சில ரதங்கள் ஒவ்வொரு குதி ரையே பூட்டப் பெற்றனவாயும் இருந்தன. யாவும் ஒரு சரமாய், அஸ்தமயகிரியை நோக்கிச் சென்றன.

முதல் ரதத்தில், பீடத்தின் நடுவே, கடல் கிழித்தெழுந்த இளஞாயிறுபோலக், கௌதமர் அமர்ந்திருந்தார் அவருக்கு இருமருங்கினும் சுத்தோதனனும் சுப்பிரபுத்தனும் அமர்ந் திருந்தனர்.

இரண்டாவது ரதத்தில், பீடத்தின் நடுவே, தாமரைப் பொகுட்டில் வைத்த லக்ஷ்மி விக்கிரகம்போல ஒரு சிறுமி அமர்ந்திருந்தாள் அவளே சுப்பிரபுத்தன் மகள் யசோதரை. அவளைக் கையால் அணைத்துக்கொண்டு அவளுக்கு இருமருங் கினுமாக, கௌதமியும், சுப்பிரபுத்தன் மனைவியும் அமர்ந் திருந்தனர்.

மூன்றாவது ரதத்தில், சுத்தோதனனது முதற் சகோதரன் சுக்கிலோதனன், தன் மூத்தகுமாரன் ஆனந்தனுடன் அமர்ந் திருந்தான்.

நான்காவது ரதத்தில் சுக்கிலோதனனது மனைவி அவனது இளையகுமாரன் தேவதத்தனை மடிமீது வைத்துக்கொண்டு அமர்ந்திருந்தாள்.

ஐந்தாவது ரதத்தில், சுத்தோதனனது இரண்டாவது மூன்றாவது சகோதரர்கள், அமிருதோதனன், தௌதோத னன் என்போர், தம்மிடையே ஒரு சிறுவனை வைத்துக் கொண்டு அமர்ந்திருந்தனர். அச் சிறுவன் அமிர்தோதனன் குமாரன்; அனுருத்தன் என்னும் பெயரினன்.

ஆறுவது ரதத்தில், அமிருதோதனன் மனைவியும் தௌ தோதனன் மனைவியும் அமர்ந்திருந்தனர்.

ஏழாவது ரதத்தில் சுத்தோதனனாதி சகோதரர்கள் ஐவரில் கனிஷ்டனான கனிதோதனன் என்பான் தன் மனைவியுடன் அமர்ந்திருந்தான்.

வெட்டாவது ரதத்தில், கௌதமியின் வயிற்றிற் பிறந்த நந்தனை யும் உரூபநந்தையையும் வைத்துக்கொண்டு தாதி பங்கஜம் உட்கார்ந்திருந்தாள்.

இரட்டைக் குதிரைகள் பூட்டப்பெற்ற ரதவரிசை இதோடு முடிந்துவிட்டது. இதற்குப் பின்னால் ஒற்றைப் புரவி பூட் டிய நான்கு ரதங்களில், சுத்தோதனனது தூரபந்துக்கள் சிலர் சென்றனர்.

இங்ஙனம் ராஜ ஆடம்பரத்தோடு ஒன்றன்பின் ஒன்றாய்ச் சென்ற இந்தப் பன்னிரண்டு ரதங்களும், அரண்மனையை விட்டுப் புறப்பட்ட ஒருமணி நேரத்துக்கெல்லாம், அஸ்தமய கிரிக்குச் சென்று சேர்ந்தன. அங்கே அனைவரும் தத்தம் ரதம்விட் டிறங்கி, மாயாதேவியின் ஞாபகார்த்தமாகக் கட்டப் பட்ட ஆலயத்துள்ளே சென்று தெய்வத்தை வணங்கிவிட்டு, ஆங்கமைந்த அரிய காட்சிகளைக் கண்டுகளிக்கத் தத்தமக்கு விருப்பமான இடம் நோக்கிப் பிரிந்து சென்றனர்.

சுத்தோதனன் தன் மைத்துனனுடன், ஒவ்வோர் இடமும் சென்று ஆங்காங்குள்ள புதுமைகளை அவனுக்குக் காட்டு வானாயினன். சிறுவர் கௌதமரும் அவர்களுடனேயே இருந்தார். மூவரும ஆலயத்தைச்சுற்றிப் பார்த்துவிட்டு வெளியே வந்ததும், சுப்பிரபுத்தன் சற்றுநின்று ஆலயத்தின் சிகரத்தை அண்ணாந்து பார்த்துவிட்டுத் தன் மைத்துனனை நோக்கி, “ஆலயத்தின் வெளித்தோற்றமும் கம்பீரமாகத்தான் இருக்கிறது. என்ன உயரம்! நாற்றைம்பது அடிக்குமேல் இருக்கும்போல் இருக்கிறதே!” என்றான்.

“ஆமாம். அளந்து கட்டியதுதான். சரியாய் நூற்றறுபதடி உயரம் உள்ளது” என்றான் சுத்தோதனன்.

பிறகு, சுப்பிரபுத்தன், ஆலயத்தின் எதிரிலிருந்த அசோக மரத்தைச் சுட்டி, “இந்த மரத்தின் நிழலில்தான் கௌதமன் பிறந்ததோ?” என்று வினவினான்.

“ஆம்” என்றான் சுத்தோதனன்.

இவ்வாறு பேசிக்கொண்டே அவர்கள் மாளிகைக்குட் சென்றார்கள். அப்பால் கௌதமர் தந்தையையும் மாமனை

யும் விட்டுப்பிரிந்து, ஆனந்தன், தேவதத்தன் முதலிய தம் சகோதரர்களுடன் விளையாடப் போய்விட்டார். சுத்தோதனன், தன் மைத்துனனுக்கு 'மாயாதேவி, இங்கு உலவுவாள்' 'இங்கு உறங்குவாள்' 'இங்கு அமர்ந்து யாழ் வாசிப்பாள்' 'இங்கு நின்று சோலையின் அழகைக் காண்பாள்' என்று ஒவ்வொரிடமாகக் காட்டிவந்தான்

அன்று மத்தியானம் அனைவருக்கும் அங்கேயே போஜனம் சித்தமாயிற்று. போஜனம் உண்டபிறகு, சிறுவர்கள் தவிர மற்றையோரெல்லாரும் சிறிதுநேரம் தூங்கினர். கௌதமர், ஆனந்தன், தேவதத்தன், அனுருத்தன் நால்வரும், ஆலயத்தைச் சுற்றி விளையாடிக்கொண்டிருந்தார்கள். மாளிகையின் கீழ்த்தளத்தில் சுத்தோதனன் முதலியோர் உறங்கிக்கொண்டிருந்தனர். உப்பரிகையில் கௌதமி முதலியோர் உறங்கினர் பங்கஜமும் அங்கேயே ஒருபுறத்தில், குழந்தை உருபநந்தையை அருகணைத்துக்கொண்டு படுத்துறங்கினள். நந்தனும் யசோதரையும், உறங்கிக்கொண்டிருந்த தம் தாய்மாருகே, குச்சியில் புஷ்பங்கள் கோத்தவண்ணமாய், அரவப்படாமல் விளையாடினர்.

மாலை மணி மூன்றாயிற்று சுத்தோதனனுக்குத் தூக்கம் சிறிது கலைந்தது. அரை உறக்கமும அரை விழிப்புமாய் இருந்த அந் நிலையில், அவன் மனம், கைநழுவிய இளங்கிளி போல இங்குமங்கும் தத்தித்தத்தி ஓடியது அவன் மனக்கண் முன்னே மாயாதேவி தோன்றினாள் . .........அப்பொழுதுதான் அவள் அங்கு வருகிறாள். அவன் தன் அரண்மனையின் முதல் உப்பரிகையில நின்று சாளரத்தின் வழியாய்த் தோட்டத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். மாயாதேவி 'ஏன் வாட்டமுற்றிருக்கிறீர்கள்' என்று கேட்கிறாள். 'மகவிலாக் குறைதான்' என்கிறான் அவன். 'குறைதீர்க்க வந்த குமரன் இதோ இருக்கிறானே' என்கிறாள் அவள். 'எங்கே' என்று அவன் திரும்பிப் பார்க்கிறான். சுந்தர முகத்திற் புன்னகை தவழக் குழந்தை சித்தார்த்தன் தன் அருகே நிற்கக் காண்கிறான். 'இந்தச் சுந்தர குமாரனைத் தந்தவள் நீயன்றோ?' என்று கூறி அவன் மாயாதேவியைப் பார்க்கிறான். மாயாதேவி காணப்படவில்லை! 'இதென்ன

மாயம் !' என்று அவன் அதிசயித்துத் தன் செல்வப் புதல் வர் சித்தார்த்தரைத் திரும்பிப் பார்க்கிறான் சித்தார்த்தரும் இல்லை. சுத்தோதனன் அதிசயம் மிக்கு, 'என்ன இது ! மாயாதேவிதான் மாயமாய்ப்போனாள். சித்தார்த்தா, நீ சென்ற தெங்ஙனம்' என்று அவனைத் தேடிச்செல்ல முந்துகிறான். ...........அங்கிலையில் அவன் திடுக்கிட்டுப் படுக்கைவிட் டெழுந்தான் ; கண்ணைக் கசக்கிக்கொண்டு சுற்றுமுற்றும் பார்த் தான ; தன் மைத்துனன் முதலியோர் அங்குமிங்கும் படுத் துறங்குவதைக் கண்டான் ; சற்றுமுன் தான் கண்டவும் கேட்டவுமெல்லாம் பகற்கனவேயென் றுணர்ந்தான. கண்டது கனவேயாயினும், அக் கனவில் சித்தார்த்தா தோன்றி மறைந் தது, அவன் மனதைத் துன்புறுத்தியது சித்தார்த்தரைக் கண்ணாரக் கண்டாலல்லாமல் அவன் மனம் சமாதானமுறாது போலிருந்தது. உடனே அவன், மஞ்சம்விட் டிறங்கிச் சித் தார்த்தரைத் தேடிச் சென்றான்

மாளிகையைச் சுற்றிப் பார்த்தான் சுத்தோதனன் சிறு வர்கள் எவரும் தென்படவில்லை ஆலயத்தில் விளையாடிக் கொண்டிருப்பார்கள் என்று எண்ணிச் சுத்தோதனன் ஆல யத்தை நோக்கிச் சென்றான் ; சிறிதுதூரம் செல்லவும், சித் தார்த்தர் ஒரு துறவியுடன் தன்னை நோக்கிவரக்கண்டான். அவன் மனம் துணுக்கென்றது என் ? சிறுவர் துறவியுடன் சேர்ந்து வருவது அவன் மனத்துக்கு ஒப்பவில்லை. 'அத் துறவியார் யார் ? சித்தார்த்தன் அவரோடு வருவானேன் ? நெருங்கிச் சென்று அறிவோம்' என்று அவன் ஆவலோடு விரைந்து சென்று அவர்களை நெருங்கினான்

தந்தையைக் காணவும் கௌதமர் விரைந்தோடி அவன் அருகுற்று, "அப்பா, இந்தப் பெரியவர் தங்களைப் பார்க்க வேண்டுமாம்" என்று கூறித் தம்மோடு வந்த முனிவரைத் தம் நெடுங்கண்ணாற் சுட்டிக்காட்டினார்.

"அப்படியா" என்று சுத்தோதனன் பயபக்தியோடு அம் முனிவரை எதிர்கொண்டு நமஸ்கரித்து, "சுவாமிகாள், தங்கள் திருமுகதரிசனம் பெற்று யான் கிருதார்த்தனானேன். திருவடி வருந்த எளியேனைத் தேடி இங்குவரத் திருவுளம் பற்றிய காரணம் என்னோ ?" என்றான்.

முனிவர் அரசனை ஆசிர்வதித்துவிட்டுக் கௌதமரை நோக்கி, "குழந்தாய், இனி நீ உன் தோழர்களோடு விளையாடப் போகலாம்" என்றார்

உடனே கௌதமர் முனிவரை நமஸ்கரித்து, அவர் விருப்பப்படி அவ்விடம் விட்டகன்று, தம் சகோதரர்களிருக்குமிடம் சென்றார்.

அப்பால் முனிவர் புன்னகைபுரிந்து, சுத்தோதனனை நோக்கி, "மன்னு, நான் ஒரு துறவி **அஸிதர்** என்னும் பெயரினேன் தெய்வச் செயலாய் இவ்வழியே வந்தேன். மலைமீது கட்டப்பட்டிருக்கும் இவ்வாலயத்தைக் காணவும், இதனுட்சென்று பார்த்துப் போகலாம் என்று ஒரு விருப்பம் உண்டாயிற்று. அவ்விருப்பத்தைப் பூர்த்திசெய்ய ஆலயத்துட் சென்றேன். அங்கே நின் புண்ணிய குமாரனும் வேறு சில சிறுவர்களும் விளையாடிக்கொண் டிருந்தார்கள்.
..... ....." என்றனர்.

"மற்ற சிறுவர்கள் என் தம்பியர் மக்கள்" என்றான் சுத்தோதனன்

முனிவர் அதைக் கேட்டு, "அப்படியா" என்று தலையசைத்துவிட்டு, "அவர்கள் இடையே நின்ற நின் தலைப்புதல்வன் என் கண்ணைக் கவர்ந்தான். அவன் திருமுகத்தில் ஜொலித்த ஞானதேஜஸைக் கண்டு நான் ஆனந்த பரவசமுற்று, அந்த ஞானானந்த தேஜோமய மூர்த்தியை மனத்தால் வணங்கி, என்னை மறந்திருந்தேன். அப்பொழுது என் கையிலிருந்த யோகதண்டம் கைதவறி என் அருகிருந்த கற்பாறை ஒன்றன்மீது விழுந்தது. அந்தக் கற்பாறை உருண்டு ஒருபுறம் சாய்வாய் இருந்ததால், யோகதண்டம் அதில் தங்காமல் சரிந்தோடி எனக்குச் சிறிது தூரத்தில் விழுந்தது அப்பொழுதுதான் அதைக் கனித்த நின் தெய்விக குமாரன் ஓடோடியும் வந்து, அந்தத் தண்டத்தை எடுத்து என்னிடம் கொணர்ந்து கொடுத்தான். அப்போது, பணிவிற்படிந்த அவனது அழகிய அடிச்சுவடுகளை நான் கனித்தேன். ஆ! அவன் திருவடிப் பெருமையை நான் என்னவென்று சொல்வேன்!" என்றார்

அவ்வளவில் அவர் உடம்பு சிலிர்த்தது; கண்களில் ஆனந்த பாஷ்பம் அரும்பியது. அவர் ஆகாயத்தை நோக்கினார். அவர் கண்கள் குவிந்தன. அவர்க்குண்டான பக்தி பாரவசத்தைக் காணவும் அரசனுக்கும் மெய்சிலிர்த்தது. அவன் அஞ்சி ஒடுங்கிக் கரங்குவித்த வண்ணமாய் முனிவர் வாயுரையையே எதிர்பார்த்துக்கொண்டு நின்றான்.

சில விநாடிகள் சென்றபிறகு முனிவர் பரவசமடங்கித் தலை குனிந்து சுத்தோதனனை நோக்கி, "மன்னா, இத்தகைய அருமருந்தன்ன திருக்குமாரனைப் பெறுதற்கு நீ செய்த புண்ணியம் அளவிறந்ததாய் இருந்திருக்கவேண்டும். என்னையைய முனிவர் தவங்களெல்லாம் திரண்டாலும் உனது தவத்துக்கு ஈடாகா. ஆ, அந்தத் தெய்வ குமாரனைக் கண்ட அக்கணமே எனது சஞ்சித பிராரத்துவ கன்மங்கள யாவும் தீப்பட்ட கர்ப்பூரமலைபோல் எரிந்து கரைந்ததென்றால், அப்புண்ணிய மூர்த்தியைப் புத்திரனாகப் பெற்ற நினது பெருமையை என்னென்பேன்!" என்றார்.

சுத்தோதனன் மிகவும் பணிவுடன் அவரை நோக்கி, "சுவாமிகாள், எளியேன் யாதறிவேன் எல்லாம் தங்களையொத்த பெரியோர்கள் அனுக்கிரகமே. சிறுவன் அடிச்சுவட்டில் தாங்கள் கண்ட விசேஷம் யாதோ?" என்றான்.

"அவனது திருமுக ஜோதிக்கும், மற்ற அங்க லக்ஷணங்களுக்கும் ஏற்றவாறே உள்ளது அவனது அடிச்சுவடு. அவனது திருப்பாதங்களில் ஸஹஸ்ரார சக்கரரேகை அமைந்திருக்கிறது," என்றார் முனிவர்

"அதன் பலன் என்னவோ?" என்று வினவினான் சுத்தோதனன்.

"அந்த அற்புத ரேகை சாதாரணக் குழந்தைகளுக்கு அமைவதன்று. 'மானிடராகிய மரத்தில் பல நூற்றாண்டுகளுக்கு ஒரு முறையே மலரும் மலர் இக்குழந்தை. உமது குலப்பெருமையை என்னவென்று சொல்லுவேன்; இவன் துறவுபூண்டு லோக ரக்ஷகனாக இருப்பான்' இதைவிடச் சிறந்த குலப்பெருமை வேறென்ன வேண்டும்!" என்றார் அஸிதர்.

அது கேட்டதும் இடியோசை கேட்டாற்போலக் கலங்கினான் சுத்தோதனன். பிறகு அவன் ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு முனிவரை நோக்கி, "சுவாமி, தாங்கள் திருவாய்மலர்ந்தருளியவாறு அவன் துறப்பது எப்பொழுதோ?" என்று வினவினான்

"அது இப்பொழுது அறிவிக்கற்பாலதன்று நின் ஆயுள் முடிவதற்கு முன்னேயே நிகழும் என்பதுமட்டும் கூறுவேன். அவ்வாறு நிகழுங்கால அதைக் கண்டு களிப்பதைவிடப் பேரானந்தம் உனக்கு வேறென்ன? நீ புண்ணியசாலி. யான் செல்கின்றேன். விடைகொடு" என்றனர் முனிவர்

அரசன் அவர் திருவடிகளைப் பணிந்து எழுந்து, சிறிது தூரம் அவரை வழிகூட்டி அனுப்பினான். அஸிதமாமுனிவர் அரசனை ஆசீர்வதித்துச் சென்றனர்

அப்பால் அரசன் வாட்டமுற்ற முகத்தினனாய், ஆலயத்துக்குச் சென்று கௌதமனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு மாளிகைக்குப் போனான்.

அன்று மாலை பொழுதுபட்டவுடன், ராஜகுடும்பத்தார் அனைவரும், அஸ்தமயகிரியை விட்டுப் புறப்பட்டு, காலையில் வந்த முறைப்படியே ரதமேறி அரண்மனைக்குத் திரும்பிச் சென்றனர் அஸிதர் உரைத்த உண்மையைச் சுத்தோதனன் யாரிடமும் வெளியிடாது தன் மனத்திலேயே வைத்திருந்தான்.



அதிகாரம்—10

## பறவையால் வந்த பகைமை

'கௌதமன் துறப்பான்' என்று அஸிதமாமுனிவர் உரைத்துச் சென்ற நாள்முதல், சுத்தோதனனுக்கு அதுவே பெருங்கவலையாய்விட்டது 'பலநாள் மகவில்லையென்று வருந்தினேன். தெய்வானுக்கிரகத்தால், என் சித்தார்த்தா, நீ மாயாதேவி வயிற்றில் எனக்கு மகனாய் வந்து பிறந்தாய். அழகும் வடிவும் சிறந்த உன் முகத்தைக் கண்டு மாயாதேவியும் நானும் மனம்பூரித்தோம். எங்கள் பூரிப்பெல்லாம் ஏழுநாட்களுக்கு

மேல் இல்லை. ஏழாம் நாளே மாயாதேவி இறந்து என் பூரிப்பை அடக்கிவிட்டாள். மாயாதேவியை இழந்து வருந்திய என் மனம், உன்னால் சிறிது தேறியிருக்கிறது. நீயும் என்னைவிட்டுத் துறந்து சென்றால், நான் என்ன செய்வேன்! துறப்பதற்கும் இறப்பதற்கும் பேதம் பெரிதன்றே! அஸ்தமயகிரியில் அன்று அஸிதமாமுனிவரும நீ துறப்பாய் என்றார். அதற்கு முன், நீ பிறந்த சில நாட்களுக்கெல்லாம், உலும்பினிச் சோலைக்குவந்த நிமித்திகன் ஒருவனும் மாயாதேவியின் மரணத்தைப் பற்றியும் உனது துறவைப்பற்றியும் கூறிச் சென்றான். அதற்கும முன்னமேயே, நின் பிறப்பைப்பற்றி நானும் மாயாதேவியும் கனவுகண்ட காலத்திலேயே, காலவர் தாம்கூறிய கனுப் பலனில் நினது துறவைப்பற்றிக் குறிப்பித்தார். இங்ஙனம், நல்லறிஞர் எல்லாரும் அடிக்கடி நின்னைப்பற்றிக் கூறும் கூற்று என் உயிரை வாட்டுகிறதே! அந்தோ! இதற்கோ நான் மகப் பெற்றேன்!

'மதலையைப் பெறுநாள் துன்பம்; வளர்த்திடு நாளுந் துன்பம்;
விதலைநோ யடையிற் றுன்பம்; வியன்பரு வத்துந் துன்பம்;
கதமுறு காலர் வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம்.
இதமுறல் எந்நாள் சேயால் எற்றைக்கும் துன்ப மானல்?'

என்றனர் ஆன்றோர். அவர்கூறிய துன்பங்களில் எதையும் நீ எனக்குத் தந்திலை; தருவாய் என்றும் எவரும் கூறிலர். ஆயினும், என்றோ ஒருநாள்—மனந்திரியும் அந்நாள் எந்நாளோ யானறியேன்—இம் மதலைப் பருவத்திலோ, கட்டுக்கடங்காக் காளைப்பருவத்திலோ, அனுபவம் முதிர்ந்த மனிதப் பருவத்திலோ—கூறிய துன்பங்கள் அனைத்தினும் கொடிய பெருந்துன்பத்தில் என்னை அழுத்திவிட்டு நீ துறந்துபோவாய் என்று பலரும் கூறியுள்ளனரே! ஓ, ஓ! அதை நினைத்தாலும் நெஞ்சம் நடுங்குகிறதே! அது நிகழ்ந்தே விடுமானல் எங்ஙனம் சகிப்பேனடா, என் கண்மணி!' என்று எண்ணி எண்ணிச் சுத்தோதனன் அடிக்கடி மனச்சோர்வுற்றான். ஆயினும்,

'ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்'

என்னும் அறிவுரையைப் பற்றுக்கோடாகக்கொண்டு, விதியை மதியால் வெல்லலாம் என்று துணிந்து; அவன் தன் காதற்

குமரர் கௌதமர் உள்ளத்தை 'உலகவழியிற் புகுத்தற் பொருட்டுப் பலவாறு முயன்று வந்ததோடு, உலகவாழ்வில் அவருக்கு ஒருபொழுதும் யாதொரு வெறுப்புந் தோற்றுமை யிருக்கும்வண்ணம் செய்வித்தும் வந்தான். கௌதமருக்குக் கற்பிக்கவேண்டிய கல்வியைப்பற்றித் தன் மைத்துனன் சுப்பிரபுத்தன் கூறியதையும் அவன் மறந்துவிடவில்லை. நிலையாமை முதலியவற்றைப்பற்றிக் கூறும் ஞானநூல்களையும் நீதிநூல்களையும் அவற்றை அறிதற்குக் கருவிநூல்களான தருக்கம், இலக்கணம், நிகண்டு முதலியவைகளையும் கௌதமருக்குக் கற்பிப்பது நன்றன்றென்று சுத்தோதனனுக்கே தோன்றியது. ஆகையால் அவன் தன் குமாரனுக்கு வில் வித்தை, வாள்வித்தை முதலியவைகளையும் அரசியலையுமே விசேஷமாகக் கற்பிக்கும்படி, மித்திரருக்குக் கட்டளையிட்டான்

மித்திரர் அரசன் கட்டளைப்படி கௌதமருக்கு ஆயுத வித்தைகளையும் அரசியலையும் நன்கு கற்பித்துவந்தார். கௌதமர் அவைகளிலும் மற்ற மாணவர்களைவிடத் தாமே சிறந்து விளங்கினர். வயது ஏற ஏற அவரது கல்வியும், திறமும், அறிவும், குணமும், அழகும், வடிவும் கண்டவர் கேட்டவர் வியக்குமாறு மேன்மையுற்று வளர்ந்தன. கௌதமருக்குப் பதினைந்தாவது வயது வந்துற்றது. அப்போது அவர் அழகில் உருவுற்றுவந்த மதனனே, அறிவில் குருபரனான குமரனே, குணத்தில் தருமனே, வில்லாண்மையில் விஜயனே, என்னுமாறு விளங்கினர் இப்பொழுது அவரோடு நெருங்கியிருந்து கற்ற மாணவர் முன்போல மூவரல்லர்; அனுருத்தனும் நந்தனும் சேர்ந்து ஐவராயினர்.

அவர்கள் ஐவரிடத்திலும் கௌதமர் மிகவும் அன்புடையவராய், அவர்கள் விருப்பத்துக்கிணங்கி மாலை வேளைகளில் அரண்மனையைவிட்டு வெளியேசென்று சிறிதுநேரம் அவர்களுடன் உலவியோ விளையாடியோ வருவது வழக்கம். அது சுத்தோதனனுக்கு ஒப்பவில்லை. ஆயினும், சிறுவர் விருப்பத்தைத் தடுக்க மனமில்லாமல், அவரை அவர் போக்கிலே விட்டுவிட்டு, அங்ஙனம் அவர் தோழர்களுடன் வெளியே செல்லும்போதெல்லாம் மெய்காப்பாளனாக உடன் செல்லும்படிமட்டும் ஒரு போர்வீரனை ஏற்படுத்தியிருந்தான்.

ஒருநாள் மாலை, கௌதமர் தம் தோழர்களோடு வெளியே சென்றார். மெய்காப்பாளனும் அவரோடு சென்றான். எல்லோரும் ஒரு பெருஞ் சோலையுட் புகுந்து அங்கிருந்த செடி கொடிகளை வேடிக்கை பார்த்துக்கொண்டே இங்கொருவர் அங்கொருவராய்ப் பிரிந்து சென்றனர். உதாயிமட்டும் கௌதமரைவிட்டுப் பிரியாதிருந்தான். மெய்காப்பாளன், அவர்களுக்குப் பின்னே சிறிது தூரத்தில் அவர்களைத் தொடர்ந்து சென்றான்.

கௌதமரும் உதாயியும், பேசிக்கொண்டே சென்றபோது, கொழுகொம்பின்றிக் காற்றில் அடிபட்டு அலைந்துகொண்டிருந்த மெல்லிய பூங்கொடி ஒன்று கௌதமர் கண்ணைக் கவர்ந்தது. உடனே அவர் அங்கு நின்று அந்த மலர்க் கொடியை மெல்லெனப் பற்றி, அருகேநின்ற ஒரு மரத்தை ஆதாரமாகத் தழுவிப் படரும்படி, அம்மரத்தில் அதைச் சுற்றி விட்டு, மேற்செல்ல ஓர் அடி எடுத்துவைத்தார். அப்போது, 'அபயம்' என்று அடிமீது வந்து விழுந்தாற்போல ஓர் அன்னப்பறவை அவரெதிரே தொப்பென்று விழுந்தது.

அதைக் கண்டதும் கௌதமர் பதைபதைத்து ஓடி, அப் பறவையைத் தம் கையில் மெல்லென எடுத்தார். பறவை தன் வெண்சிறகை விரித்துக்கொண்டு துடித்தது. கௌதமர் அதைத் தம் மார்போடணைத்து, "பயப்படாதே. உனக்கு என்ன நேர்ந்தது? ஏன் கீழே விழுந்தாய்?" என்று அன்புடன்கேட்டு அதன் சிறகைத் தம் பூங்கரத்தால் மெல்லத் தடவிக்கொடுத்து, 'கீழே விழுந்ததால் சிறகு முறிந்ததோ, கால் ஒடிந்ததோ, வேறெங்கேனும் காயம்பட்டதோ, என்னவோ தெரியவில்லையே' என்று மிகுந்த கவலையுடன் அதன் உடம்பு முழுவதையும் கூர்ந்து பார்த்தார். அப்பொழுதுதான், அதன் மார்பில் தைத்திருந்த அம்பொன்று அவர் கண்ணிற்பட்டது. அதைக் காணவும், அவ்வம்பு தம் மார்பிலேதான் தைத்தாற்போலக் கௌதமர் துடிதுடித்து, "ஆ, ஆ! யாரோ எய்த கொடிய அம்புபட்டோ நீ வீழ்ந்தனை! கொடுமை! கொடுமை! என்ன செய்வது! ஒரு பாவமும் அறியாத நீ இத் துன்பத்துக் கிலக்கானதும் ஊழ்வினைதானோ! ஹா-ம், எவ்வினையானால் உனக்கென்ன! இப்பொழுதுள்ள துன்பம் அகன்றாற்போதும். உடனே குணமடைந் தெழுந்து

நிர்விசாரமாய்ப் பறந்துபோய்விடுவையே! வஞ்சமறியாச் சிறு குழந்தைபோன்ற உன்னை வருத்தத் துணிந்தவர் யாரோ தெரியவில்லையே! யாராயிருந்தால் என்ன? கடவுள் கிருபையால் அவர் அம்பு உன் உயிரைப் போக்காதுவிட்டது இனி நீ அஞ்சாதே. நான் இந்த அம்பை மெல்லப் பிடுங்கிவிடுகிறேன்" என்று அதற்கு ஆறுதலும் தைரியமுங் கூறினார். அவ் வன்னப்பறவை அவர் வாய்மொழிகளை நன்கறிந்து கொண்டதுபோலத் தன் பதைபதைப்படங்கி, அவர் மார்போடு ஒன்றி அணைந்திருந்தது. அவர் அதை அழுத்தாமலும் நழுவவிடாமலும் தம் கைகளால் அணைத்துக்கொண்டு, அருகேயிருந்த ஓர் அரசமரத்தடியில் உட்கார்ந்தார். உதாயியும் அவருடன் உட்கார்ந்தான். பிறகு கௌதமர், பறவை மீது தைத்திருந்த அம்பை உற்றுப்பார்த்தார். அம்பு பாய்ந்த இடத்தில் கசிந்த சிறிது இரத்தத்தால், பால்போல் தூல்லியமான அதன் தூவி சற்றுக் கறைபற்றியிருந்தது.

உதாயியும் அதைப்பார்த்து, "அம்பு அவ்வளவு ஆழமாகப் பதியவில்லை. சுலபமாய்ப் பிடுங்கிவிடலாம்" என்றான்.

"உண்மைதான். என்னவிருந்தாலும், சதையில் தைத்த அம்பைப் பிடுங்கும்போது நோவாமலிராது. இரத்தமும் ஒழுகும். அதை உடனே தண்ணீரால்கழுவி ஏதாவது மருந்து போடவேண்டும். தண்ணீர் சமீபத்தில் எங்காவது கிடைக்கும். மருந்துக்கு என்ன செய்வது!" என்றார் கௌதமர்.

உதாயி சிறிதுநேரம் சிந்தித்து, "மருந்து ஒன்றும் வேண்டுவதில்லை. புண்ணை நீரால் கழுவிவிட்டுக் கொஞ்சம் சுண்ணாம்பாவது சாம்பலாவது வைத்துப் புண்ணை மூடிவிட்டால் போதும். சமீபத்தில் வீடுகள் ஒன்றுமில்லையே. இருந்தால் நான் போய்க், கொஞ்சம் சுண்ணாம்பாவது சாம்பலாவது வாங்கி வந்துவிடுவேன்" என்றான்.

"நீ சந்தியாவந்தனத்துக்கு விபூதி கொண்டுவந்திருப்பாயே?" என்று வினவினார் கௌதமர்.

"ஆமாம், கொண்டுவந்திருக்கிறேன்" என்று விடையளித்தான் உதாயி.

உடனே கௌதமர் முகமலர்ந்து "அதைவிடச் சிறந்த மருந்து வேறென்ன? புண்ணைக் கழுவிவிட்டு, விபூதியை

அதில் அப்பிவிடலாம். அதுதான் சரி" என்று கூறிவிட்டுத் தம் மேலணிந்திருந்த உத்தரீயத்தை எடுத்து அருகிருந்த மெய்காப்பாளனிடம் விட்டெறிந்து, அவனை நோக்கி, "அடா, இச் சோலையில் ஏற்றக்கிணறு, கால்வாய் ஏதாவ தொன்றில் நீர் இருக்கும். அதில் இந்த உத்தரீயத்தை நன் ருய் நனைத்து நீர் கொண்டுவா. சீக்கிரம்!" என்றுகூறி அவனை அனுப்பிவிட்டு அவன் வருகையை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார்.

அப்போது தேவதத்தன் வில்லும் கையுமாய் அங்கே ஓடி வந்து பரபரப்புடன் இங்கும் அங்கும் தரையை நோக்கி ஞன். அங்ஙனம் அவன் நோக்கியது, ஏதோ ஒன்றைப் போக்கிவிட்டுத் தேடிப் பார்ப்பதுபோல் இருந்தது. தேடும் கவனத்தில் அவன், மரத்தடியில் உட்கார்ந்திருந்த கௌதமரை யும் உதாயியையும் பாாக்கவில்லை. கௌதமர் அவனைக் கண் டதும், "அண்ணு, என்ன தேடுகிறுய்?" என்ருர்.

அச் சொற்களைக் கேட்ட தேவதத்தன் திடுக்கிட்டுத் திரும் பித் தன் தாயாதி கௌதமரும், தோழன் உதாயியும் அங் கிருப்பதுகண்டு "ஏன் இங்கு உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டுக்கொண்டே அவர்களை நெருங்கிஞன். தேவ தத்தன் கிட்டவரவும், கௌதமர் அவனுக்குத் தாம் அணைத்து வைத்திருக்கும் பறவையைக் காட்டி "இந்த அன்னப் பற வைக்காகத்தான் இங்கே உட்கார்ந்திருக்கிருேம், பாவம், யாருக்கும் ஒரு தீங்கும் செய்யாத இந்த அழகிய பறவையை யாரோ அம்பால் எய்து வீழ்த்திவிட்டார்கள்" என்ருர்.

உடனே தேவதத்தன் முகமலர்ந்து சிரித்து, "ஓகோ! நீதான் இந்த அன்னப்பறவையை எடுத்து வைத்திருக்கி ருயோ! சரிதான். இது தெரியாமல் நான் விழுந்தபறவை எங்கே காணும் என்று ஆச்சரியப்பட்டேன். குறிப்பாய்ப் பார்த்தேன். அம்புபட்டதும் நேரே இங்குத்தான் விழுந்தது. அதை அறிந்துதான் நான் இங்கு வந்தேன். நான் வைத்த குறி எவ்வளவு சரியாயிருக்கிறது பார்த்தாயா?" என்று தன் ஆற்றலை வியந்து பேசிஞன்.

"அம்புபட்டுப் பறவை விழுந்த இடத்தைச் சரியாய்த் தான் அறிந்து வந்திருக்கிருய். யார் இதன்மீது அம்பெய்தது? நீ எங்கிருந்து அதைப் பார்த்தாய்? எய்வதைத் தடுக்க உன்

ளுல் முடியவில்லையோ? குற்றமில்லை. ஏதோ நல்ல வேளையாய் அம்பு ஆழமாய்ப் பதியவில்லை. பறவை பிழைத்துக்கொள் ளும்" என்றார் கௌதமர்.

தேவதத்தன் கல்லென்று சிரித்து, "என்ன கௌதமா, நான் சொன்னது இன்னதென்று விளங்கிக்கொள்ளாமற் பேசு கிருயே. வேறு யாராவது ஒரு பறவையை எய்து வீழ்த்தி ளுல், நான் ஏன் அந்தப் பறவையைத் தேடிக்கொண்டு வர வேண்டும்? இந்த அன்னப்பறவையை நான்தான் எய்து வீழ்த் தினேன்" என்றான்.

இதைக் கேட்டதும் கௌதமர் திடுக்கிட்டு, "என்ன அண்ணு, நீயா இப்பறவைமீது அம்பெய்தாய்? எப்படி அண்ணு மனந்துணிந்து இந்த எளிய பறவைமீது உன் கொடிய அம்பை எய்தாய்! ஏதோ நல்ல காலம், உயிர்போகவில்லை. அம்பு இன் னும் கொஞ்சம் ஆழமாகப் பதிந்திருந்தால் இந்நேரம் இதன் உயிர் போயிருக்கும் அப்பால் நீ என்னதான் பிரயத்தனப் பட்டாலும், போன உயிரை மீட்க முடியுமா? கொடுக்க முடி யாததை வாங்கலாமா? ஆக்க முடியாததை அழிக்கலாமா? போனது போகட்டும் நீ அழிக்கமுயன்ற உயிர் தெய்வச் செயலாய் அழியாமல் தப்பியது. இனி எந்த உயிரையும் அழிப்பதில் உனது வில்லாண்மையைக் காட்டாதே. யதேச் சையாய் ஆகாயத்தில் திரியும் ஒரு சிறு பறவையிடத்தில்தாஞு நீ கற்ற வில்வித்தையைக் காட்டவேண்டும்!" என்றார்.

தேவதத்தன் முனிவு காட்டும் புன்னகை ஒன்று செய்து, "என்ன கௌதமா, உனக்குத்தான் பேசத்தெரியுமென்று பேசுகிருயோ?" என்றான்.

கௌதமர் அன்பு கனியச் சிரித்து, "கோபித்துக்கொள் ளாதே அண்ணு. ஏதோ எனக்குத் தெரிந்ததை நான் சொன் னேன். சொன்னது தவருனுல் மன்னித்துக்கொள். உனக் குத் தெரியாததா? கொலை, பஞ்சமாபாதகங்களுள் ஒன் றன்றே?

'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க, தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை'

என்று நீதிநூல்கள் கூறுவதை நீ அறியாயோ?" என்ருர்.

"நீ நீதிநூல் ஓதி உணர்ந்தவன் என்பது எனக்குத் தெரியும். உன் பிதற்றலை நிறுத்திக்கொள். ஓர் அற்பப் பறவையை எய்ததற்காக நீ ஏதேதோ பேசுகிறாயே?" என்றான் தேவதத்தன்.

"அண்ணா, நான் பேசுவதைப்பற்றிக் கோபித்துக்கொள்கிறாயே ஒழிய நீ செய்ததை நினைத்துப் பார்க்கிறாயில்லையே. என்னை எவ்வளவு வேண்டுமானாலும் கோபித்துக்கொள். நான் அதற்காக வருந்தவில்லை நீ மூத்தவன், நான் இளையவன். என்னைக் கண்டிக்கவும் திருத்தவும் உனக்கு உரிமையுண்டு—" என்று கௌதமர் கூறிவரும்போது தேவதத்தன் அவனை இடைமறித்து, "உன்னை நான் திருத்தவா? பேஷ்! நீதான் என்னைத் திருத்த வருகிறாயே! குருவுக்கு மிஞ்சிய சிஷனாய், அந்தக் கிழப் பிராமணர் மித்திரரைத் திருத்துகிற நீ, என்னைத் திருத்த முற்படுவது அதிசயமன்று. ஆனால், அந்தத் தொண்டு கிழவர் நீ சொல்வதையெல்லாம் 'சரி' 'சரி' என்று ஒப்புக்கொள்வதுபோல், நானும் ஒப்புக்கொண்டுவிடுவேன் என்று எண்ணாதே" என்றான்.

கௌதமர் தம் தமையனைக் கனிவோடும் களிப்போடும் நோக்கி, "அண்ணா, நமது ஆசிரியர் கல்வியிலும் அறிவிலும் முதிர்ந்தவர். அவருடைய அனுக்கிரகத்தால்தான் நாம் அறிவு விளங்கப் பெறுகிறோம் அவரை நான் திருத்துவதாக நீ சொல்வது நியாயமன்று. அது குருநிந்தை யன்றோ?" என்றார்.

"என்ன கௌதமா, நீ அசாத்தியனாயிருக்கிறாயே! முழுப் பூசணிக் காயைச் சோற்றில் மறைக்கிறாயே. எங்கள் கண்ணெதிரே, நீ எத்தனையோ முறை மித்திரரைத் திருத்த நாங்கள் கண்டிருக்கிறோம். நீ அதை அடியோடு மறைக்கப் பார்க்கிறாயே!" என்றான்.

"சிற்சில சமயங்களில் நமது ஆசிரியர் ஏதாவதொரு விஷயத்தை மறந்துவிடுவதுண்டு. அதை நான் ஞாபக மூட்டியிருக்கிறேன். இல்லையென்று சொல்லவில்லை. அதனால் நான் அவரைத் திருத்தியவனாவேனோ? 'யானைக்கும் அடி சறுக்கும்.'

'நூலுரை போதகா சிரியர் மூவரும்
மூக்குண வசத்தால் முறைமறந் தறைவரே'

என்று பிராமணியமும் உண்டன்றே. மிகவும் கற்றுத்தேர்ந்த ஒருவனுக்குத் தோன்றாத ஒரு விஷயம், கல்வியறிவில்லாத ஒருவனுக்குத் தோன்றக் கூடும். அதனால் இவன் அவனை விட மேலாய் விடுவானோ? ஆகான் என்பதற்கன்றோ,

'கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யோர்'

என்று ஆன்றோர் கூறியுள்ளார்கள்?" என்றார் கௌதமர்.

தேவதத்தன் அவரை நோக்கி, ஏளனமாக நகைசெய்து, "இவ்விதமெல்லாம் வாயடி அடிக்கலாமென்றுதான், நான் எய்து வீழ்த்திய பறவையை எடுத்து வைத்துக்கொண்டு என்னை வம்புக்கு இழுக்கிறாய்போல் இருக்கிறது!" என்றான்.

கௌதமர் மிகவும் அமைந்த குரலில், "அண்ணா, நமக்குள் வம்பென்ன வந்தது! நான் சொல்வது நியாயமா அன்றா என்று நீயே யோசித்துப் பார். அற்பப் பறவை என்கிறாய். இந்த அற்பப் பறவையின் சிறகிலிருந்து ஓர் இறகு விழுந்து விட்டால், அதை மறுபடியும் முன்போலப் பொருத்தி வைக்க நமக்கு ஆற்றல் உண்டா? இல்லையே! இந்த அற்ப ஆற்றலும் இல்லாத நாம் எல்லாம் வல்ல இறைவன் படைத்த உயிர்களில் எதையும் அற்பமென்று கருதி அழிக்க முயலலாமா? மேலும், நாம் அற்பமென்று கருதும் இந்தப் பறவை முதலிய பிராணிகள்தான், ஒழுக்கத்தில் நம்மைவிடச் சிறந்தவைகளாயிருக்கின்றன. மனிதருள் ஒருவன் பொய்கூறா விரதமுடையவனாயிருந்தால், அது ஒரு பெரிய அதிசயமாயிருக்கிறது. அவனை வேறு பிரித்து உயர்வாக்கிப் பிறர் கண்டு பிரமிக்கத்தக்க பெருமலையுச்சியில் கொண்டுபோய் வைத்துவிடுகிறார்கள். உலகமெல்லாம் அவனை அறியவேண்டுமென்று, புலவர் பலர் அவன் புகழைக் கவிகளாற் பாடுகிறார்கள்; கதைகளாகக் கூறுகிறார்கள்; நாடகங்களாக நடிக்கிறார்கள்: ஓவியர் அவன் உருவைப் படமாக எழுதுகிறார்கள்: சிற்பியர் அவன் வடிவைச் சிலையாக அமைக்கிறார்கள். அல்லவா?" என்றார்.

"ஆம், அரிச்சந்திரனைக் குறித்துச் சொல்கிறாயோ?" என்றான் தேவதத்தன்.

"ஆமாம். பார்த்தாயா, பொய்கூறா விரதன் என்றதும் அவன் அரிச்சந்திரன்தான் என்று நீ உடனே சொல்லிவிட்டாய். அதனால் என்ன ஏற்படுகிறது? எல்லையற்றுப் பரந்த இந்த நிலவுலகத்தில், எத்தனையோ ஆயிரவருஷ காலமாகத் தோன்றி நின்று மறைந்துவரும் கோடானுகோடிக் கணக்கான மக்களில் பொய்கூறாதவன் அரிச்சந்திரன் ஒருவன் தான் என்றும் பிறர் அனைவரும் பொய்யர் என்றும் ஏற்படுகிறதன்றோ? உயர்ந்த பிறவியென்று இறுமாந்திருக்கும் நமது நிலை இப்படி யிருக்கிறது அற்பப் பிறவிகளென்று நாம் தாழ்வாக மதிக்கும் பறவை முதலியவற்றின் நிலையைப் பார். அவைகளுக்குப் பொய் என்றால் இன்னதென்றே தெரியாது. எறும்புமுதல் யானையீறாக நாம் காணும் பிராணிகள் அத்தனையும் அத்தனை அரிச்சந்திரர்கள்தான் ஓர் அரிச்சந்திரனை வைத்துக்கொண்டு இவ்வளவு பெருமை பாராட்டும் நம்மை விட, எல்லாம் அரிச்சந்திரர்களாயிருந்தும் அதை ஒரு பெருமையாகப் பாராட்டாத பிராணிவகைகள் மேலல்லவா?" என்றார் கௌதமர்.

தேவதத்தன் இதைக்கேட்டு நகையாடி, "கௌதமா, நீ கவைக்காகாத பேச்சுப்பேசிக் காலத்தைக் கழிக்கும் வீணன். உன்னோடு பேசிக்கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. இந் நேரம் நான் இன்னும் நாலைந்து பறவைகளை எய்து வீழ்த்தியிருப்பேன் என் பறவையை என்னிடம் கொடுக்கிறாயா, இல்லையா? சொல்" என்றான்.

"அண்ணா, பிராணிகளின் மேன்மையைப்பற்றி நான் இவ்வளவுதூரம் சொல்லியும், நீ இன்னும் நாலைந்து பறவைகளை எய்து வீழ்த்துவேன் என்கிறையே, இது நியாயமா?" என்றார் கௌதமர்.

தேவதத்தன் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "சை! நீ என்ன மிகவும் வம்பனாயிருக்கிறாய். பிராணிகளின் மேன்மையைப்பற்றி நீ என்ன சொல்லிவிட்டாய்? உன் சதுர வார்த்தைகளில் நானா மயங்குகிறவன்? ஒரு சொல்லில் உன் சொற்கோட்டையெல்லாம் புலபுலவென்று உதிர்ந்துவிடுமே!

பிராணிகள் பொய் பேசாவென்ற புதுமையை நீதான் கண் டாய்போ லிருக்கிறது! அவை பொய்யும பேசா, மெய்யும் பேசா. பேசவே தெரியாதவை பொய்பேசாவ தெப்படி?" என ருன்.

கௌதமர் சிரித்துக்கொண்டு, "சரி, அது வேண்டா. வேறு எவ்வகையிற் பார்த்தாலும் பிராணிகள் நம்மைவிட மேலாகத்தான் இருக்கின்றன.

'சென்றது கருதார்; நாளை வருவது நினையார்; கண்முன்
நின்றது புசிப்பார்; வெய்யில் நிலவாய்விண் விழுந்து வீழ்ந்து
பொன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையாய் ஒன்றும் பாரார்,
நன்றுதீ தென்னுர்: சாட்சி நடுவான சீவன் முத்தர்'

என்று சீவன் முத்தர்களுக்கு இலக்கணம் கூறுகிருர்கள். உண்மைஞானம கைகூடப்பெற்ற அவர்களுக்கும் பறவை முதலிய பிராணிகளுக்கும் என்ன பேதம்?

' * * * *

நந்திய பறவை கானம் நயந்துறை விலங்கு முன்னு
வந்தபல் லுயிர்கட்குச் சேம வைப்புண்டோ? வருவா யுண்டோ?
எந்திடத் தேனும் போயொன் றிரப்பது தானு முண்டோ?

அல்லது நாளைக் கென்செய் வாமெனும் கவலை யுண்டோ?
எல்லையி லொன்றி னுலொன் றிடிப்புண்டு வாழ்த லுண்டோ?
ஒல்லுமவ் வுயிர்கள் தம்முள் உணவிலா திறந்த துண்டோ?

* * * * '

இல்லையே! இவைகளை நோக்க நம்மைவிடப் பறவை முதலிய பிராணிகள் பன்மடங்கு மேலானவை யல்லவா? அப்படி மேலானவை அல்லாவிட்டாலும் அவைகளைக் கொல்வது தருமமாகுமா? கடவுளால் படைக்கப்பட்ட இவ்வுலகம் எல்லா உயிர்களுக்கும் பொதுவானது எளியாரும் வலி யாரும், தத்தம் நிலைமைக்கேற்றபடி இதில் வாழ்ந்து வரு கின்றனர் வலியார் எளியாரைக் கொன்றழிக்கலாம் என் ருல், நமது வாழ்க்கை ஒருநாள்கூட நிலைநிற்பது அரி தன்றே? 'எளியாரை வலியார் அடித்தால், வலியாரைத் தெய்வமடிக்கும்' என்பது பழமொழியன்றே? இது கிடக் கட்டும். பறவையை அம்பால் எய்வது வீரத்துக்குத்தான்

அழகாகுமா ? சற்று நிதானித்துப்பார். தன்னைவிட மிகவும் எளியவனை எதிர்ப்பதே ஆண்மைக் குறைவு. ஒருகால் எதிர்க்க நேரிட்டாலும், மற்றவகைகளில் எதிரியைச் சம மான நிலையில்வைத்து நேர்நின்று எதிர்ப்பது வீரலட்சணம். நிராயுதபாணியாய், ஆகாயத்தில் பறக்கும் ஒரு சிறு பற வையை, அதற்குத் தெரியாமல், நிலத்தில் நின்று, ஆயுதத் தால் எதிர்ப்பதும் ஓர் ஆண்மையா ?" என்றார்.

கௌதமர் கூறிய சொற்கள் தேவதத்தன் மனத்தைச் சுட்டன. அவன் கண்கள் சிவந்தன ; உதடுகள் துடித்தன. கௌதமரை வெறித்து நோக்கி, "அடா, கௌதமா, என்னை யாரென்று நினைத்துக்கொண்டு இப்படியெல்லாம் பேசுகிறாய் ! நீ படித்த கந்தற் புராணக்கட்டுகளை எனக்கா அவிழ்த்துக் காட்டுகிறாய் ! அம்பைத் தொட்டால் கை நடுங்கும் பேடிப் பயலே ! நீயா எனக்கு ஆண்மை கற்றுக்கொடுக்க வருகிறாய் ! மரியாதையோடு என் பறவையை என்னிடம் கொடுக்கிறாயா, இல்லையா ?" என்றான் தேவதத்தன்.

அவ்வளவில், நீர் கொண்டுவரப் போயிருந்த மெய்காப் பாளன், நனைந்த உத்தரீயத்தை நீர் சொட்டச் சொட்ட எடுத்துக்கொண்டு அங்கு வந்தான். அவனைக் கண்டதும், கௌதமர் தேவதத்தனை நோக்கி, "அண்ணா, இந்தப் பறவை மீது நீ எய்த அம்பைப் பிடுங்கிவிட்டுப் புண்ணைக் கழுவு வதற்குத்தான் நீர் கொண்டுவரச் சொன்னேன். நீர் கொண்டு வரப் போனவன் இதோ வந்துவிட்டான் நீ வீணே கோபித் துக் கொள்வதிற் பலனில்லை. அம்பைப் பிடுங்கிப் புண்ணை யாற்றியபின் நான் இப்பறவையைப் பறக்க விட்டுவிடப் போகி றேன். உன்கையில் இதைக் கொடுக்கமாட்டேன்" என்றார்.

"கொடுக்கமாட்டாயா ?" என்று வீராவேசத்துடன் கேட் டான் தேவதத்தன்.

"கொடுக்கமாட்டேன்" என்று தீரமாயும் பொறுமை யாயும் பதில் கூறினார் கௌதமர்.

தேவதத்தனுக்குக் கோபம் பொங்கியது. அவன் கௌத மரை உறுத்து நோக்கி, "அடா கௌதமா, பட்டத்துக்கு உரியவனாய்ப் பிறந்த கர்வத்தினாலோ, நீ இவ்வளவு தைரிய மாய்ப் பேசுகிறாய் ! உன் தைரியமெல்லாம் பேச்சளவில்தான்

என்பது எனக்குத் தெரியும். அடா, நீ க்ஷத்திரிய வம்சத்திற் பிறந்த க்ஷத்திரியனானால் எழுந்துவந்து, என்னிடம் உன் கைவன்மையைக் காட்டு, பார்க்கலாம்," என்று கூறித் தன் கையிலிருந்த வில்லை அப்பால் எறிந்துவிட்டுத் தன் மார்பைத் தட்டிக் கர்ச்சித்தான்.

அது கண்ட மெய்காப்பாளன், அவனுக்கும் கௌதமருக்கும் இடையே புகுந்து, "வேண்டாம், வேண்டாம்" என்று தேவதத்தனைத் தடுக்கத் தொடங்கினான்.

கௌதமர், இருந்த இடத்தைவிட்டு அசையாமல், கல்லென்று சிரித்து மெய்காப்பாளனை நோக்கி, "அடா, நீ அப்பாலே போ. உத்தரீயத்தை அழுத்திப் பிடிக்காதே. நீர் எல்லாம் பிழிபட்டுப் போகும்" என்று சொல்லிவிட்டுத் தேவதத்தனை நோக்கி, "அண்ணா, நான் உன்னோடு மல்லயுத்தம் செய்ய வரவில்லை. நீ கொல்ல முயன்ற பறவையை நான் காப்பாற்ற முயல்கிறேன். அவ்வளவுதான். இதை நான் உன்கையில் கொடுத்தால், நானும் இதைக் கொல்ல முயன்றவனே யாவேன். ஆதலால், என் உயிருள்ளவரையில் நான் இதை உன்னிடம் கொடுக்கமாட்டேன். காப்பாற்ற எடுத்த பறவையை விட்டுவிட்டு, என் வீரத்தைக் காட்ட நான் உன்னோடு சண்டைக்குவரப் போகிறதுமில்லை. உனக்குப் பிரியமானால், என்னைக் கொன்றுவிட்டு நீ என்னிடமுள்ள பறவையை எடுத்துக்கொள்ளலாம். மனமார நான் இதை உன்னிடம் கொடுக்கமாட்டேன்" என்றார்

தேவதத்தன் ஒரு நிமிஷநேரம் அவனைக் கண் இமையாமல் பார்த்துநின்று, பிறகு, கீழே எறிந்த வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு, கௌதமரை நோக்கி, மீசையை முறுக்கி, "மானமற்ற பேடிப்பயலே, சண்டையென்றால் அஞ்சி நடுங்கும் உன்னோடு எனக்கென்ன பேச்சு! அரசனாகி நீ எவ்விதம் நாட்டை ஆளப்போகிறாயோ, தெரியவில்லை! பார்க்கிறேன்! நீ அரசனாய் ஆண்டாலும் சரி, ஆண்டியாய்த் திரிந்தாலும் சரி. இன்றுமுதல் நாம் இருவரும் ஜன்மப் பகைவர் என்பதை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள்!" என்று சொல்லிவிட்டு அகன்று சென்றான்.

அப்பால் கௌதமர், அவன் உரைகளை அடியோடு மறந்துவிட்டுத் தம மடிமீதிருந்த பறவையை எடுத்து, அதன் மார்பில் தைத்திருந்த அம்பை மிகவும் ஜாக்கிரதையுடன் மெல்லப் பிடுங்கினார் அம்பு வெளிவந்ததும், புண்ணிலிருந்து இரத்தம் பெருகியது. அதைக் காணவும் கௌதமர் மனம் சகியாமல் வருந்தினார். பறவையின் புண்ணிலிருந்து இரத்தம் பெருகினாற்போலக் கௌதமரின் கண்களிலிருந்து நீர் பெருகியது. அவர், மெய்காப்பாளன் நீரில் தோய்த்துக் கொண்டுவந்த உத்தரீயத்தை முறுக்கிப் பிழியச் சொல்லி, அதிலிருந்து ஒழுகிய நீரால் பறவையின் புண்ணை நன்றாய்க் கழுவிவிட்டு, உதாயி கொடுத்த விபூதியிற் கொஞ்சம் மடித்துப் புண்வாயில் வைத்து அழுத்தினார். உடனே இரத்தம் வருவது நின்றுபோயிற்று. பிறகு, கௌதமர் அப் பறவையைத் தடவிக்கொடுத்து, "இப்பொழுது உன் நோய் நீங்கிப்போயிற்றா? வருத்தமின்றிப் பறக்க உன்னால் முடியுமா? முடியுமானால் பறந்து போ. இனி எந்தத் துஷ்டர்கள் அம்புக்கும் இலக்காகாமல் ஜாக்கிரதையாயிரு," என்று சொல்லி அதைக் கீழே விட்டார்.

அவ்வன்னப் பறவை, கௌதமரைவிட்டுப் பறந்துபோக மனமில்லாததுபோலச் சிறிதுநேரம் அவரெதிரே, சின்னஞ் சிறு பெண்போலச் சிங்கார நடை நடந்து காட்டிற்று. பிறகு சிறகுகளை அடித்துக்கொண்டு மேலெழுந்து பறந்துபோயிற்று. அது கண்ணுக்கு மறைகிறவரையில் கௌதமர் அதையே பார்த்துக்கொண்டிருந்தார் அப்பால் அவர் உதாயியை நோக்கி, "தோழா, வா, நாம் போகலாம். இன்றுதான் உலவ வெளியில் வந்ததில் ஒரு நற்பயன் ஏற்பட்டது. சாவ இருந்த பறவை ஒன்றைக் காப்பாற்றினோம். என் மனம் சந்தோஷமாயிருக்கிறது. உதாயி, இந்த விந்தையைப் பார். நாம் ஏதாவது ஒரு நல்ல காரியம் செய்துவிட்டால், அதற்கு உடனே, கைம்மேற் பலனாக, ஒருவகை மனமகிழ்ச்சி உண்டாகிறதன்றோ. ஆதலால், நல்வினை செய்வது, கரும்பு தின்னக் கைக்கூலி பெறுவதுபோலன்றோ இருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டே எழுந்தார்.

உதாயியும் அவருடன் எழுந்து, "ஆம், நண்பா, நீ சொல்வது உண்மைதான். இழக்க இருந்த உயிரை, இழவாமல்

காத்ததால், அப் பறவை எவ்வளவு இன்புற்றிருக்கும். அது இன்புற்று வாழ்வதைக் காண்பது நமக்கும் இன்பந்தானே. இதனால்தான்,

> 'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
> காமுறுவர் கற்றறிந் தோர்.'

என்றனர் ஆன்றோர்," என்றான்.

"எங்கே, என் சகோதரர்களைக் காணோம் வா, நாம் பேசிக்கொண்டே போவோம் அவர்கள் வருகிறபடி வரட்டும்" என்று கூறி முன்சென்றார் கௌதமர்.

உதாயியும் அவருடன் சென்றான். மெய்காப்பாளன் அவர்கள் இருவரையும் தொடர்ந்து பின்சென்றான்.

* * * *

அன்னப் பறவையால் தேவதத்தனுக்கும் கௌதமருக்கும் நேர்ந்த பகைமையை, உதாயி மூலமாகவும் மெய்காப்பாளன் மூலமாகவும் சுத்தோதனன் விவரமாய் அறிந்து கொண்டான். அதுமுதல், கௌதமருக்குத் தேவதத்தன் பகைமையால் என்ன தீங்கு நேருமோ என்று அஞ்சி, கௌதமரை முன்னையினும் மிக்க பாதுகாப்பில் வைக்கக் கருதிச் சுத்தோதனன், மந்திரிகளோடு ஆலோசித்து, அடுத்த மாதமே கௌதமரை இளவரசாக்கி விட்டான்.



## அதிகாரம்—11

## திருமணம்

இளவரசராக இருந்தே கௌதமர் சில வருஷங்களைப் போக்கினார். அக்காலத்தில் அவர் காட்டிய அரசியல் திறத்தைக் கண்டு சுத்தோதனன் முதலியோர் வியப்புற்றனர்; குடிகள் அனைவரும் மகிழ்வுற்றனர்.

ஒருநாள் சுத்தோதனன், உலும்பினிச் சோலையில் தன் பிரதான மந்திரியுடன் தனித்துப் பேசிக்கொண்டிருக்கையில்,

சித்தார்த்தர் இளவரசராக இருந்து செய்யும் ராஜரீகம் எப்படி நடந்தேறி வருகிறதென்று விசாரித்தான்.

மந்திரி — "எப்பொழுதும்போலச் சிறப்பாகவே நடந்தேறி வருகிறது. குடிகளனைவரும், நம் இளவரசரை எப்பொழுது அரசராகப் பார்க்கப்போகிறோம் என்று ஆவலோடு காத்திருக்கிறார்கள்"

அரசன் — "அப்படியா! என்ன ஆச்சரியம்! சித்தார்த்தன் இளவரசனாகி மூன்றுவருஷ காலத்துக்குமேல் ஆகிறது. அவனளவுக்கு ஏற்பட்ட ராஜரீகத்தில் இதுவரையில் யாரும் யாதொரு குறையும் சொல்ல நான் கேட்டதில்லையே!"

மந்திரி — "குறையா! குறையில்லை என்பது மட்டும் அன்று, அரசே இவ்வளவு திறமாய் ராஜரீகம் செய்வாரைக் கண்டவர் எவர்? எல்லா அறிவும் எல்லா வல்லமையும் உள்ள இறைவனே அரசனாக வந்து அரசு செலுத்தினும், அந்த ராஜ்யத்திலும் குறைகூறும் குடிகள் இருப்பார்கள். அரசாட்சியின் தன்மை அப்படிப்பட்டது. நமது இளவரசர்மீது குறைகூறுவார் ஒருவர் இல்லையே."

அரசன் — "ஆம், மந்திரியாரே. நீர் சொல்லுவது நியாயந்தான். குறையற்ற குடிவைத் தாண்ட கோமகன் எவன்? எவனுமில்லை இத்தனை வருஷகாலமாக அரசாண்டு வருகிறேன் எல்லாருக்கும் திருப்தியாக ஆட்சிசெலுத்த எனக்கு இன்னமும் தெரியவில்லையே! நான் என்னதான் ஜாக்கிரதையாக யோசித்து யோசித்துச் செய்வனவற்றைச் செய்து தவிர்வனவற்றைத் தவிர்ந்து வந்தாலும், செய்தது தவறென்பாரும் செய்யாதது குறையென்பாரும் இல்லாமல் இல்லை. அனுபவம் சிறிதுமின்றி, அதிகாரத்தை ஏற்றுக் கொண்டதும் அதைக் குறைவறச் செலுத்தும் திறமை சித்தார்த்தனுக்கு எப்படி வந்தது? உம்மையொத்த அனுபவசாலிகளும் அறிவாளிகளும் உடனிருந்து உதவி செய்கிறீர்கள் என்பது உண்மை. இருந்தாலும், உங்கள் உதவியைப் பெற்றுவரும் எனக்கு அவ்வாறு ஆளமுடியவில்லையே!"

மந்திரி—"நன்றாய்ச் சொன்னீர்கள்? நமது இளவரசர் எங்கள் உதவிபெற்று தமது பொறுப்பை நிர்வகிக்கிறார் என்று நினைக்கிறீர்கள்? அந்த எண்ணம் வேண்டா. அவர் காட்டும்

வழியேதான் நாங்கள் செல்லவேண்டி யிருக்கிறது. ஆ, என்ன அறிவு! என்ன யூகம்! நாங்கள் இதுவரையில் அறியாத அரிய அரசியல் முறைகளையெல்லாம் அவர் எங்களுக்கு அறிவித்திருக்கிறார். அவைகளை அவர் எங்கே கற்றார், எப்போது கற்றார் என்று விளங்கவில்லை."

அரசன்—"இவ்விதமான அசாதாரண வன்மையெல்லாம் கற்றும் கேட்டும் வருவதா? பிறவியோடு வந்த பெருமை!"

மந்திரி—"ஆம், ஆம் அப்படித்தான் கொள்ளவேண்டும். வேறு வகையில்லை."

அரசன்—"மந்திரியாரே, எனக்கு ஓர் எண்ணந் தோன்றுகிறது. இப்பொழுது இளவரசனாய் உள்ள சித்தார்த்தனை, அரசனாகப் பார்க்கவேண்டுமென்று நமது பிரஜைகளும் விரும்புகிறார்கள், அவனும் அதற்கு எல்லா வகையிலும் அருகனாயிருக்கிறான். அவ்வாறாக, நான் ஏன் இன்னும் இந்த ராஜ்ய பாரத்தைச் சுமந்துகொண் டிருக்கவேண்டும்? அவனுக்குப் பட்டத்தைக் கட்டிவிட்டு, நான் ஒழிவுபெற்றால் என்ன?"

மந்திரி—"அவ்வெண்ணம் தங்களுக்குத் தோன்றுவது இயல்புதான். நமது இளவரசரை நாளையதினம் அரசராக்கினாலும், அவர் ராஜ்யபாரத்தைத் திறமையாக நிர்வகிக்கக் கூடியவர் என்பதில் ஐயமில்லை இருந்தாலும், இவ்வளவு இளம்பிராயத்தில் அவ்வளவு பெரிய சுமையை அவர்க்கு ஏற்றுவது நியாயமன்று. இப்பொழுது அவர்க்குப் பிராயம் பத்தொன்பதுதானே ஆகிறது. இன்னும் விவாகங்கூட ஆகவில்லையே. விவாகமாகி ஓர் ஐந்தாறு வருஷகாலமாவது, நிர்விசாரமாய் இல்லறம் நடத்திக்கொண் டிருக்கட்டும். அதன் பிறகு வேண்டுமானால் தங்கள் விருப்பம்போல் செய்யலாம்."

அரசன்—"எனக்கும் அதுதான் யுக்தமாய்ப் படுகிறது. சென்ற இரண்டு மூன்று வருஷங்களாக, அவனுக்கு விவாகம் செய்துவைக்க வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் குடிகொண்டிருக்கிறது அவனுடைய மனத்துக்கிசைந்த பெண்ணைத் தெரிந்தெடுக்க வேண்டுமென்பது என் கருத்து. அவன் என்னவோ, தன் விவாக விஷயத்தைப்பற்றிச் சிறிதும் சிந்தையில்லாதவனாய் இருக்கிறான். சதா சர்வகாலம் ராஜ்ய விவகாரங்களைக் கவனிப்பதிலும் சாஸ்திர ஆராய்ச்

சிகள் செய்வதிலும் கருத்தாயிருக்கிறனே யொழிய, அவன் பருவத்திற்குரிய வேடிக்கை விளையாட்டுகளில் சற்றும் மனம் செலுத்தாதிருக்கிறன். அதுதான் எனக்கு ஒரு பெருங் கவலையாயிருக்கிறது. அவன் அப்படியிருப்பது, என் சகோதரர் மைத்துனர் முதலியோர், அவனைப்பற்றி இகழ்வாய்ப் பேசுவதற்கும் இடமாயிருக்கிறது ”

மந்திரி—“ஆம் அரசே. தாங்கள் சொல்வது உண்மை தான். தங்கள் சுற்றத்தார் நம் இளவரசரைப்பற்றி இகழ் வாய்ப் பேசுவது என் காதுக்கும் எட்டியது. அது என் மனத்தை மிகவும் துன்புறுத்தியது. அவ்விதமான இகழ்ச் சிக்கு இடங் கொடுக்கக் கூடாதென்றே நான், நம் இளவரச ரிடம் அதைக் குறிப்பாய்த் தெரிவித்தேன்.”

அரசன்—“என்ன தெரிவித்தீர் ?”

மந்திரி—“ஆயுதப்பயிற்சி அரச வம்சத்தாருக்கு மிகவும் அவசியமானது. வேட்டமாடுதலும், பகைவரை எதிர்த்துப் போர் செய்தலும் க்ஷத்திரிய தருமம். நம்மை எதிர்க்கும் பகைவர்கள் இல்லை. ஆதலால் போர்செய்ய இடமின்று யினும், காட்டிற் சென்று வேட்டமாடுதலைக் கைவிட்டிருத்தல் கூடாது என்றேன்.—”

அரசன்—“நான்கூட ஒருமுறை அவனை வேட்டையாடி வரும்படி சொன்னேன். அதற்கவன்,

‘சிலையினுன் மாக்கள் கொன்று செழுங்கடல் வேட்ட மாடி
வலையினுன் மீன்கள் வாரி வாழுயிர்க் கூற்ற மான
கொலைஞரைக் கும்பி தன்னுட் கொந்தழ லழுத்தி யிட்டு
நலிகுவர் நாளு நாளு நரகரை நாம வேலோய்’

என்றன். அதற்குமேல் நான் என்ன சொல்வது?”

மந்திரி — “என்னிடமும் அப்படித்தான் சொன்னர். வேட்டையாடிக் காட்டு மிருகங்களைக் கொல்வதும், துஷ்டர் களையும் பகைவர்களையும் கொல்வதும் ராஜதருமமேயாகும்.

‘கருவிநஞ் சாதி தம்மாற் காமரா ருயிரைக் கொல்வோர்
வெருவரச் சூறை கொள்வோர் மேவியா றலைப்போர் கள்வர்
உருவளர் பிறனில் வேட்போர் உவர்முத லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று ; பயிர்க்களை களைதல் போலாம் ;

'பரிசனம் பகைவர் கள்வர் படர்தரும் உயிர்கள் தாமென்
றுரைசெயைந் திடத்தி னும் உலகிடை இடையூ றெய்தா
வரிசையிற் காத்து நீதி வழுக்கினார் தம்மை மொத்திக்
கரிசறப் பொருளுங் கோடல் காவலர் தருமம் மைந்தா'

என்று சுருதி யுக்தி யனுபவங்கள் காட்டிக் கூறினேன்."

அரசன்—"அதற்கவன் என்ன சொன்னான்?"

மந்திரி—"நான் சொன்னதெல்லாம் நியாயந்தான் என்று ஒப்புக்கொண்டார் ஆனால், அவ்விதமான இடையூறுகள் எவையும் நம் நாட்டுக்கு நேராதிருக்கும்போது நாம் ஏன் வேட்டமாடச் செல்லவேண்டும் என்றார். 'ஆயுதாப்பியாசத்தை நெடுநாளாகக் கைவிட்டிருந்தால், திடீரென்று அதைக் கையாள நேரும்போது கஷ்டமாகும். அதனால்தான் தங்கள் உறவினர் எங்கே தங்கள் வில்லாண்மை குன்றிப்போகுமோ என்று அஞ்சுகிறார்கள். அவர்கள் மனத்திருப்திக்காகவாவது தாங்கள் ஒருநாள் வேட்டமாடி வந்தால் நல்லது' என்றேன்."

அரசன்—"அதற்கவன் சம்மதித்தானா?"

மந்திரி—"அதற்கவர் சம்மதிக்கவில்லை. ஆனால், வேறொரு வகையில் எனக்குச் சமாதானம் சொல்லிவிட்டார்."

அரசன்—"என்ன வகையில்?—"

மந்திரி—"இன்னும் இரண்டொரு வாரத்தில் நாம் ஆயுத பூசை கொண்டாடும்நாள் வருகிறதன்றோ? அன்றையதினம், ஒரு பெரிய அரும்பொருட்காட்சி நம் அரண்மனை எதிரேயே அமைத்து, அதில் காட்டப்படும் பலவகைக் காட்சிகளில், வீரக் காட்சியும் ஒன்றாக வைக்கும்படி சொன்னார். 'சிறந்த போர்வீரர்களும் ராஜகுமாரர்களும் அந்த வீரக் காட்சியில் தம் வில்லாண்மை, வாளாண்மை, கைவன்மை முதலியவைகளைக் காட்டட்டும். நானும் அவர்களோடு கலந்து என் வீரத்தைக் காட்டி, என் உறவினர் கொண்டிருக்கும் அச்சத்தை ஒழிக்கிறேன் என்றார்."

அரசன்—(சிறிதுநேரம் சிந்தித்துப் பிறகு) "அது நல்ல யோசனைதான். ஆனால் சித்தார்த்தன் அதிற் கலந்தால் என்ன நேருமோ என்று அஞ்சுகிறேன்."

மந்திரி—“ஏன்? வேறு யாராவது அவரை வென்று அவர்க்கு அவமானம் விளைத்துவிடுவார்களோ என்று?”

அரசன்—“இல்லை. தோற்றால் உண்டாகும் அவமானத்தைப்பற்றி அவ்வளவாகக் கவலையில்லை. தேவதத்தன் அவனிடமிருந்த பகைமை பாராட்டி வருகிறான். பறவையால் அவனுக்குச் சித்தார்த்தனிடம் துவேஷம் உண்டானது முதல் அவன் நம் அரண்மனைக்கு வருவதேயில்லை. சித்தார்த்தன் வீரத்தைப்பற்றி உறவினர்கள் இகழ்ந்து பேசுவதற்கு அவன் தான் மூலகாரணம். இந்த வீரக்காட்சியில் அவன் சித்தார்த்தனுடன் போட்டிபோடுவதாக வந்து, வஞ்சனையாய் அவன் உயிர்க்கு எவ்வகையிலாவது தீங்கு செய்துவிட்டால் என்ன செய்கிறதென்றுதான் யோசிக்கிறேன். வேறொன்றுமில்லை”

மந்திரி—“அந்த அச்சம் வேண்டா. இளவரசருக்கு எவ்வகையிலும், யாராலும், எவ்வித ஆபத்தும் நேரச் சிறிதும் இடமில்லாதபடி நாங்கள் தக்க ஏற்பாடுகள் செய்யமாட்டோமோ?”

அரசன் — “அதற்கு நீர் உத்தரவாதியாயிருப்பதானால, எனக்கு ஆக்ஷேபனை இல்லை.”

மந்திரி—“ஓ, தாங்கள் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் இளவரசர் க்ஷேமத்துக்கு நான்தான் உத்தரவாதி.”

அரசன்—“அப்படியானால் சரி. அவன் விருப்பம்போலவே செய்யும்.”

மந்திரி—“அந்த அரும்பொருட் காட்சியைக்கொண்டே, இளவரசருக்கு விவாகஞ் செய்ய, அவர் மனததுக்குகந்த பெண் யாரென்று தெரிந்துகொள்ளவும் ஒருவகை யோசித்து வைத்திருக்கிறேன்.”

அரசன்—“என்ன அது?”

மந்திரி—“சிறந்த ஓவியர்கள் சிலரைக்கொண்டு, பலதேச ராஜ கன்னிகைகளின் வடிவங்களை எழுதுவித்து, அப்படங்களைப் பொருட்காட்சிக்குக் கொண்டுவரச் செய்கிறது. இளவரசர் அப்படங்களையெல்லாம் பார்வையிட்டு, அவற்றுள் எது சிறந்த படமாக அவருக்குத் தோற்றுகிறதோ, அந்தப்

படத்தை எழுதிய ஓவியனுக்கு அவரே ஒரு பரிசு கொடுக்கும் படி செய்கிறது. அப்பொழுது அவர் மனதுக்குகந்த பெண் யாரென்று தெரிந்துவிடுமல்லவா?''

அரசன்—"ஆம், ஆம். அது நல்ல யோசனைதான். அப்படியே செய்யும்."

மந்திரி—"ஆனால் நான் பொருட்காட்சிக்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் செய்யலாமன்றோ?"

அரசன்—"செய்யலாம்"

"நல்லது. ஆயுதபூசைப் பண்டிகை இன்னும் பத்துநாள் இருக்கிறது. அதற்குள் ராஜகன்னிகைகள் படமெல்லாம் எழுதிவரவேண்டும். அது ஒன்றுதான் பெரியவேலை. மற்ற ஏற்பாடுகள் எல்லாம் இரண்டு மூன்று நாட்களில் பூர்த்தியாய்விடும். தங்கள் உத்தரவு பெறுவதற்காகத்தான் நான் இங்கே வந்தேன். போய் வருகிறேன்" என்று மந்திரியார் அரசனுக்கு வந்தனம் செய்து அவனிடம் விடைபெற்றுப் போய்விட்டார்.

* * * *

ஆயுத பூசைக்குரிய நாள் வந்துற்றது. சுத்தோதனன் அரண்மனைக்கெதிரே, பொருட்காட்சி மண்டபம் ஒன்று புதிதாக அமைக்கப்பட்டிருந்தது. அதில் கண்ணைக் கவரும் நானுவகையான அரிய பொருள்கள் முறைப்பட வைக்கப்பட்டிருந்தன. மண்டபத்தின் மத்தியபாகம் திறப்பான ஒரு பெருவெளியா யிருந்தது. அதன் நடுவே சுமார் நூற்றறுபது அடி உயரமுள்ள கம்பமொன்று நாட்டப்பட்டிருந்தது அதன் உச்சியில், நெட்டியால் செய்து சித்திரிக்கப்பட்ட மயிற் பிரதிமை ஒன்று, காற்றினால் உந்தப்பட்டு மெல்லெனச் சுழன்று கொண்டிருந்தது. அதன் இருகால்களுக்கும் நடுவே இளவாழைத் தண்டின் சிறு துண்டமொன்று, கம்பத்தின் உச்சியிலிருந்து முளைத்தெழுந்தாற்போலக் கம்பத்தோடு கம்பமாய் உறுதிபடப் பொருத்தப்பட்டிருந்தது. அதுவே வில்லாண்மை காணவைத்த இலக்கு. எவன் ஒருவன், குறி பார்த்து அவ் வாழைத்தண்டை எய்து, அம்பு அதனில் கோப்புண்டு, அதனால் மயிலின் சுழற்சி தடைப்பட்டு நிற்

கும்படி செய்கிறானோ அவனே வில்லாண்மைப் போட்டியில் வென்றவனாவான்.

காட்சி விநோதத்தில் வில்லாண்மை காண்பதே முதன்மையாகக் குறிக்கப்பட்டிருந்தது ராஜவம்சத்தாருக்கென்று பிரத்தியேகமாக அமைக்கப்பட்டிருந்த மேடையில சுத்தோதனன் முதலியோர் வீற்றிருந்தனர். வேற்றுநாட்டரசர் சிலரும, சுத்தோதனன் அனுப்பியிருந்த அழைப்புப் பத்திரத்தைக் கௌரவிக்க வந்து. ஆண்டு அவனோடு வீற்றிருந்தனர். அவர்களுள் ஒருவனாகச் சுப்பிரபுத்தனும் வந்திருந்தான். கௌதமர், அயலிருந்தார் அனைவர் கண்களையும் கவர்ந்து கொண்டு, சுத்தோதனனுக்கு அருகே, சிவபிரான் மருங்கிற் குமரவேள்போல அமர்ந்திருந்தார். ஆனந்தன், தேவதத்தன், அனுருத்தன், நந்தன் முதலிய ராஜகுமாரர்கள் பிறரும், அம் மேடையிலேயே ஒருபுறத்து ஒருசேர உட்கார்ந்திருந்தார்கள்.

தெய்வபூசை முடிந்து, காட்சி தொடங்கியது. மந்திரியார், ராஜகுமாரர்களின் வில்லாண்மைத திறத்துக்கு இலக்காவது யாதெனக் காட்டி, அதில் வெற்றிபெற விரும்புவோர் செய்யவேண்டுவ தீதுவெனவும கூறினார். பிறகு, ராஜகுமாரர்கள் ஒவ்வொருவரும் தத்தம் வயது முறைமைப்படி, இலக்கு நோக்கி வில்வளைத்து அம்பெய்யும்படி கேட்டுக் கொள்ளப்பட்டனர்.

அனைவருக்கும் மூத்தோனான ஆனந்தன், முதன்முதல் அம்பெய்தான் அவ்வம்பு, மயிலுக்கு மேலாகச் சென்று, கண்ணுக்கெட்டாத தூரத்திற்போய் விழுந்துவிட்டது. அப்பால், தேவதத்தன் தன் வில்லை வளைத்து, வெகு நிதானமாகக் குறிபார்த்து இலக்கை எய்தான். அவன் அம்பு மயிலின் கலாபத்திற்பட்டு, அதை ஒரு சிறிது மூளியாக்கிக் கீழே விழுந்தது. மயில் முன்னையினும் சிறிது வேகமாகச் சுழன்றது. அதுதான் தேவதத்தன் செய்தது. அதற்குப் பிறகு கௌதமர் முறை வந்தது. ஆண்சிங்கம் பிடர் குலுக்கி எழுவதுபோலக் கௌதமர் முடி துளக்கி எழுந்து சென்று, வில்லை வளைத்து நாணேறிட்டு அம்புபூட்டி இலக்கைக் குறிவைத்தெய்தார். அதிதீவிர பக்குவனான மாணாக்கன் அறிவில், ஞானாசாரியன் சொன்ன சொற்பொருள் ஊடுருவிப் பதிந்து நின்

ருற்போல, இலக்குவைத்த வாழைத்தண்டில், கௌதமர் எய்த அம்பு ஊடுருவிப் பதிந்து நின்றது. அஞ்ஞானத்தால் அலைபடும் மனம் குருமொழியால் ஞானவிளக்கம் பெற்றவுடனே உபசாந்த நிலையில் தோய்வுற்று நிற்பதுபோல, காற்றிற் சுழன்றுகொண்டிருந்த மயிற் பிரதிமை ஒரே நிலையில் ஓய்வுற்று நின்றது. அதுகண்ட அரசரும் குடிகளும் 'சபாஷ் சபாஷ்!' என்று மெச்சிக் கைகொட்டி ஆர்த்தனர். சுப்பிரபுத்தன், இருக்கைவிட்டெழுந்து சென்று கௌதமர் கழுத்தில் ஒரு மணியாரத்தைப் பரிசாக அணிந்து, அன்புரையும் வாழ்த்துரையும் கூறி அவரை அழைத்துவந்து தன் அருகிருத்திக் கொண்டான்

அப்பால் வாட்போர் மற்போர் முதலிய காட்சிகள் நிகழ்ந்தன. அவற்றிலும் தம் வன்மையைக் காட்டச் சித்தமாய் எழுந்தார் கௌதமர். ஆயினும், அவர் உறவினரும் வேற்று நாட்டரசரும் அவரைத் தடுத்து, "வில்லாண்மையிலேயே உனது ஆற்றல் அனைவருக்கும் தெரிந்துவிட்டது. ஏன் நீ அனாவசியமான சிரமத்துக்குள்ளாகிறாய்? வேண்டா" என்றனர். அவர்கள் விருப்பத்தை அனுசரித்துக் கௌதமர் மற்றப் பந்தயங்களில் கலையிடாதிருந்துவிட்டார்

இந்தப் பந்தயங்கள் எல்லாம் முடிந்தபிறகு, சுத்தோதனன் முதலியோர் தம் இருக்கைவிட்டெழுந்து, மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்த பல்வகைப் பொருட்காட்சிகளையும் பார்த்துக்கொண்டு போனார்கள். எல்லாக் காட்சிகளுக்கும் கடைசிக் காட்சியாக வைக்கப்பட்டிருந்த சித்திரக்காட்சிச் சாலைக்கு அவர்கள் சென்றதும், மந்திரியார் கௌதமரை நோக்கி, "இளவரசே, இங்குள்ள படங்கள் ஓவியம் வல்லார் பலரால் எழுதப்பெற்றன. இவற்றுள் முதன்மையானது எது என்று தாங்கள் தெரிந்தெடுக்கவேண்டும். அதை எழுதிய ஓவியப் புலவருக்குத் தங்கள் திருக்கரத்தால் இந்தத் தங்கத் தோடாவைப் பரிசாக அணியவேண்டும்" என்று சொல்லித் தம் கையில் ஒரு சிறு வெண்பட்டுக் குட்டையால் மூடிவைத்திருந்த தங்கத் தோடாவை அவரிடம் கொடுத்தார்.

கௌதமர் புன்னகை செய்து அதைத் தம் கையில் வாங்கிக்கொண்டு, அந்தச் சித்திரச் சாலையில் வைக்கப்பட்டிருந்த

படங்களையெல்லாம் ஒருமுறை பொது நோக்காகப் பார்த்தார். அப்பொழுது, பலர் கூடிய கூட்டத்தில் ஒருவர் முகம் மட்டும் பூர்வ ஜன்ம வாசனையால் மற்றொருவர் கண்ணைக் கவருவதுபோல, அங்கிருந்த பல படங்களுள் ஒருபடம் மட்டும் கௌதமர் கண்களைக் கவர்ந்தது. அப்படத்தில் அவர், தம் மாமன்மகள் யசோதரையின் உருவைக் கண்டார். அவர் நோக்கம் அவ்வுருவின் மீது ஒரு நொடி நேரந்தான் பதிந்திருந்தது. அவ்வொருநொடி நேரத்துள், அவர் உள்ளம் என்றும் அனுபவித்தறியாத ஒருவகை நூதன இன்ப மயக்கத்துக் கிடமாயிற்று. ஆனால், மறு நொடியில் அம் மயக்க உணர்ச்சி அவர் மனத்தைவிட்டகன்றது. அவர் அப் படத்திற் பதித்த பார்வையை அகற்றி, படங்கள் எல்லாவற்றையும் வரிசைக் கிரமப்படி பார்த்துவந்தார். அப்போது, யசோதரையின் படத்தண்டை வரவும், சற்றுத் தாமதமாக நின்று அதை உற்று நோக்கினார். அவர் முகம் அப்படத்தைக் காணக் காண, அலர்ந்து விளங்கிற்று. மற்றப் படங்களைப் பார்த்ததைவிட அதைச் சிறிது கூர்மையாக நோக்கினார். பிறகு, அதை அகன்று அப்பாற் செல்ல மனமில்லாதவர் போலத் தயங்கி நடந்து எஞ்சியிருந்த சில படங்களை மிகவும் மேல்நோக்காகப் பார்த்துவிட்டு மீண்டும் யசோதரையின் படத்தண்டை வந்து, "இந்த ஓவியத்தை எழுதியவர் யார்?" என்று, தம் அருகேயிருந்த மந்திரியைக் கேட்டார்.

உடனே மந்திரியார், அப் படம் எழுதிய ஓவியனை அழைத்துவந்து கௌதமர் எதிரே நிறுத்தினார். கௌதமர் அவ் வோவியனை நோக்கிப் புன்னகை செய்து, "நீர் எழுதிய இந்தப் படம் மிகவும் அழகாயிருக்கிறது. இதை எழுதிய உமது கைத்திறத்துக்கு இது ஒரு சிறு அடையாளமாக இருக்கட்டும்" என்று சொல்லித் தம் கையில் வைத்திருந்த தோடாவை அவன் கரத்தில் அணிந்தார்.

இளவரசர் திருக்கரத்தால் தோடா அணியப் பெறும் கௌரவத்தைப் பெற்ற ஓவியன், தலை தாழ்த்துக் கைகுவித்துக் கௌதமரை நமஸ்கரித்துவிட்டுச் சென்றான். பிறகு கௌதமர் மந்திரியாரை நோக்கி, "இந்தப் படத்தை என் அரண்மனைக்கு அனுப்புவியும்" என்று கூறிவிட்டுத் தாம் தந்தையிடம் சென்றார். சித்திரப்படக் காட்சியோடு ஆயுத

பூஜாமஹோத்ஸவம் முடிவுற்றது. காட்சிமண்டபத்திற் கூடியிருந்த கூட்டம் கலைந்தது. வேற்று நாட்டரசர் பலரையும் உபசரித்து, அவரவர்க்கு நியமித்த ஜாகைக்கு அனுப்பிவிட்டுத் தன் மைத்துனன் சுப்பிரபுத்தன், குமாரர் கௌதமர் இருவரோடும் ரதமேறி, அடுத்திருந்த அரண்மனை சேர்ந்தான் சுத்தோதனன்.

பல்பொருட் காட்சியின் நோக்கம் நிறைவேறிற்று. கௌதமர் தமது வில்லாண்மையை நன்கு காட்டி உறவினரிற் சிலர் கூறிவந்த பழிச்சொற்களை வலிகுன்றச் செய்துவிட்டார். அது மட்டுமன்று; தம் மனத்துக்குகந்த மங்கைநல்லாள் யசோதரையே என்றும் குறிப்பால் உணர்த்திவிட்டார். இதுவே சுத்தோதனனுக்கு மிகுந்த மனத்திருப்தியைத் தந்தது. சுப்பிரபுத்தனோ, தன் மருமகனார் காட்டிய திறத்தைக் கண்டு வியந்தானாயினும், தன் மகள் யசோதரையின் உருவப் படத்தைக் காண்கையில் அவர் வெளிக்காட்டிய மனத்திறத்தையே சிறப்பாகப் பாராட்டிப் பெருமகிழ்வுற்றான்.

அன்றிரவே, மைத்துனர் இருவரும் கௌதமர் திருமணத்தைக் குறித்து, ஒன்றுகூடித் தனித்திருந்து ஆலோசிக்கலாயினர்.

"புதிதாகக் காட்சி மண்டபம் வகுத்து, உங்களையெல்லாம் அவசியம் வரும்படி எழுதி வருவித்ததன் முக்கிய நோக்கம், சித்தார்த்தன் மனப்போக்கை யறிந்து விவாக விஷயத்தை விரைவில் முடிக்கவேண்டும் என்பதுதான்" என்றான் சுத்தோதனன்.

சுப்பிரபுத்தன் புன்னகைசெய்து "அவன் மனப்போக்கை அறிய நல்ல யுக்தி செய்தீர்கள்" என்றான்.

"மந்திரியார் யோசனை இது" என்றான் சுத்தோதனன்.

"அப்படியா. அவர் யோசனை நமக்கு அனுகூலமாய்த்தான் முடிந்தது. யசோதரையைக் கௌதமனுக்குக் கொடுக்க வேண்டும் என்பதுதான் எனது நெடுநாளைய விருப்பம். யசோதரையின் விருப்பம் எப்படியிருக்குமோ என்று, அவள் தாயாரைக்கொண்டு அறிய முயன்றேன். அவளுக்கும் என் விருப்பமே தன் விருப்பமாக இருப்பது தெரிந்தது. தங்கள் விருப்பமும் அதுவே என்பதில் எனக்கு அணுவளவும் சந்

தேகமில்லை. கௌதமன் மனோபீஷ்டமும் அப்படித்தான் இருக்குமென்று ஒருவாறு எனக்குத் தோற்றியது. ஆயினும் அதை நிச்சயமாய்த் தெரிந்துகொள்ள வேண்டுமென்று எண்ணியிருந்தேன். நெடுங்காலத்துப் பயிர் பாருங்கள். நம்முடைய விருப்பம் எப்படியிருந்தாலும் பாதகமில்லை. பெண்ணை விவாகம் செய்துகொள்ளப் போகிறவன் அவன். அவனுடைய விருப்பம் இன்னதென்று நிச்சயமாய் அறிய வேண்டியது அவசியமன்றோ?" என்றான் சுப்பிரபுத்தன்.

"ஆம், ஆம். நீங்கள் சொல்வது நியாயந்தான். சித்தார்த்தன் விருப்பம் இன்னதென்று இப்பொழுது உங்களுக்கு நிச்சயமாய்த் தெரிந்துவிட்டதல்லவா?"

"ஓ, தெரிந்துவிட்டது இன்னும் என்ன சந்தேகம்? மாப்பிள்ளைதான் பெண்ணை வீட்டுக்குக் கொண்டுவருவதற்கு முன்னே, பெண்ணின் உருவப்படத்தைக் கொண்டுவந்து விட்டாரே!"

"பெண்ணை எப்பொழுது கொண்டுவந்து கொடுப்பதாக யோசித்திருக்கிறீர்கள்?"

"பெண்ணைக் கொண்டுவந்து கொடுக்கவேண்டுமா, என்ன! வெறும் படத்தையுமன்றோ மாப்பிள்ளை அது இருந்தவிடத்திற்கு நேரிற்போய்க் கொண்டுவந்தார்!"

"உங்கள் வீட்டுக்கு வந்து பெண்ணை அழைத்து வர வேண்டுமென்கிறீர்களோ?"

"பின்னை என்ன? அதுவும் சும்மா வந்தால் ஆகுமா? பிள்ளைக்கேற்ற பெண் அவ்வளவு சுலபத்திற் கிடைத்துவிடும் என்று நினைக்கவேண்டா. பெண்ணுக்கேற்ற பரிசம் கொண்டுவந்தால், அக்கினி சாட்சியாக மந்திரசுத்தியாகப் பெண்ணைக் கொடுப்போம்."

"பெண்வீட்டார் நீங்கள் இவ்வளவு பேசினால், பிள்ளை வீட்டார் நாங்கள் அதற்குமேற் பேசலாம். கடலிற்பிறந்த முத்தானாலும் உடலுக்கணியாகத்தானே வரவேண்டும்."

"உண்மைதான். யார் இல்லையென்கிறார்கள். நான் சொல்வது அதுவன்றே. கழுத்தில் அணிய முத்துவேண்டுமானால், அது பிறந்த கடலிற் குளித்துத்தானே எடுத்துவரவேண்டும் என்கிறேன்."

சுத்தோதனன் சிரித்துக்கொண்டு, "ஆகக்கூடி நீங்கள் சொல்வதெல்லாம், விவாகம் கோலிய தேசத்தில் நடக்கவேண்டு மென்கிறீர்கள். அவ்வளவுதானே. உங்கள் விருப்பம் அது வானால் அப்படியே செய்வோம். எனக்கு ஆட்சேபனையில்லை. ஜேஷ்ட புத்திரனாயிற்றே, பிறந்த நகரிலேயே விவாகமானால் நல்லதென்றெண்ணினேன்" என்றான்.

"அப்படியே செய்யுங்கள். எனக்கும் அதுதான் திருப்தி. கோலிய தேசத்தில் விவாகம் வைத்துக்கொள்ளவேண்டுமென்று குறிப்பித்தது, விளையாட்டாகவேயொழிய வேறன்று."

"சரி, விவாகம் எப்பொழுது நடத்தலாம்?"

"தங்களுக்கு எப்பொழுது விருப்பமோ, அப்பொழுது நடத்துங்கள். அடுத்த தைமாதம் வைத்துக்கொண்டாலும் எனக்குச் சம்மதந்தான்."

"அதுவேதான் என் கருத்தும். தைமாதமே நல்ல முகூர்த் தநாள் ஒன்று பார்த்து நாம் நமது குழந்தைகளின் விவாகத்தை நிறைவேற்றிவிடுவோம்."

"அப்படியே செய்வோம்" என்றான் சுப்பிரபுத்தன்.

* * * * *

சம்பந்திகள் இருவரும் நிச்சயித்தவாறே, அதே வருஷம் தைமாதத்தில், கிரகங்களும் நட்சத்திரங்களும் நன்னிலையில் நின்ற ஒரு சுபமுகூர்த்தத்தில், கௌதமருக்கும் யசோதரைக் கும் விவாகம் நிறைவேறியது. மணமக்கள் இருவரும், விமா னத் தமர்ந்து ஊர்வலம் வந்தனர் அப்போது, கௌதமர் பால் அன்பு மிக்க குடிகளனைவரும் தம் வீட்டுவாயின் முகப் பிற் பலவகை அலங்காரங்கள் செய்து, தரைமெழுகிக் கோல மிட்டு, முளைக்குடம், தீபம் முதலிய மங்கலச் சின்னங்கள் வைத்து, இளவரசர்பால் தமக்குள்ள அன்பினைப் புலப்படுத் தினர். ஆடவரும் பெண்டிரும் தலைமயங்கித் திரண்டு நின்று தம்பதிகளைக் கண்குளிரக் கண்டு மனங்குளிர வாழ்த்தினார்கள்.

நரைமுதாளர் சிலர், கௌதமரையும் யசோதரையையும் கண்டு, "தம்பதிகள் என்றால் இப்படியல்லவா இருக்கவேண் டும்! என்ன பொருத்தம்! இந்திரனும் இந்திராணியும் என் றால் இவர்களுக்கே தகும்!" என்று வியந்தனர்.

"சேதாம்பல் வீழ்ந்தனைய செவ்வாயும்
செங்குவளை திளைத்த கண்ணும்
மீதார்ந்த வெண்ணிலாச் சுடரொளியும்
வெள்ளிக்குன் றனைய தோளும்
போதார்ந்த கருங்குஞ்சி மணிதொடர்ந்தாற்
போற்புறந்தாழ்ந் திருண்ட வாறும்
காதார்ந்த குழைதாழக் கதிருமிழ்ந்த
திருமுகத்தின் கதிர்ப்புங் காண்மின்!"

என்று ஆடவர் சிலர் கௌதமர் உருவைக் கண்டு வியந்து தம் தோழர்க்குக் காட்டினர்

மகளிர் சிலர், யசோதரை, நவரத்ன கசிதமயமான விமானத்தில் கௌதமரோடு வீற்றிருந்த திருக்கோலத்தைக் கண்டு, உள்ளடங்காப் பெருமகிழ்வுற்று, உடனிருந்த நங்கையரை நோக்கி, "அதோ பாருங்கள், அம்மைமீர் நாமும் பெண்ணென்று பிறந்தோமே அதோ, இளவரசர் பக்கத்தில் இளவரசியாய் வீற்றிருக்கும் மங்கையர்க் கரசியைப் பாருங்கள்.

"அருமணிநீள் விமானத்தின் ஆகாயப்
பளிங்கியன்ற விளிம்பி னூலும்
திருமணியி னொளிமேனி நிழலெறிப்பத்
திகழ்ந்திலங்குந் தெய்வப் பாவை
கருமணியின் கதிர்குழற்றிக் கடைசுருட்டிக்
கைசெய்து வளர்த்த போலும்
புரிமணியொண் குழல்திகழப் பொன்னணைமே
லினிதிருந்த பொலிவு காண்மின்."

என்று கூறிக் குதூஹலித்தனர்.



அதிகாரம்—12

## மனையறம்

'திண்ணிய நெஞ்சப் பறவைசிக்கக் குழற்காட்டிற்
கண்ணிவைப்போர் மாயம் கடக்குநாள் எந்நாளோ?'

என்றார் தாயுமானவர். அவ் வுண்மையை அறிந்துதான் சுத்தோதனன் கௌதமருக்கு மணம்புரிவித்தான். பின் வருவதை முன் உணர்ந்து கூற வல்ல பெரியோர் மூவர்,

கௌதமர் துறந்து செல்வார் என்பதைக் குறிப்பித்திருந்ததால், 'அருமை மகன் எப்பொழுது துறப்பானோ' என்ற அச்சம் சுத்தோதனன் மனத்தைவிட்டு அகலவில்லை. கௌதமர் மனம் துறவில் செல்லவொட்டாமல் தடுப்பதற்குச் சுத்தோதனன் செய்த சூழ்ச்சிகள் பலவற்றுள் பிரதானமான ஒன்றாகும் அவரை சமசார பந்தத்திற் கட்டுப்படுத்தியது ஆயினும் அவ்வளவில் சுத்தோதனன் மனம் திருப்தியடையவில்லை. விதியைத்தடுக்க எவ்வளவு பெரிய அணை கோலினாலும், ஏதாவது ஒரு சிறு இடைவெளி கண்டால், அது வாயிலாக அவ் விதி வெளிப்பட்டுத் தன் வல்லமையைக் காட்டிவிடு மன்றோ? அதற்கு இடமில்லாமல், இன்னும் என்ன என்ன பாதுகாப்புகள் அமைக்கக் கூடுமோ, அவைகளை யெல்லாம் அமைத்தான் சுத்தோதனன்.

மிகவும் விசாலமான ஒரு சிங்காரத்தோட்டத்தில் வேனிற் காலம், மழைக்காலம், பனிக்காலம் ஆகிய இம் மூன்றுகாலங்களிலும் வசிப்பதற் கேற்றவாறு மூன்று மாளிகைகள் கட்டப் பெற்றன. அவற்றுள் ஒன்று ஐந்து உப்பரிகைகளை உடையது; மற்றொன்று ஏழு உப்பரிகைகளை உடையது; மூன்றாவது ஒன்பது உப்பரிகைகளை உடையது. அவ்வக் காலத்தில் அத்தற்கேற்ற மாளிகையிலிருந்து கௌதமரும் யசோதரையும் மனையறம் நடத்திவரும்படி சுத்தோதனன் திட்டஞ்செய்திருந்தான் அதுவன்றியும் அம் மாளிகைகளில் மனத்தை இன்புறுத்தற்குச் சாதனமானவை பலவும் நிரப்பி வைத்திருந்தான் 'தோட்டத்தைச் சூழ உயர்ந்த மதிலை யெழுப்பி, இரவும் பகலும் அம் மதிலைச் சூழ்ந்து போர்வீரர் காக்கவும், அருவருக்கத்தக்க பொருள்களுள் யாதொன்றும் கண்ணுக்குப் புலப்படாமலிருக்கவும் புரிவித்தான்.' இம் மட்டுமல்ல. மாளிகைகளில் கண்ணைக் கவர்ந்து மனத்தை மயக்கிச் சம்சார வாழ்க்கையிலேயே உள்ளத்தைப் பிணிக்க வல்ல சிருங்கார இச்சைகளைப் புகட்டுமாறு, ஆடல் பாடல்களில் தேர்ந்த சுந்தர மகளிர் பலரை நியமித்து, அடிக்கடி இன்னிசை பாடியும் நாட்டிய மாடியும் இளவரசர்க்குக் களிப்பூட்டி வருமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டிருந்தான்.

இவ்வகையான சூழ்ச்சிகள் முற்றும் பயனற்றுப் போகவில்லை. சில வருஷகாலம் கௌதமர் இல்வாழ்க்கையின்

இன்பத்திலேயே திளைத்திருந்தார். அது கண்டு சுத்தோதனன், ஒருவாறு கவலையொழிந்து மகிழ்ச்சியுற்றிருந்தான். ஐந்தாறு வருஷங்கள் இன்பமாகவே கழிந்தன. கௌதமரும் யசோதரையும்போல் மனமொத்த தம்பதிகள் வேறெவரும் இரார் என்று யாவரும் கொண்டாடும்படி, அவர்களிருவரும் அவ்வளவு அந்யோந்யமா யிருந்தனர்.

அப்பால், கௌதமரின் மனத்தில் ஒருவகை வெறுப்புத் தோன்றியது. அது நாளடைவில் வளர்ந்து யசோதரை கவனிக்கும் அளவு முற்றியது. யசோதரை அதைக் கண்டு மிகவும் கவலையுற்றாள். ஆயினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், தன் கணவன்பால் முன்னையினும் பதின் மடங்கு காதல் காட்டி, அவர் மனத்தைத் தன்னை விட்டகலாது பிணிப்பதிலேயே நாட்டமாயிருந்தாள். ஆனால், அவள் கருத்து ஈடேறுவது அரிதாய்த் தோற்றியது.

ஒருநாள் இரவு எட்டுமணியிருக்கும் கௌதமர் தமது பள்ளியறையில், ஒரு நாற்காலியில் ஏதோ சிந்தனையாய் அமர்ந்திருந்தார். அவர் பார்வை, அவருக்கெதிரே சுவரில் மாட்டப் பெற்றிருந்த ஒரு படத்தின்மீது பதிந்திருந்தது. அது யசோதரையின் உருவப்படம்; விவாகமாவதற்குமுன், அவரது மனக்குறிப்பறிவதற்காக எழுதப்பட்ட படங்களுள் சிறந்ததென அவரால் தேர்ந்தெடுக்கப் பெற்றது அப்படத்தில் காணப்பட்ட யசோதரையின் உருவத்திற்கும், இப்பொழுது காணப்படும் யசோதரையின் மெய்யுருவத்திற்கும் வேறுபாடு சிறிதிருந்தது அது, யசோதரையின் வயதேற்றத்தால் இயற்கையாய் உண்டான வேறுபாடே யொழிய, ஓவியனது திறமைக் குறைவால் உண்டானதன்று. படம் எழுதப்பட்ட காலத்தில், யசோதரையின் மெய்யுருவத்திற்கும், படத்திற்கும் யாதொரு வேறுபாடும் தோற்றியதில்லை.

ஆனால், இங்ஙனம் உண்டான வேறுபாட்டால் யசோதரையின் அழகு குறைபடவில்லை. அவள் முகத்தோற்றம் முன்னையைவிட இப்பொழுது மிக்க ஒளியும் தெளிவும் பெற்றிருந்தது. அப்பொழுதிருந்த இளந்தோற்றம் மட்டுமே இப்பொழுது இல்லை. அதைப்பற்றித்தான் சிந்தித்துக்கொண்டிருந்தார்போலும் கௌதமர்.

அச்சமயம், அவர் மனைவி யசோதரை, பூங்கொம்புபோல் நடந்துவந்து அவரெதிரே நின்று நிலவொளி வீசப் புன்னகை புரிந்தாள். அந் நிலையில் அவளைக் காணவும், கௌதமர் சிந்தனை கலைந்தது. அவர், தமமை மறந்து படத்திற் பதித்திருந்த பார்வையை நீக்கி, யசோதரையை அன்புகனிய நோக்கி, முகமலர்ந்து, "கண்மணி, என்ன கருதிப் புன்னகை செய்கிறாய்?" என்றார்.

உடனே யசோதரை இன்பநகை செய்து அன்புரிமை பாராட்டி, அன்னபபெடை குதித்தோடி வெண்டாமரை மலரிற் படிந்தாற்போல, அவர் மடித்தலத்தே சென்றமர்ந்து தன் இடக்கரத்தால் அவர் கழுத்தை வளைத்து அணைத்துக் கொண்டு "ஆருயிர்க் காதலரே, நான் இங்கே வந்தபோது என்னைப் பாராமல் என் உருவப்படத்தையே உற்றுப் பார்த்திருந்தீர்களே, ஏன்?" என்றாள்.

"காதலீ, உன் உருவப்படத்தைத்தானே பார்த்திருந்தேன். அதில் என்ன குற்றம்?" என்றார் கௌதமர்.

"குற்றமொன்றுமில்லை நாதா. வேறொரு மங்கையின் படத்தைத் தாங்கள் பார்த்தாலும நான் அதைக் குற்றமாகக் கொள்வேனோ? கொள்ளேன். ஐந்தாறு வருஷங்களுக்குமுன் எழுதிய என் உருவப்படத்தைப் பார்த்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தீர்களே, அச் சிந்தனை யாதோ, அறியலாமென்று கேட்டேன்" என்றாள் யசோதரை.

கௌதமர் புன்னகை செய்தவண்ணமே, எதிரேயிருந்த படத்தைக் கண்ணோட்டிப் பார்த்துவிட்டு யசோதரையை நோக்கி, "காதலீ, என் சிந்தனை யாதாயிருக்கும்? நீயே சொல், பார்க்கலாம்" என்றார்.

"படம் எழுதிய காலத்திருந்த என் இளமை இப்பொழுது மாறி அழகு குறைந்துவிட்டதன்றோ. அதைப்பற்றித்தான் சிந்தித்துக்கொண்டிருந்தீர்கள் என்று நினைக்கிறேன்" என்றாள் யசோதரை.

"ஆனால், முகத்தோற்றத்தால் மனக்குறிப் பறிவதில் நீ தேர்ந்தவளல்லை" என்றார் கௌதமர்.

“அந்தத் தேர்ச்சி எனக்கு வேண்டுவதில்லை. தங்கள் காதல் என்னைவிட்டு அகலாதிருக்கச் செய்வதில் தேர்ச்சி யிருந்தாற்போதும் அந்தத் தேர்ச்சி எனக்குண்டா?” என்று கூறி நகைத்தாள் யசோதரை.

“அதென்னவோ நான் அறியேன். என்னளவில், உன்னை என்னின் வேருகப் பிரித்தெண்ண முடியவில்லை” என்ருர் கௌதமர்.

யசோதரை இதைக் கேட்டதும் அன்புமீதூரப் பரவச முற்றுச் சற்றே உளநாணி முகங்கவிழ்ந்தாள். மறுகணமே, அந் நாணத்தை உள்ளடக்கி, ஆனந்தத்தால் முகம் விகசிக்கக் கரும்புருவமமேலேறக் கௌதமரை நோக்கி, “காதலா, என்னைவிடப் பாக்கியசாலி யார்! நாதா, என் உயிரும் உறவும் திருவும் தெய்வமும் தாங்களே யன்ருே? நான் வேறு தாங்கள் வேறு என்ற உணர்ச்சி எனக்கில்லாதது போலவே தங்களுக்கும இல்லையாயின், நம்மைவிடப் புண்ணியசாலிகள் யார்! நாம நடத்தும் இல்லறத்தைவிடச் சிறந்த அறம் எது!

‘அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது’

என்னும் ஆன்ருேர் உரைக்கு நாமேயன்ருே இலச்கியமா யிருக்கிருேம்!” என்ருள்.

“ஆம, கண்மணி, உன் மகிழ்ச்சி குறைபடா திருக்க வேண்டும் என்பதுதான் எனது கோரிக்கை” என்ருர் கௌதமர்.

யசோதரை சிறுநகை செய்து “‘நம் மகிழ்ச்சி’ என்று சொல்லுங்கள், நாதா” என்ருள்.

“சரி, அப்படியே வைத்துக்கொள்” என்ருர் கௌதமர்.

“நல்லது, தங்கள் சிந்தனையை நான் சரியாய் அறிந்து கொள்ளவில்லை என்றீர்களே. அதைச் சரியாய் எனக்கு அறிவியுங்கள்.”

“யசோதரா, நாளேற நாளேற உன் அழகு மிகுந்துவரு வதை நான் கவனித்து வந்தேன் இந்தப் படத்தைப் பார்த்த பொழுது, உன் அழகு இப்பொழுது எவ்வளவு அதிகமாக

வளர்ந்திருக்கிறது என்பது தெளிவாய்த் தெரிகிறது. இப்பொழுதுள்ள உன் அழகு சித்திரத்தில் எழுதக் கூடியதா என்றுதான் சிந்தித்துக்கொண்டிருந்தேன்" என்றார் கௌதமர்.

யசோதரை தலைகுனிந்து புன்னகை செய்தாள். பிறகு தலை நிமிர்ந்து, அன்பொளி வீசும் தன் நாயகன் திருமுகத்தை இன்புற நோக்கி, "பிராணேசா, அன்பின் மிகுதியால் நான் அவ்வாறு தங்களுக்குக் காணப்படுகிறேன். இளமை நீங்க நீங்க அழகு குறைவதன்றி மிகுவதுண்டோ?" என்றாள்.

"ஆனால், இளமையும் அழகும் நிலையல்ல என்பது உண்மைதான் போலும்?" என்றார் கௌதமர்.

யசோதரை—"அன்பு ஒன்றைத்தவிர மற்ற எல்லாம் நிலையில்லாதன என்று தாங்களே எனக்குக் கூறியிருக்கிறீர்களே!"

கௌதமர்—"ஆம், ஆம. கண்ணாற் காணக்கூடியவையெல்லாம் அழியும் என்பதுதான் தருக்க சாஸ்திரத் துணிபு. அன்பு கண்ணாற் காணமுடியாததன்றோ? ஆதலால்தான் அதற்கு அழிவில்லை என்றேன்."

யசோதரை—"நம் இருவரையும் பிணித்திருப்பது அந்த அன்புதானே?"

கௌதமர்—"தடையென்ன, கண்மணி!"

யசோதரை—"ஆதலால், நாம் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியப்போகிறதில்லை. இதைவிட வேறு பாக்கியம் என்ன வேண்டும்?"

கௌதமர் — "உடலால் நாம் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிய நேர்ந்தாலும், நம் அன்பு பிரியாது."

யசோதரை —"உடலால்தான் நாம் ஏன் பிரியவேண்டும்? ஒவ்வொரு நாளும் ஒரு சிறிதுபொழுது தாங்கள் உத்தியோகக் கடமைக்காக என்னைவிட்டுப் பிரிந்திருக்க நேருகிறதே, அதைச் சொல்கிறீர்களோ?"

கௌதமர்—"அது ஒரு பிரிவாகுமா?"

யசோதரை—"வேறென்ன? அதுவே எனக்கு நெடும் பிரிவாகத்தான் தோற்றுகிறது."

கௌதமர் — "அப்படி நினையாதே. நான் எவ்வளவு காலம் பிரிந்திருந்தால்தான் என்ன? உன் உருவம் என் நெஞ்சைவிட் டகலாதிருப்பதுபோல என் உருவம் உன் நெஞ்சைவிட் டகலாதிருக்குமன்றோ?"

யசோதரை—"உண்மைதான். இருந்தாலும், நீண்டகாலம் தாங்கள் என்னைவிட்டுப் பிரிந்திருக்கச் சகியேன்."

கௌதமர்—"காதலீ, அவசியமிருந்தாலொழிய நான் ஏன் உன்னைவிட்டுப் பிரியப்போகிறேன்."

யசோதரை—"அப்படிப்பட்ட அவசியம் ஒன்றும் இல்லையே?"

கௌதமர் — "இப்பொழுது இல்லை. பின்னால் ஒரு சமயம சிறிதுகாலம் நான் உன்னைப் பிரிந்திருக்க நேரும்."

யசோதரை — "நாதா, என்னைப் பரிக்ஷிக்கச் சொல்வதோ இது?

கௌதமர்—"இல்லை, யசோதரை. உண்மையாகத்தான் சொல்கிறேன். தத்துவசாஸ்திர உண்மைகளில் சில எனக்குத் தெளிவாக விளங்கவில்லை. வெளிநாடுகளுக்குச் சென்று பல அறிஞர்களையும் ஞானிகளையும் கண்டு பேசி உண்மை தெளிந்துவர உத்தேசித்திருக்கிறேன்."

யசோதரையின் முகம் நகையிழந்து வாடியது. அது கண்ட கௌதமர், அவள் கூந்தலைக் கோதி, "என் அன்பே, ஏன் முகம் வாடினை? பிரிய நேரும் என்றாலே இவ்வாறு கலங்கும் நீ, நான் பிரிந்தால் எவ்வாறு ஆற்றியிருப்பாயோ, தெரியவில்லையே!" என்றார்.

யசோதரை—(கண்களில் நீர் கலங்க) "இருப்பதேது?"

கௌதமர் — "கண்மணீ, கலங்காதே. இருப்புச் சங்கிலியினும் பலமான விருப்புச் சங்கிலியால் நீ என்னைப் பிணித்திருக்கும்போது நான் எவ்வாறு உன்னைவிட்டுப் பிரிவேன்! பிரியேன், நீ வருந்தாதே."

யசோதரை—(முகமலர்ந்து) "நாதா, கருணை நிரம்பிய தங்கள் உள்ளம், என்னை வருத்த ஒப்பாது என்பதை நான் அறிவேன் ஆயினும், பிரிவு என்ற சொல் என்னைக் கலங்கச் செய்துவிட்டது. அன்பின் தன்மையோ அது! நெருப்பு நெருங்கிற் சுடும், அன்பு பிரியிற் சுடும்போலும்."

கௌதமர் — "நான் பிரிந்தாலும் என் அன்பு உன்னை விட்டுப் பிரியுமோ? ஒருகாலும் பிரியாது."

யசோதரை "வேண்டா நாதா, பிரிவைப்பற்றி இனி ஏதும பேசவேண்டா. எழுந்து உணவுகொள்ள வாருங்கள். நேரமாயிற்று" என்று கூறி எழுந்தாள்.

கௌதமரும் எழுந்தார் இருவரும் போஜனகூடம் நாடிச் சென்றனர்.

* * * *

அன்றிரவு ஒருமணி இருக்கும் படுக்கையிற் படுத்து நித்திரை செய்துகொண்டிருந்த யசோதரை, திடீரென்று கண் விழித்து மருண்டு கலங்கிப படுக்கைவிட் டெழுந்தாள். அவள்முகம அச்சத்தால் வெளுத்திருந்தது. அவளுக்கருகே கௌதமர் அமைந்த நித்திரையில் ஆழ்ந்திருந்தார். மங்கலாய் எரிந்துகொண்டிருந்த விளக்கு வெளிச்சத்தில், யசோதரை அவர் முகத்தை உற்றுப்பார்த்தாள். ஆ, முகத்துக்கு அழகுசெய்யும கண்கள் மூடுண்டு உறக்கத்தில் அழுந்தியிருந்த அச் சமயத்திலும் அவர் முகத்தோற்றம் எவ்வளவு சுந்தரமாயிருந்தது! சாந்தத்தை உருக்கி, வார்த்து வடிவாக்கியதுபோல் விளங்கியது அவர் வடிவம். இன்பப் புன்னகை அவரைவிட்டுப் பிரிய மனமில்லாததுபோல, அவரது குவிந்த செவ்விதழ்களில் மெல்லெனத் தவழ்ந்துகொண் டிருந்தது

அவர் முகத்தைப் பார்க்கப் பார்க்க யசோதரையின் அச்சமும் கலக்கமும் சிறிது சிறிதாகக் குறைந்தன. அவள், தன் ஆருயிர் நாயகனது முகப்பொலிவில் ஈடுபட்டுத் தன்னையும் மறந்து, ஒரு சிறிது சிதைந்திருந்த அவர் கூந்தலைக் கோதி அவரது பரந்த நெற்றியை மெல்லெனத் தடவினாள். அவளது கைப்பரிசத்தால், கௌதமர் நித்திரை கலைந்து கண்விழித்தார்; யசோதரை படுக்கைவிட்டெழுந்து தம்மை நோக்கி அமர்ந்திருப்பதைக் கண்டார்; தாமும் படுக்கை விட்டெழுந்தார்.

தன்னால் தன் கணவன் உறக்கம் சிதைவுற் றெழுந்தது பற்றி ஒரு சிறிது வருத்தமும், தன் மனக்கலக்கத்தை அவரிடம் உரைத்துத் தேறச் சமயம் வாய்த்தது பற்றி ஒரு சிறிது

மகிழ்ச்சியும் கொண்ட யசோதரை, அவரை நோக்கி, "நாதா, நான் தங்கள் நித்திரையைக் கலைத்துவிட்டேனே" என்றாள்.

கௌதமர் இளநகை செய்து, "குற்றமில்லை. நம் அறிவை அந்தகாரத்தில் அழுத்தும் நித்திரையைத் தூண்டுவது தவறே யொழியக் குலைப்பது தவறாகாது" என்று கூறிவிட்டு "அதிருக் கட்டும், நீ ஏன் இந்நேரத்தில் கண்விழித் தெழுந்தாய்? யசோதரை, உன் முகம் கலங்கி வெளுத்திருக்கிறதே, ஏன்? இப்பொழுதுதான் எழுந்தாயா, நெடுநேரமாய் விழித்திருக்கிறாயா?" என்று ஆவலோடு வினவினார்.

"பிராணேசா, இப்பொழுதுதான் ஏதேதோ தீக்கனவுகள் கண்டு எழுந்தேன்," என்றாள் யசோதரை.

கௌதமர் கவற்சியுற்று, "தீக்கனவுகளா! என்ன கனவுகள்?" என்று வினவினார்.

"நாதா, அவைகளை நினைத்தாலும் எனக்கு உள்ளம் கலங்குகிறது. நாடெல்லாம் கடுங்காற்றால் நாசமுறக் கண்டேன். என் ஆடை குலையவும் அணிகலன்கள் சிதையவும் கண்டேன். சூரியனும் சந்திரனும் நிலைகுலைந்து விழக்கண்டேன். தாரகைகள் நிலத்தில் உதிரவும், மேருகிரி நெடுங் கடலில் அமிழவும் கண்டேன். இவையெல்லாம் என்ன தீங்குக்கு முற்குறியாய்த் தோன்றினவோ! அறியேன்" என்றாள் யசோதரை. அவள் உடல் நடுங்கியது.

கௌதமர் அவளை அன்போடு தழுவி, "கண்மணீ, நீ அஞ்சாதே, நல்லவர்களுக்கும் உயர்ந்தவர்களுக்குந்தான் அத்தகைய கனவுகள் தோன்றும்; தாழ்ந்தோருக்குத் தோன்றா. நீ மகிழ்ந்திரு. உன் கனவுகளின் உள்ளுறை பொருள் என்ன தெரியுமா? நிலையற்ற உலகபந்தம் அறுந்து அஞ்ஞானத் திரை கிழிவுறும் என்பதுதான். நானே அதற்கு வழிசெய்வேன். நீ அஞ்சாமற் படுத்துறங்கு" என்றார்.

அவர் கூறியதின் பொருள் யசோதரைக்குச் சரியாக விளங்கவில்லை ஆயினும், அவள் ஒருவாறு சமாதானமுற்றாள்.



## அதிகாரம்—13

## மெய்யுணர்ந்து மனந்திரிதல்

அச் சமயம் கௌதமர் கூறிய சமாதான மொழிகளால் யசோதரை ஒருவாறு மனம் அமைந்திருந்துவிட்டா ளாயி னும், அவள் கண்ட தீக்கனவுகள் ஆழமாய் நெஞ்சிற் பதிந் திருந்தமையால் அவைகளை மறந்திருக்க அவளால் முடிய வில்லை. கண்ட கனவுகள் பின் வரும் தீங்கு எதற்கோ முற் குறியே யொழிய வேறல்ல என்ற உணர்ச்சி அவள் உள்ளத் தில் தோன்றிவிட்டது. அதை ஒழிக்க அவள் தன்னு லான மட்டும் முயன்றாள். எவ்வளவுக் கெவ்வளவு அவள் அவ் வுணர்ச்சியை ஒழிக்க முயன்றாளோ, அவ்வளவுக் கவ்வளவு அது அவள் மனத்தில் ஆழ்ந்து வேரூன்றி முற்றி வளர்ந்தது. எந்தத் தீங்கு என்று வருமோ என்ற ஏக்கமே அவளுக்குப் பெரிதாயிற்று.

'மருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பதற்கேற்ப, ஏங்கியிருக்கும் அவள் மனத்துக்குக் கௌ தமர் குணமும் செயலும் வேறுபட்டு மாறுவதாகத் தோன் றின. கௌதமர் முன்னையினும் சிறிது அதிகமாகச் சாஸ் திர ஆராய்ச்சிகளிற் காலங் கழித்தார்; அடிக்கடி தம்மை மறந்த சிந்தனைகளில் ஆழ்வாராயினார்; யசோதரையோடு விநோத வார்த்தைகளாடிக் கழிக்கும் காலத்தைக் குறுக்கி னார். இவற்றையெல்லாம் கண்ட யசோதரை, தன் கண வன் தன்னிடம் வைத்த அன்பு வரவரக் குறைவதாக எண்ணி மனங்கவன்றாள். ஆனால் கௌதமர் தம் மனைவியிடத்தில் அணுத்துணையும் அன்பு குறைந்திலர்.

கௌதமர் நிலை யசோதரைக்குத்தான் நாளேற நாளேறக் கவற்சிக்கு இடந்தந்ததென்றால், சுத்தோதனனுக்கு இன்னும் அதிகக் கவலையை உண்டுபண்ணிற்று. கௌதமர் மனத்தை இல்வாழ்க்கையிற் பற்றச் செய்துவிட்டதாக எண்ணி அவன் அடைந்த சந்தோஷம் ஐந்தாறு வருஷங்களுக்குமேல் நிலைத் திலை. இவ் வுலகவாழ்க்கையில் இன்பமும் அழகுமன்றி வேறெதுவும் கௌதமருக்குத் தோன்றாதவண்ணம் செய்திருந் தும், அவர் அடிக்கடி சிந்தனை தேக்கிய முகத்தராய் இருப்

பது கண்டு சுத்தோதனன் மனங்கலங்கினன். கௌதம ருக்கு விவாகமாகி ஏழெட்டு வருஷங்களாயின. ஏழெட்டு வருஷகாலம், குற்றம் குறையற்ற மனையற இன்பத்தில் ஊறிய நெஞ்சம் துறவறத்தை நாடுமோ? நாடாது, என்று சுத்தோத னன் தன் மனத்தைத் தானே சமாதானம் செய்துகொள்ளப் பார்த்தான். ஆனால் அவன் மனம் அவ்வளவு எளிதில் சமா தானப் படுவதாயில்லை.

> ' முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
> பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
> மதியின ராயினும் வலிய ராயினும்
> விதியினை யாவரே வெல்லு நீர்மையார்?'

என்பது பொய்யாமோ? ஆகாது. ஆதலால், "நாம் எவ்வளவு கண்விழிப்பா யிருக்கக் கூடுமோ அவ்வளவு கண்விழிப்பா யிருக்கவேண்டும். முயற்சியைத் தளரவிடக்கூடாது" என்று கருதி அவன், கௌதமரோ டொத்த தோழர்களான, உதாயி, மந்திரிகுமாரர்கள் முதலியோரை அடிக்கடி கௌதமரிடம் சென்று இன்ப உரையாடி அவர் உள்ளத்தை உலகமார்க்கத் திலேயே செல்லும்படி போதிக்கக் கட்டளையிட்டான். அவர் களும் அரசன் கட்டளைப்படியே கௌதமர்பாற் சென்று அவர் மனத்தை வேறுபடுத்தத் துணிந்தார்கள். ஆனால், கௌதமரை நெருங்கியதுமே அவர்கள் தம் துணிவொழிந்து கருதிவந்ததை நெகிழவிட்டார்கள். கௌதமரது முகதேஜ சும் கம்பீரத் தோற்றமும் கருணை கனிந்த கண்ணோக்கமும் அவர்கள் உள்ளக் கருத்தைக் கட்டழியச் செய்தன. இதை யறிந்த சுத்தோதனன் செய்வ தின்னதென் றறியாது திகைத் திருந்தான்.

இவ்வாறு நிகழு நாட்களில் ஒருநாள், கௌதமர் தேரே றித் தோட்டம் பார்க்கச் சென்றார். அப்பொழுது வழியின் இருமருங்கினும், கிளையோடி வளர்ந்திருந்த நெடுமரங்களும், பச்சென்று தழைத்திருந்த பயிர்வகைகளும் அவர் கண்ணைக் கவர்ந்தன. அவைகளைப் பார்த்துக்கொண்டே செல்கையில், பட்டு விழுந்த பருமரம் ஒன்றை விறகுவெட்டி ஒருவன் கோ டரியால் வெட்டிப் பிளந்துகொண் டிருப்பதை அவர் கண் டார். விறகு வெட்டியின் உடம்பு வியர்வை நிறைந்திருந் தது. நெடுநேரம் அவன் அத் தொழிலில் முனைந்திருந்ததால்,

முரட்டு முயற்சியிற் பழகி வன்மையுற்றிருந்த அவனது திண்ணிய உடலும் களைப்பு மேலிட்டுச் சோர்ந்தது. கோடரிக் காம்பைப் பற்றியிருந்த அவன் கைப்பிடி தளர்வுற்றது. அவன் கோடரியைக் கீழே போட்டுவிட்டு, மிக்க ஆயாசத்தோடு ஒரு மரத்தின்மீது சாய்ந்து கொட்டாவி விட்டான் அவன் தன் கஷ்டத்தை எண்ணிப் பிரலாபிக்கவுமில்லை; தன் விதியை நொந்து மனமாழ்கவுமில்லை குறை மரத்தையும் வெட்டிக் குவிக்க இன்னும் எத்தனை நாழிகை செல்லுமே என்று கணக்கிடுவான்போல. பட்டுக்கிடந்த மரத்தையே பார்த்துக்கொண்டிருந்தான் ஆனால், தன் கண்ணுக்கு மறையும் வரையில் அவனையே பார்த்துக்கொண்டிருந்த கௌதமருக்கு அவன் மெய் சோர்ந்து கை சோர்ந்து மரத்தின்மீது சாய்ந்து நின்ற நிலை,

> ‘ பூணும் பணிக்கல்ல ; பொன்னுக்குத் தானல்ல ; பூமிதனைக்
> காணும் படிக்கல்ல ; மங்கையர்க் கல்ல;நற் காட்சிக்கல்ல ;
> சேணும் கடந்த சிவனடிக் கல்ல;என் சிந்தைகெட்டுச்
> சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே ! ’

என்று அவன் முறையிடுவதுபோல் தோற்றியது. அத் தோற்றம் கௌதமர் மனத்தை வருத்தியது. சற்றுமுன் மரத்தைப் பிளந்த விறகுவெட்டியின் கோடரி இப்பொழுது தம் நெஞ்சைப் பிளப்பதுபோல் காணப்பட்டது

சிறிது தூரம் செல்லவும் அக் காட்சி கௌதமர் கண்ணை விட்டு மறைந்தது. ஆயினும் அதனால் உண்டான வருத்தம் அவர் மனத்தைவிட்டு அகலவில்லை அவர் அதை எண்ணி எண்ணி மனங்கசிந்து செல்கையில், நீர்வளம் நிறைந்த நன்செய்களிலும் புன் செய்களிலும் உழவரும் உழத்தியரும் எருதுகள் பூட்டிய ஏர்களைக் கடாவி நிலத்தை உழுதுகொண்டிருந்தனர். அதைக் காணவும், வாள் வெட்டுவிழத் தேள் கொட்டு மறைந்தாற்போல, விறகு வெட்டியின் துன்பநிலை அவர் மனத்தைவிட்டு மறைந்தது. உழவர் படும் வருத்தமும் அவரால் எருதுகள் படும் வருத்தமும் அவர் மனத்தைக் கவர்ந்தன. அவர் கண்களில் நீர் ததும்பியது. அவர் தம் தேர்ப்பாகனை நோக்கி, “ சாரதி, உடுக்கச் சரியான உடையில்லாத இந்த ஏழைமக்களும், தம் வருத்தத்தை வாய்விட்டுச்சொல்ல

ஏலாத இந்தத் தீங்கற்ற பிராணிகளும் இவ்வாறு வருந்தி உழைப்பதேன்?" என்று கேட்டார்.

"தம் வயிறு வளர்க்கத்தான், அரசே" என்றான் சாரதி

"வயிறு வளர்ப்பதேன்?" என்று வினவினார் கௌதமர்.

"உழைப்பதாற் களைப்பு உண்டாகு மன்றோ? அந்தக் களைப்பு நீங்கி மீண்டும் உழைப்பதற்காக" என்று விடையளித்தான் சாரதி.

அதோடு கௌதமர் மௌனமுற்றுத் தமக்குள் தாமே சிந்திக்கலானார்: 'என்னே இவ்வுலக வாழ்க்கை. உணவு தேட உழைப்பதும், உழைத்துக் களைப்பதும், களை நீங்க உண்பதும், உணவுதேட உழைப்பதும்—இப்படித் துன்பம் உறுவதும் துன்பந் தீருவதும் மீண்டும் துன்பமுறுவதுமாய்த் துன்பத்திலேயே சுழன்றுகொண் டிருக்கும் வாழ்க்கையாற் பயன் என்ன? அந்தோ! கரையற்ற கலிஞானக் கடலில் இவ்வுலக வாழ்க்கையின் துன்பத்தை ஒழிக்க ஒருதுளி மருந்தில்லையா! யோகிகளும் சித்தர்களும் எண்ணிறந்தார் உளரே. அவர்களுள் ஒருவரேனும் உயிர்களைத் துன்பக்கடலினின்றும் கரையேற்ற வல்லரல்லரா! ........' என்று இவ்வாறெல்லாம் சிந்திக்கச் சிந்திக்க அவர் மனம் ஆடிக்காற்றில் அகப்பட்ட இலவம் பஞ்சுபோற் சுழன்றது. தம் மனக்கொதிப்பைத் தாங்குவதற்கு அவரால் முடியவில்லை. அவர் தேர்ப்பாகனை நோக்கித் தேரை ஒரு மரநிழலில் நிறுத்தும்படி கட்டளையிட்டார். பாகன் அவ்வாறே செய்தான்.

கௌதமர் தேரை விட்டிறங்கிச் சிறிது தூரம் சென்று ஒரு நாவல் மரத்தடியில் அயர்ந்தமர்ந்து கண்ணை மூடிக்கொண்டு, பலபாற்பட்டு அலைந்துகொண்டிருந்த தம மனத்தை ஒரு பாற்பட நிறுத்திச் சிந்திக்கத் தொடங்கினார்:

'.........உலகத்துயிர்கள் இன்பத்தையே நாடுகின்றன ஆனால் துன்பத்திலேயே உழலுகின்றன. ஏன்? பிறக்கும் பொழுதும் துன்பம், பிறந்த பின்னும் பிணி மூப்பாதிகளால் துன்பம், இறக்கும்பொழுதும் துன்பம்! இந்தத் துன்பசாகரத்தைக் கடக்க வகையில்லையா? பிணி, மூப்பு, இறப்புகளை மாற்ற மருந்தில்லையா? அந்தோ! பிறந்த உயிர்கள் எல்லாம்

பிணியுறும், மூப்புறும். முடிவில் இறக்கும் என்னும் இவ்வுண்மைகளைக்கூடச் சிந்தியாமல் நான் எவ்வளவு காலம் வீணே கழித்துவிட்டேன்!

'அன்று என் தந்தையார் அனுப்பிய திருமுகப்படி நான் அவரைக் காணக் கீழைவாயில் வழியே சிவிகை ஊர்ந்து சென்றேன். அப்பொழுது பிணிவாய்ப்பட்டு வருந்திய ஒருவன் என் எதிரே வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்டதால்தானே, மக்கள் எல்லாரும் அவனைப்போலவே பிணிவாய்ப்படுதற்குரியர் என்றறிந்தேன். அதுகாறும் அவ்வுண்மையை உணராதிருந்த என் அறியாமையை என்னென்பது!

'பின்னொருநாள் அவ்வாறே செல்ல நேர்ந்தபோது, குடுமி நரைத்து, மேனி திரைந்து, கூனித் தளர்ந்து கோலூன்றித் தள்ளாடி நடந்துவரும் முதியோன் ஒருவன் என் எதிர்ப்பட்டனனே! என் கண்ணைத் திறந்த கடவுள் அவனே யன்றோ! கண்டதே காட்சி கொண்டதே கோலமாகக் கருதித் தருக்கித் திரியும்காளைப்பருவம் நிலையானதன்றெனக் காட்டியவன் அல்லனோ அவன்! எல்லா உயிர்களும் அவனைப்போலவே மூப்படைய வேண்டுவதுதான் என்பதை அவனால் உணர்ந்தேன்!

'அப்பால் ஒருநாள் குதிரையேறி மேலைவாயில் வழியே சென்றேன். அப்பொழுது நான் கண்ட அருவருப்பான காட்சியை நினைத்தால் இப்பொழுதும் மனம் கூசுகிறது. உயிர்ப்பற்றுச் செயலற்று, காக்கைகள் கொத்த, ஈக்கள் மொய்க்க, அழுகிக் கிடந்ததே ஒருவன் உடலம். உடன்வந்த பாகன் சந்தகனாலன்றோ அது பிணமெனவும், எல்லாரும் அப்படி இறந்து பிணமாதற் குரியாரென்றும் அறிந்தேன்! ஆ, அந்தப் பிணத்தின் நாற்றம் எவ்வளவுதூரம் வீசியது! போற்றி வளர்க்கும் நம் உடலின் முடிவு அதுதானோ! ஏன் பிறக்க வேண்டும்! பிறந்தவர்கள் ஏன் இறக்கவேண்டும்!

'ஆ, கொடிது! கொடிது! உலகவாழ்க்கை மிகக் கொடிது! பிறப்பதும், பிணிமூப்புற் றிறப்பதுமே வாழ்க்கையென்றால் அறிவுடையோர் இதை விரும்புவரோ! பிணி, மூப்பு, இறப்பு என்னும் இத் துன்பங்கள் அனைத்திற்கும் மூலமாயிருக்கும் துன்பம் பிறப்பன்றோ! அதை ஒழித்தால் இவை ஒழியும். அதற்கு ஏதாவது உபாயம் கிட்டுமோ!.........'

இவ்வாறெல்லாம் பிறவித் துன்பத்தைப்பற்றியே நெடுநேரம் சிந்தித்த வண்ணமாய்த் தம்மை மறந்திருந்தார் கௌதமர்.

அங்ஙனமிருக்கையில், யாரோ ஒருவர் 'சித்தார்த்த' என்று தம்மை அழைத்த குரல் கௌதமர் செவிக்கு எட்டியது. அவர் கண் விழித்துப் பார்த்தார்; தம் எதிரே துவராடை அணிந்த துறவியார் ஒருவர் அக்ஷயபாத்திரம் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு நிற்கக் கண்டார். அறிவும், தெளிவும், அமைதியும், சாந்தமும் நிறைந்து சிறந்து விளங்கிய அவரது முகத்தோற்றம் கௌதமர் மனத்தைக் கவர்ந்தது. அவர் அவரை நோக்கி, "சுவாமீ, தாங்கள் யார்?" என்று வினவினார். துறவியார் புன்னகை புரிந்து "சித்தார்த்தா, நான் ஒரு பிராமணன். உடலை வருத்தித் தவஞ் செய்பவன் உலகவாழ்க்கையில் உள்ள துன்ப துயரங்களை எண்ணி எண்ணி என் மனம் வருந்துகின்றது. இந்தத் துன்ப துயரங்களினின்று நீங்கி, அழிவற்றதும், ஆதியந்தமில்லாததும், பற்றுப்பகை யற்றதும், ஏகாந்தமானதும், ஆனந்தமயமாக உள்ளதுமான ஒரு நிலையை அடைய என் உள்ளம் விரும்புகின்றது ஆதலால் ஆரவாரமற்ற 'ஊர்ப்புறத்தே தங்கி ஐம் புலன்களையும் அடக்கிச் சமாதியில் இருந்துகொண்டு, உயிரைப் பாதுகாத்தற்குவேண்டிய அளவே உணவை இரந்துண்டு வாழும் பிக்ஷுக்களின் நிலைமையை விழைந்தேன்' சித்தார்த்த, பிக்ஷுக்களின் பெருமை அளவிடற்கரியது அவர்களே புண்ணியசாலிகள்; அவர்களே உண்மையைக் கண்டவர்கள்; அவர்களே நித்தியானந்தர்கள்; உலகை உய்விப்பவர்களும் அவர்களே அவர்கள் பெருமையை உனக்கு அறிவிப்பதற்காகவே நான் இங்கு வந்தேன் செல்கின்றேன்" என்று கூறிக் கௌதமரிடமிருந்து யாதொரு விடையையும் எதிர்பாராமற் சென்றுவிட்டார்.*

---

* இத் துறவி வடிவாக வந்தவர் சுத்தாவாஸதேவர்களுள் ஒருவர் என்றும் முன்னம் பிணியாளன் முதலிய மூன்று வடிவங்களாகத் தோன்றியவரும் இவரே என்றும், கௌதமருக்கு நிலையாமையை அறிவுறுத்தற் பொருட்டு இங்ஙனமெல்லாம் தோன்றினர் என்றும், இந்நான்கு தோற்றங்களையும் கௌதமர் ஒரேநாளிற் கண்டார் என்றும் கூறுவதுண்டு.

கௌதமர், துறவியார் தம் கண்ணுக்கு மறையும் வரையில் அவரையே பார்த்துக்கொண் டிருந்தார். பிறகு, அவர் கூறிய சொற்களைப் பற்றியே நெடுநேரம் சிந்தித்தார். சிந்திக்கச் சிந்திக்க, அவர் உள்ளக் கலக்கம் தெளிவதாகத் தோற்றியது. 'துன்பத்தை ஒழிக்கும் உபாயம் தெரிந்துகொண்டேன் பிறவிதான் துன்பத்துக்கு மூலகாரணம். பிறவியை நீக்க, உலக உறவினை ஒழித்துத் துறவு மேற்கொள்ளவேண்டும்.

'உறவு தந்தைதாய் ஒண்டொடி மாதரார்
சிறுவர் வண்புவி செல்வம் பெரும்புகழ்
பிறவி னும்படும் ஆசை பிரித்தமெய்த்
துறவி னல்லது துன்பம் அகலுமோ?'

அகலாது. ஆதலால், துறவு பூண்டு நானும் உய்ந்து உலகையும் உய்விக்க வழிதேடுவேன்' என்று கௌதமர் தம்முள் எண்ணி எழுந்து சென்று ரதத்திலேறி ரதத்தைத் தம் தந்தையின் அரண்மனைக்குச் செலுத்தும்படி சாரதிக்குக் கட்டளையிட்டார்.

சாரதி அவ்வாறே ரதத்தைச் சுத்தோதனன் அரண்மனை வாயிலிற் கொண்டுபோய் நிறுத்தினன். கௌதமர் ரதத்தை விட்டிறங்கிச் சென்று தம் தந்தையைக் கண்டார் சுத்தோதனன் தன் ஆருயிர்க் குமாரனைக் கண்டதும் அகமகிழ்ந்து முகமலர்ந்து, "சித்தார்த்தா, வா. என்ன விசேஷம்?" என்றான்.

கௌதமர் புன்னகை புரிந்து தன் தந்தையருகமர்ந்து, "விசேஷம் ஒன்றும் இல்லை. ஒரு நற்காரியத்தில் தலையிடத் துணிந்தேன். அதற்குத் தங்கள் அனுமதியும் ஆசீர்வாதமும் பெறுதற்கு வந்தேன்" என்றான்.

சுத்தோதனன் — "என்ன காரியத்தில் தலையிடத் துணிந்தாய்?"

கௌதமர் — "எனக்கும் பிறர்க்கும் பயன்படக் கூடிய ஒரு நற்காரியந்தான். அதைத் தாங்கள் தடுக்காது விரும்பி விடைகொடுக்க வேண்டும்."

சுத்தோதனன் — "அது இன்னதென இன்னமும் எனக்குத் தெரிவிக்கவில்லையே."

கௌதமர்—" தந்தையே, நிலையற்ற இவ்வுலக இன்பங்களை ஒழித்து, நிலையான பேரின்பத்தைத் தரக்கூடிய துறவொழுக்கத்தை மேற்கொள்ளத் துணிந்திருக்கிறேன்."

இச்சொற்களைக் கேட்டதும் சுத்தோதனன் நாராசம் செவி புகுந்தாற்போல வருந்திச் சோர்ந்து, தெறித்து விழுவதுபோல் தோன்றிய தன் சிரத்தை இருகைகளாலும் தாங்கிக்கொண்டு சிறிதுநேரம் சிந்தை கலங்கியிருந்தான். பிறகு ஒருவாறு தன் மனத்தைத் திடஞ்செய்துகொண்டு கௌதமர் முகத்தை ஏறெடுத்துப் பார்த்தான். அவன் கண்கள் கலங்கிச் சிவந்திருந்தன. அவன் மனக்கலக்கத்தையும் முகவாட்டத்தையும் கண்ட கௌதமர், " என் அருமைத் தந்தையே, நான் கேட்டதைப் பற்றிக் கோபமோ ?" என்றார்.

சுத்தோதனன்—" குழந்தாய், உன்மீது எனக்குக் கோபம் வருமோ ? வாலிபப்பருவம் சிந்தனையற்ற தன்றோ ? அதனால் நீ எதையும் யோசியாமற் சொல்லக்கூடும். அதுபற்றி நான் கோபியேன் "

கௌதமர்—" தந்தாய், சிந்தனையற்று நான் சொன்னது ஏதேனும் உண்டானால் மன்னித்து என் விருப்பத்தைப் பூர்த்தி செய்யுங்கள்."

சுத்தோதனன் — " சித்தார்த்தா, நீ கொண்ட விருப்பந்தான் சிந்தனையற்றது. உன் க்ஷேமத்தையே பெரிதாகக் கொண்டிருக்கும் நான் சிந்தனையற்ற உன் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதெப்படி ?"

கௌதமர் —" எவ்வகையில் என் விருப்பம் சிந்தனையற்றதென்கிறீர்கள் ?"

சுத்தோதனன்—" செல்வா, ஒவ்வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு காலமுண்டு. பெரியோர்கள், கல்வி பயிலும் பருவம் இது, மனைவியோடிருந்து இல்லறம் நடத்தும் பருவம் இது, மனைவி மக்களோடிருந்து துறவறம் நடத்தும் பருவம் இது, மனைவிமக்கள் முதலிய அனைவரையும் துறந்து துறவறம் நடத்தும் பருவம் இது என்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். அம் முறையைக் கருதாமல், இல்லறத்திற் புகுந்து சில வருஷங்களேயான இவ் விளம்பருவத்தில், முதுமைப் பருவத்துக்குரிய துறவை மேற்கொள்ள விரும்பலாமோ ?"

கௌதமர் — "தந்தையே, மன்னிக்கவேண்டும். வீடு பற்றி எரியும்போது அதைக் கண்ட தக்ஷணமே அவிக்காமல், காலம் பார்த்திருப்பது தகுதியோ? பிணி, மூப்பு, சாக்காடு இவைகளால் உயிர்கள் அடையும் துன்பத்தைக் கண்டு என் உள்ளம் தீப்பற்றிய பஞ்சுப்பொதிபோல் எரிகிறது. துன்ப நிவர்த்திக்குரிய மார்க்கத்தைத்தேடி என் மனவெரிவை அடக்காமல் நான் காலந்தாழ்க்கலாமோ? இவ்வளவு முக்கியமான காரியத்தை நாளைக்காகட்டும் என்று தள்ளிவைப்பது அறிவுடைமையா?"

சுத்தோதனன்—"மைந்தா, துன்பத்தை நீக்க முயலும் நீ பிறர்க்குத் துன்பத்தை ஆக்குவது அழகோ?"

கௌதமர்—"யாருக்கு நான் துன்ப மூட்டுகிறேன்?"

சுத்தோதனன்—"நீ துறந்து எங்களைப் பிரிந்து சென்றால், வயோதிகரான உன் தந்தையும் தாயும், கருப்பிணியாயிருக்கும் உன் மனைவியும் பிறரும் துன்பமுறாரோ?"

கௌதமர் — "தந்தாய், நீங்கள் அடையும் துன்பம் சிறிது காலத்தில் ஆறிவிடும் பிணி, மூப்பு, இறப்புகளால் உயிர்கள் அடையும் துன்பம அப்படிப்பட்டதன்றே."

சுத்தோதனன் — "சித்தார்த்த, நீ எங்களை விட்டுப் பிரிந்தால் நாங்கள் அடையும் துன்பம் ஆறிவிடும் என்று எண்ணாதே: அதுவே எங்கள் உயிரைப் போக்கினும் போக்கும். நான் சொல்வதைக் கேள் நானும் உன் அன்னை கௌதமியும் உயிரோடிருக்கும் வரையில் நீ எங்களைப் பாதுகாத்து, உன் ஆட்சியை விரும்பி நிற்கும் குடிகளை ஆண்டு அரசு செலுத்திவா. பிறகு உன் இஷ்டம்போற் செய்யலாம். இப்பொழுது துறந்து செல்லும் கருத்தை விட்டொழி. துறவை நாடாமல் வேறெது வேண்டுமாயினும் கேள். நான் அதைத் தருகிறேன்."

கௌதமர் — "நான் வேண்டுவது ஒன்றல்ல, நான்கு. அவைகளைத் தரத் தங்களால் முடியுமா?"

சுத்தோதனன்—"அந்த நான்கு எவை? சொல்."

கௌதமர்—"முதலாவது, நான் என்றும் இளமை மாறாதிருக்கவேண்டும்; இரண்டாவது, நோய் என்னை அணுகக்

கூடாது ; மூன்றாவது, என் ஆயுள் முடிவற்றதாய் இருக்க வேண்டும் ; நான்காவது, நான் தளர்வுக்கும் கேட்டுக்கும் ஆளாகக்கூடாது. இந்த நான்கையும் எனக்குத் தரக்கூடுமானால் தாருங்கள். இல்லையேல், நான் இறந்தபிறகு மீண்டும் பிறவிக்கு ஆளாகாதிருக்கும்படியேனும் செய்யுங்கள்.”

இவ்வாறு கௌதமர் கூறியதைக் கேட்டுச் சுத்தோதனன் கலங்கினான். அவன் கண்களில் நீர் சுரந்தது. மனிதர் எவராலும் கொடுக்கக்கூடாத அவற்றை அவன் எவ்வாறு கொடுப்பான். ஆயினும், வேறு வகையறியாது, கௌதமர் விரும்பியதைக் கொடுப்பதாகக் கூறி அவரை அனுப்பிவிட்டான்.* மறுநாளே, சுத்தோதனனும் கௌதமியும், சித்தார்த்தன் நிலையைப்பற்றி நெடுநேரம் சிந்தித்து, அவனைப் பாது காக்கும்படி முன்னையினும் இருமடங்காகக் காவலாளிகளையும், அவன் மனத்தைத் திருப்ப முன்னையினும் மும்மடங்காகப் பலவகை விநோத நெறிகளையும் அமைத்தார்கள்.



## அதிகாரம்—11.

## மஹாபி நிஷ்கிரமணம் †

‘துறந்து செல்வதாகக் கூறியதும் இவ்வளவு துயரமுற்ற தந்தை, துறந்து சென்றுவிட்டதாக அறிந்தால் எவ்வளவு துயரமுறுவார் ! அன்பாலராகிய அவர் இவ்வாறு வருந்தினால், என்னோடு நெருங்கிப் பழகிய யசோதரையும், அன்புடைய அன்னை கௌதமியும் என் பிரிவை எங்ஙனம் பொறுத்திருப்பார் ! அறிவிலும் அனுபவத்திலும முதிர்ந்த என் தந்தைக்கே நான் கொண்ட கருத்தின் உயர்வும் நலமும் புலப்படவில்லையென்றால், கௌதமிக்கும் யசோதரைக்கும் அவை புலப்படுமோ ? அந்தோ ! அறிவுவிளக்கம் இன்மையால் உண்டாகும் துன்பங்கள் எவ்வளவு கொடியவா யிருக்கின்றன ! நான் துறந்து சென்றபிறகு, என்னைக் காணமல என் தந்தை

* சென்ற அதிகாரத்திற் கூறிய யசோதரையின் கனவு, பிணியாளன் முதலிய நான்கு தோற்றங்களைக் கௌதமன் கண்டதற்குப் பின்னும் தந்தையிடம் அவன் தன் கருத்தறிவிப்பதற்கு முன்னும் நிகழ்ந்ததாகக் கூறுவர்.

† மஹாபிநிஷ்கிரமணம்—பெருந்துறவு.

யும் தாயும் மனைவியும் நண்பரும் உற்றாரும் உறவினரும் எவ்வாறு பரிதவிப்பரோ! துடித்துச் சோர்வாரோ, ஏங்கி உயிர் விடுவாரோ! யாதுசெய்வாரோ, அறியேனே! தந்தை சொன்னது ஒருவகையில் நியாயந்தான். துன்பத்தை நீக்க முயலும் யான், தொடக்கத்திலேயே பெற்றோர்க்கும் உற்றார்க்கும் துன்பமூட்டுதல் பொருந்துமா?' என்று இவ்வாறெல்லாம் எண்ணியெண்ணிக் கௌதமர் உள்ளங்கலங்கினர். அக்கலக்கம் அவர் தம் சிந்தையிற்கொண்ட உறுதியை உடனே நிறைவேற்றுவதற்கு ஓர் இடையூறாயிருந்தது. ஆயினும் அவ்விடையூற்றுக் கஞ்சி அவர் மனஉறுதி ஒரு சிறிதும் தளர்ந்ததில்லை.

ஒவ்வொன்றாக நாட்கள் சில சென்றன. அந் நாட்கள் ஒவ்வொன்றும் கௌதமருக்கு ஒவ்வோர் யுகமாய்த் தோன்றின. துறவின்மேற்கொண்ட இச்சை ஒருபாலும், பெற்றோரும் மனைவியும் வருந்துவரே என்ற கலக்கம் ஒருபாலுமாகப் பற்றி ஈர்க்க, அவர் சிந்தை இருபாற்பட்டு அல்லாடியது. ஆயினும் நாளேற நாளேறத் துறவிற்கொண்ட இச்சையே திடம்பெற்றுப் பெருகியது; பிறர்வருத்தம்பற்றி உண்டான கலக்கம் வலிகுன்றிக் குறைந்தது.

யசோதரைக்கு மகப்பேறு உண்டாகும் காலம் நெருங்கியது. அதைக் காரணமாகக்காட்டி, சுத்தோதனனும் கௌதமியும், இளவரசர் அரண்மனையில் ஆடல் பாடலாதிய விநோதங்கள் பல முன்னையினும் விசேஷமாக நடைபெறும்படி ஆக்ஞாபித்திருந்தனர்; அரண்மனையின் பாதுகாப்பையும் பலப்படுத்தியிருந்தனர். இவ்வாறெல்லாம் அவர்கள் செய்ததின் உட்கருத்து, கௌதமர் மனப்போக்கைத் தடைசெய்து பிறவழியிற் செலுத்துவதைத்தவிர வேறில்லை. ஆனால், பாவம், அவர்கள் கருத்து நிறைவேறுவதற்கு ஒரு சிறிதும் இடம் இல்லை. இளமையிற்கூட வளையாதமரம் முற்றி முதிர்ந்தபின் வளைவதேது? வைரம்பற்றிய மரம்போல, வைராக்கியத்தால் திடம்பெற்றிருக்கும் கௌதமர் நெஞ்சம், வேடிக்கை விநோதங்களால் நெகிழ்ந்துவிடுமோ? நெகிழலாம் என்று நினைக்கக்கூடிய காலம் கடந்துவிட்டது. அவ் வுண்மை சுத்தோதனனுக்கும் ஒருவாறு புலப்பட்டது. ஆயினும், அவன்

பாசக்கடலிற் கிடந்து தத்தளிப்பவனுதலால், தன்முயற்சி யைக் கைவிட மனமிசைந்திலன் ; 'அணைகடந்த வெள்ளம் அழுதாலும் வராது' என்னும் முதுமொழியை உள்ளத்திற் கொண்டானில்லை.

> 'நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்ம
> லாட்டமென் றேயிரு பொல்லா உடலை அடர்ந்தசந்தைக்
> கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீ
> ரோட்டமென் றேயிரு நெஞ்சே யுனக்குப தேசமிதே.'

என்ற உபதேசத்தில் ஊறிய கௌதமர் நெஞ்சம் துறவு மார்க்கத்திலேயே முற்றி நாளடைவில உற்றார் உறவினர் பற்றை அறவே உதிர்த்துவிட்டது. 'மனைவி வருந்துவாள், மாதாபிதாக்கள் வருந்துவார் என்றெண்ணித் தாமதிப்பது மதியீனம். ஒரு சிலர் துன்பத்துக்கஞ்சி நின்றால், உலகத் துன்பத்தை ஒழிப்பதெப்படி? இவர்கள் சிலகாலம் வருந்து வார்கள் ; பிறகு உண்மையுணர்ந்து மனம் திருந்துவார்கள். இவர்களுக்காக நான் தாமதிக்கக்கூடாது எல்லாருமறியத் துறந்துசெல்லலாம் என்றெண்ணித் தந்தையை விடைகேட் டேன் அதற்கவர் ஒப்பவில்லை என் கருத்தை அழிப்பதி லேயே கண்ணுயிருக்கிறாரேயன்றி, என் கருத்து ஈடேற இடந் தருகின்றாரில்லை. நான் நல்வழி தேடிப்போவதைக் கையால் தடுக்காமல் தம் கண்ணீரால் தடுக்கிறார். அவர் கண்ணீரே என் மனஉறுதியைக் கரைக்க முந்துமானால், அன்னை கௌதமியும் ஆருயிர் நாயகி யசோதரையும் என் பிரிவுக்காற்றாது உகுக்கும் கண்ணீர் என் உறுதியை அடி யோடு அழிப்பினும் அழிக்கும். அதற்கு இடங்கொடுக்கக் கூடாது. அவர்கள் கண்ணிற்படாமல் அற்றம் பார்த்திருந்து வெளியேறித் துறவுபூணவேண்டும்' என்று கருதி அதற்கான சமயம் பார்த்திருந்தார் கௌதமர்.

இங்ஙனம் இருக்கும் நாட்களில் ஒருநாள் கௌதமர், வழக்கம்போல நீராடச் சென்றிருந்தார் தம உள்ளம் போலவே புலர்க்கும் பயன்படவேண்டிக் குளிர்ந்து தெளிந்து ஓடும் உரோகிணி நதிக்கரையில், தமக்கென்று அமைக்கப் பட்ட ஓர் அழகிய துறையிலிறங்கிக் கௌதமர் நீராடி முடித்துக் கரையேறினர். உடனே அவருடன் வந்திருந்த

ஏவலாளரில் ஒருவன் வெண்பூந்துகிலால் அவரது நீர்படிந்த நெடுஞ்சிகையையும திருமேனியையும மெல்லெனத் துவட்டி ஈரம் போக்கினன் ; மற்றொருவன், அவர் உடுத்துக்கொள்ள, புத்துடைகளை கொண்டுவந்து கொடுத்தான் கௌதமர் அவைகளை வாங்கி உடுத்துக்கொண்டார் உடனே ஒரு வேலைக்காரன் கௌதமர் களைந்துபோட்ட ஈரத்துகிலைப் பிழிந்தெடுத்துக்கொண்டான் கொற்றக் குடைநிழலில் கௌதமர் சிறிதுதூரம் நடந்துசென்று, தமக்காகக் காத்திருந்த ரதத்தின்மீதேறினா. ரதம அரண்மனையை நாடிச் சிறிதுதூரம சென்றது

அப்போது கௌதமர் என்றும் கேட்டறியாத ஒரு பேரொலி அவர் செவிக்கெட்டியது அது என்ன என்று அவர் அதிசயித்துச் சிந்தித்துக்கொண்டிருக்கும்போது மேளதாளங்கள ஒலிக்க, பேரிகைமுழங்க ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடிக் குதூஹலித்துக் கடலபோல ஆரவாரஞ் செய்துகொண்டு தமமைநோக்கி வருவதைக் கண்டார். கௌதமருக்கு அதிசயத்தின்மேல் அதிசயமாயிற்று. அவர் தம் தேர்ப்பாகனை நோக்கித் தேரை நிறுத்தும்படி கட்டளையிட்டார். தேர் நின்றது. அப்போதே குதிரைவீரன் ஒருவன், கூட்டத்தை நீக்கிக்கொண்டு விரைந்துவந்து தேரருகே நின்று கௌதமரை நோக்கிக் கைகூப்பி நமஸ்கரித்தான்.

“ஏன் இவ்வளவு கூட்டமும், முழக்கமும் ? என்ன விசேஷம் ?” என்று அவனைநோக்கி வினவினார் கௌதமர்.

“அரசே, தங்களுக்கு திருக்குமாரர் பிறந்திருக்கிறார்” என்றான் குதிரைவீரன்

கௌதமர் இடியோசை கேட்டாற்போலச் சிறிதுநேரம் கலங்கியிருந்து, ‘நல்லது’ என்று கூறி அவனை அனுப்பிவிட்டுத் தேரை நடத்தும்படி பாகனுக்குக் கட்டளையிட்டார். இளவரசர்க்குப் புத்திரன் பிறந்ததை அறிந்து களித்து ஆரவாரஞ் செய்துகொண்டு திரண்டுவந்த குடிமக்கள், கௌதமர் ஏறிவந்த ரதத்தை நெருங்கவும் அதைச் சுற்றிச் சூழ்ந்தனர். அதனால் ரதம் வேகமாய்ச் செல்லக் கூடவில்லை ; ஊர்வல ரதம்போல மெல்லமெல்ல ஊர்ந்து செல்லவேண்டியதாயிற்று. தமக்குப் புத்திரப்பேறு உண்டானதைப்பற்றித் தம் நகர

மாந்தர் அடையும் மகிழ்ச்சியைக் கண்டு உவப்பும், 'இந்தப் புத்திரப்பேற்றால் மற்றொருபந்தம் ஏற்பட்டதே' என்று வருத்தமும் கொண்டிருந்தார் கௌதமர்.

அந் நிலையில் அவர் கண்ணெதிர்ப்பட்ட காட்சிகளும், காதிற்கேட்ட ஒலிகளும், அவர் மனத்திற் பதியவில்லை. கனவில் ஏதேதோ கண்டும் கேட்டும் செல்வார்போல அவர் தேர்மீது சென்றுகொண்டிருந்தார். ராஜவீதிவழியே ரதம் சென்றபோது, யாரோ ஒரு பெண்மகள் இன்குரலெடுத்துப் பாடும் ஒலி, மற்ற ஒலிகளைவிடத் தெளிவாக அவர் செவிக் கெட்டியது. அவர் அவ்வொலி வந்த திசையைக் கூர்ந்து நோக்கினார். ராஜவம்சத்தைச் சார்ந்த கன்னிகை ஒருத்தி, தன் மாளிகையின் உப்பரிகைமீது தம்மையே நோக்கிநிற்பதை அவர் கண்டார். அவள் கௌதமருக்கு உறவினள்; அழகிற் சிறந்தவள்; விவாகமாதற்குரிய பருவம் அடைந்தும் இன்னும் விவாகமாகப் பெறாதவள். அவள் பாடிய பாட்டொலியே கௌதமர் கருத்தைக் கவர்ந்தது. தன்னை அவர் நோக்கியதை அறிந்ததும், அம் மங்கை முன்னையினும் தெளிவாகவும், இனிமையாகவும்,

> 'இத்தகைய எழிற்குமரன் இவன்றன்னை ஈன்றெடுத்த
> உத்தமியும் பாக்யவதி; இவன்தந்தை எனவந்த
> உத்தமனும் பாக்கியனே; இவன்றனக்கு மனையாளாம்
> அத்தகைய பேறுபெற்றாள் எவள்அவளும் பாக்யவதி!'

என்று பாடினாள். அவள் பாடிய இப்பாடல், துன்ப நிவர்த்திக்குரிய மார்க்கத்தை நாடுவதிலேயே கருத்தூன்றியிருந்த கௌதமருக்கு ஒரு நன்னிமித்தமாகத் தோன்றியது. 'தாய் தந்தை, மனைவி என்னும் இம் மூவருந்தானே பாக்கியசாலிகள் என்று இவள் சொல்கிறாள். எல்லாரும் பாக்கியசாலிகள் ஆவது எப்படி? எல்லாருக்கும் என்றும் அழியாத இன்பத்தையும் சாந்தத்தையும் தருவது எது? ஆசை நெருப்பு அவிந்தால் மனோசாந்தம் ஏற்படும்; துவேஷத்தீயும் மோகத்தீயும் தணிந்தால் மனோசாந்தம் உண்டாகும். யான் தேடுவது சாந்த நிர்வாணமேயன்றோ? இன்றையதினமே யான் இவ் வில்லறவாழ்க்கையைத் துறக்கின்றேன். இனி நிர்வாண நிலை ஒன்றைத்தவிர வேறெதையும் நாடேன்," என்று கௌத

மர் தம்முள் எண்ணி, அம்மங்கை பாடிய * உபஸ்ருதியான பாட்டுக்காக அவள்பால் நன்றிபாராட்டித் தம் கழுத்தில் அணிந்திருந்த விலையுயர்ந்த முத்தாரத்தை அவளுக்கு நன் கொடையாகக் கொடுத்தனுப்பினார்.

அதைப் பெற்றுக்கொண்ட அவ்விராஜகுலக் கன்னிகை 'இளவரசர் என்மீது கொண்ட விருப்பத்திற்கோர் அறிகுறி யாகவன்றோ இம் முத்தாரத்தை எனக்குக் கொடுத்தனுப்பி னர். என் பாக்கியமே பாக்கியம்! இராஜகுமாரர் எப்பொ ழுது என் அழகில் ஈடுபட்டு எல்லாருமறிய எனக்கு நன் கொடை கொடுத்தனுப்பினரோ, அப்பொழுதே அவர்க்கு என்மீது பூரணமான விருப்பம் ஏற்பட்டிருக்கிறது என்பதை யாவரும் அறிந்திருப்பர் ஆதலால், அரசர் என்னை அவ ருக்கு விவாகஞ் செய்துவிடுவார் என்பதிற் சந்தேகமில்லை. எல்லாம் கடவுள்செயல். கௌதமருக்கு நான் வாழ்க்கைப் பட்டபிறகு அவர் என்னைத் தமது பிரதம மனைவியாகப் பாராட்டுவார் என்பதில் ஐயமுண்டோ!' என்று மனப்பால் குடித்திருந்தாள்.

கௌதமரோ, அவள் பாடிய பாட்டால் தமக்குண்டான நல்லுணர்ச்சியைத் தவிர வேறு சிந்தையற்றவராய்ச் சென் றார். ரதம் அரண்மனைவாயிலில் போய் நின்றது. கௌத மர் ரதத்தைவிட்டிறங்கவும், சுத்தோதனன் அவரை எதிர் கொண்டு சென்று அன்போடு தழுவிக்கொண்டு, "கண்மணி, சித்தார்த்தா, உன்னைப் பெற்று நான் மகிழ்ந்ததுபோல் நீ மகிழ உனக்குப் புத்திரன் பிறந்திருக்கிறான்" என்றான்.

"புத்திரனா! என் மனம் மகிழ வந்த மகனோ, அன்றி என் மதிவிழுங்க வந்த ராகுவோ அவன்! அறியேன்" என் றார் கௌதமர்.

தம் குழந்தையைக் கௌதமர் இங்ஙனம் 'ராகுவோ' என்றதே காரணமாகப் பின்னர் அதற்கு ராகுலன் எனப் பெயரிட்டனர்.

சுத்தோதனன் உள்ளத்தில் அவர் சொன்ன சொற்கள் அம்புபோற் பாய்ந்தன. ஆயினும், அவன் அதை வெளிக்

* உபஸ்ருதி = உதவியான சொல்.

காட்டிக்கொள்ளாமல், சிரித்துக்கொண்டு, "நீ கற்றுத் துறை போய காதலன் அன்றோ? யசோதரை உனக்குக் கற்பிற் சிறந்த காதலியன்றோ? பிறந்த குழந்தை அவள் உனக்குப் பெற்றுக்கொடுத்த தலைமகன் அன்றோ? நீ அக் குழந்தையை வந்து பார். நீ பிறந்தபோது எப்படி இருந்தாயோ, அப் படியே இருக்கிறது உன் குழந்தை" என்றான்.

கௌதமர் புன்னகை செய்து, "தந்தாய், தங்கள் விருப் பப்படியே வந்து பார்க்கிறேன். தாங்கள் கூறிய சொற்கள் எங்கோ நான் கேட்ட செய்யுள் ஒன்றை நினைவூட்டுகின்றன" என்றான்.

"என்ன செய்யுள் 'அது?'" என்று வினவினான் சுத் தோதனன்.

"நல்ல சமயத்தில் தாங்கள் அதை நினைப்பூட்டினீர்கள். அதைச் சொல்கிறேன் கேளுங்கள்.

'கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே இன்பம்:
இறந்தவெலாம் துன்பமலா தில்.'

உண்மை உணர்வதன் சிறப்பு இச் செய்யுளில் எவ்வளவு விளக்கமாகத் தெரிகிறது, பார்த்தீர்களா!" என்றார்.

சுத்தோதனன் தனது அஜாக்கிரதையை எண்ணித் தனக் குள் துன்புற்றான். ஆயினும், கௌதமர் கூற்றை அங்கீ கரித்ததாகக் காட்டக்கூடாதென்று கருதி, "ஆம், சித் தார்த்தா, இல்லறத்தார்க்குப் புத்திரப்பேறு எவ்வளவு இன் பந்தருவது என்பதை நீ சொன்ன செய்யுள் மிகத் தெளி வாய்க் காட்டுகிறது. அது கிடக்கட்டும், குழந்தையைப் பார், வா" என்று கூறி விரைந்து சென்றான்.

கௌதமர் தம் தந்தையுடன் அந்தப்புரத்திற்குச் சென்று, அங்கே மஞ்சத்திற் பஞ்சணையில் கிடந்த குழந்தையையும், அதனோடு படுத்திருந்த தம் பத்தினி யசோதரையையும் கண்டார். யசோதரை படுக்கை விட்டெழச் சக்தி யின்றித் தன் ஆருயிர் நாயகரை அன்புகனிய நோக்கிப் புன்னகை புரிந்தாள்.

குழந்தையின் சுந்தரம் கௌதமர் கண்ணைப் பறித்தது. அதைக் கூர்ந்து பார்க்க அவர் அஞ்சி யசோதரையைப் பார்த்துச் சிறுநகை செய்துவிட்டு விரைவில் அவ்விடம் விட்டகன்றார்

முதிர்ந்த மரம் பெருங்காற்றில் தள்ளாடுவதுபோலப் பல வகை யுணர்ச்சிகளால் தன் மனம் அலைய, சுத்தோதனன், தனக்குப் பேரன் பிறந்தது குறித்து அன்றெல்லாம ஆடல் பாடலாதிய விநோதங்கள் இடையறாது நிகழ ஏற்பாடுகள் செய்ததோடு, காவல்வீரர் இரவும் பகலும் ஓயாது கௌதமர் மாளிகையைக் காத்துவருமாறும் ஆக்ஞாபித்துவிட்டுத் தன் அரண்மனைக்குப் போய்விட்டான்.

அன்றிரவு நெடுநேரம்வரையில் கௌதமர் மாளிகையில் வேடிக்கை விநோதங்களும், ஆடல் பாடல்களும, வாத்திய கோஷமும நிறைந்து, எங்கும் ஒரு போரரவாரமா யிருந்தது. அழகிற் சிறந்த வாலிபப் பெண்கள் பலர், கௌதமர் சமுகத்தில் இன்னிசை பாடி நாட்டிய மாடினர் ஆனால் கௌதமருக்குத் துறந்து செல்வதொன்றிலேயே சிந்தை முழுதும் சென்றிருந்த தாதலால, அங்கு நிகழ்ந்த காட்சிகளும அவர் கண்ணிற் படவில்லை; இசை நலங்களும் அவர் செவிக் கெட்டவில்லை துறவைபபற்றிச் சிந்தித்தவண்ணமே அவர் கண்ணயர்ந்து விட்டார்.

கௌதமர் உறங்கியது கண்ட ஏவலாளர் அனைவரும், தமக்கிருந்த அயர்ச்சி மிகுதியினால் படுத்து உறங்கத் தொடங்கினர். இன்னிசை பாடிய மகளிரும் உறங்கினர். நாட்டிய மாடிய மாதரும் உறங்கினர் யாவரும் உறங்கினர் கண் விழிப்பாய்க் காவல்புரியுமாறு ஆக்ஞாபிக்கப்பட்ட காவல் வீரரும், ஏதோ தெய்வச் செயலாய்த் தம்மையும் மறந்து உறங்கிவிட்டனர் சிறிது நேரத்துக்கெல்லாம் மாளிகை முழுவதும் அமைதி நிறைவதாயிற்று.

அப்பொழுது, "கௌதமா, நீ கருதிய கருமத்தை மறந்து உறங்குகிறையே, என்ன! எழுந்திரு" என்று யாரோ தம்மைத் தட்டி எழுப்புவதுபோல் தோன்றக் கௌதமர் கண் விழித்துக்கொண்டார். திடுக்கிட்டு எழுந்து சுற்றுமுற்றும்

பார்த்தார். ஒருவரும் விழித்தில்லை. எல்லோரும் அயர்ந் தூறங்கினர் சற்றுமுன் கடலைப் கோஷித்த அவ்விடம் இப்பொழுது ஒரு சிறு சப்தமுமின்றி ஓய்ந்திருந்தது. 'இது தான் நான் வெளியேறுவதற்கு ஏற்ற சமயம்! ஏதோ தெய் வானுக்கிரகத்தால் நல்ல சமயத்தில் விழித்துக்கொண்டேன். இனித் தாமதியாமற் செல்லவேண்டியதுதான்,' என்று உறுதி கொண்டு கௌதமர் வெளியே செல்லச் சித்தமானார்.

அச்சமயம், அன்றுதான் தமக்குப்பிறந்த குழந்தையின் ஞாபகம் கௌதமருக்கு உண்டாயிற்று. 'இப்பொழுது இவ் விடம் விட்டுச் செல்லும் நான் இனி மீண்டு இங்கு வரப்போ கிறதில்லை. எத்தனையோ நாளாக என் மனத்தில் முற்றிவந்த கருத்து இன்றுதான் பலன்கொடுக்கப் போகிறது ஆதலால், இந் நாள் ஒரு நன்னாள் இந் நன்னாளில் ஒரு நற் சகுனமாக எனக்குப் பிறந்த குழந்தையை நான் நன்றாகப் பார்க்கக்கூட இல்லையே. அந்தப்புரத்துக்குப் போய்க் குழந்தையைப் பார்த்துவிட்டுப் போகலாம்' என்று கருதிக் கௌதமர் அந் தப்புரத்துக்குச் சென்றார்

அங்கே மஞ்சத்தில் நறுமலர் பரப்பிய பஞ்சணைமீது, பார்ப்பை அணைத்துக்கொண்டு படுத்துறங்கும் மென்சிறை யன்னம்போல, யசோதரை தான் பெற்ற பச்சிளங்குழவி யைத் தன் பூங்கரத்தால் அணைத்துக்கொண்டு உறங்கினாள். கௌதமர் அடிமேல் அடி வைத்து மஞ்சத்தருகே சென்று நின்று குழந்தையைக் கனிவோடு நோக்கினார் வஞ்சம், அச்சம், விசாரம் முதலியவை ஒரு சிறிதும் இன்றி இன்ப மயமாய் விளங்கிய அதன் அழகிய முகத்தைக் கண்டதும் அவர் உள்ளம் உருகியது. 'அந்தோ, மகனே, துன்பம் நிறைந்த இவ்வுலகில் நீ ஏன் வந்து பிறந்தாய். பிறந்த உயிர்கள் அனைத்தையும் விடாது பற்றும் பிணி மூப்புத்துன்பச் சாக் காடுகள் உன்னையும் பற்றுமே!' என்று தமக்குள் தாமே எண்ணி வருந்திய அவர், அக் குழந்தையைத் தம கையில் எடுத்து ஒரு முத்தமிட விரும்பினார். ஆனால், மறுகணமே அவ் விருப்பத்தை உள்ளடக்கி 'கூடாது. சிசுவைக் கையில் எடுப்பதானால் அதை அணைத்திருக்கும் யசோதரையின் கரத்தை அப்பால் எடுத்து வைத்துத்தான் ஆகவேண்டும்.

அப்படிச் செய்தால் யசோதரை விழித்துக்கொள்வாள். நான் செல்வதை அறிந்து என்னைத் தடுப்பாள். அவளைச் சமாதானம் செய்து செல்வது கஷ்டமாகும். இதற்கென்ன செய்வது !'' என்று கருதித் தியங்கினார்

அப்பொழுது யசோதரை ஏதோ கனவு கண்டு, "ஏன், நாதா !" என்றாள். கௌதமர் திடுக்கிட்டு அவள் கண்ணிற் படாமல் சிறிது தூரம் அகன்று சென்று நின்றார். யசோதரை உறக்கங் கலைந்து எழுந்துவிட்டாளோ என்று மெல்லப் பார்த்தார் இல்லை ! யசோதரை கண் விழிக்கவு மில்லை, எழவு மில்லை. 'ஏதோ கனவு கண்டு உளறியிருக்கிறாள் நல்ல வேளை ! அன்றையதினம் கனவு கண்டு விழித்தெழுந்ததுபோல இப்பொழுதும் எழுந்திருந்தால், என் நிலை என்னவாகும் ! வருந்திப் பெற்ற அமுதத்தை வாய் வைக்கும்போது கொட்டுவது போலாமன்றோ ! என் மதியீனத்தை என்னென்பது ! நெடுநேரம் இங்கு நின்றுவிட்டேன் இனிச் செல்லவேண்டியது தான் யசோதரை நன்றாய் உறங்குகிறாள். அதுவும் எனது நற்காலத்துக்கு ஓர் அறிகுறிதான் பாவம் ! உறக்கத்திலும் அவள் என்னையேதான் நினைத்துக்கொண்டிருக்கிறாள். இப்படிப்பட்ட பேதையை நான் கைவிட்டுப் போகிறேனே ! என் பிரிவை அறிந்த பிறகு அவள் எங்ஙனம் மனம் ஆறுவாள் !' என்றெண்ணி அவர் மீண்டும் மஞ்சத்தருகே சென்று யசோதரையின் முகத்தை ஒரு சிறிது நேரம் உற்றுப் பார்த்து நின்றார்.

யசோதரை அயர்ந்து உறங்கினாள். அவள் முகம் அவள் அணைத்திருந்த குழந்தையின் முகம்போல் நிர்மலமாய் விளங்கியது புன்னகை தவழ்வதுபோல் தோன்றிய அவள் இதழ்கள், 'எனக்கு என்ன குறை ! என் நாதரே எனக்குத் தெய்வம். அவருக்குப் பிறந்த இக் குழந்தையே பெறக்கூடிய பேறுகள் எல்லாம் பெரும்பேறு' என்று சொல்வதுபோலிருந்தன அவளை விட்டுப் போக மனமில்லாமல் கௌதமர் சில விநாடிகள் நின்றார் பிறகு தாம் கருதிவந்த கருமத்தை நினைத்துக்கொண்டு, 'மனமே, சபலத்துக்கு இடங்கொடாதே. யசோதரை உனக்கு இனியவள்தான். ஆயினும், அவளுக்கு உண்டாகும் பிணிமூப்பாதிய துன்பங்களை

விலக்க உன்னால் முடியுமா? உன்னுடைய துன்பங்களை நீக்கிக்கொள்வதற்கே இப்பொழுது உனக்கு வல்லமை இல்லை. நீ அவள் துன்பங்களை எங்ஙனம் அகற்றக் கூடும்! துன்ப நிவிர்த்திக்குரிய மார்க்கத்தைத் தேடிக் கண்டுபிடிக்கத் துணிந்து புறப்பட்டாயன்றோ? அந்தத் துணிவைத் தளரவிடாதே. செல்! சென்று அந்த நிவிர்த்தி மார்க்கத்தைக் கண்டுபிடி. அப்பால், அதன் மூலமாக நீ உனது துன்பங்களையும் நீக்கிக் கொள்ளலாம்; உன் அன்பிற் குரியரான யசோதரை முதலியவர்களது துன்பங்களையும் நீக்கலாம்; துன்பசாகரத்திலேயே கிடந்துழலும் எண்ணிறந்த மக்களின் துன்பங்களையும் நீக்கலாம். சிந்தனையிலேயே காலத்தை வீணே போக்கி வருந்தாதே குருடன் குருடனுக்கு வழிகாட்டுவ தெப்படி? பிறருக்கு வழிகாட்ட விரும்பும் நீ, முன்னே சென்று ஞான விளக்கம் பெற்றுவா. பின்னால் நீயே நின் மனைவிக்கும் மைந்தனுக்கும் ஞானாசாரியனாகலாம்' என்று தம் மனத்தைத் தாமே திடஞ்செய்துகொண்டு அந்தப்புரத்தின் வாயிலை நோக்கிச் சென்றார்.

வாயிலை அடைந்ததும் அவர் அங்கு நின்றபடியே திரும்பி யசோதரையைப் பார்த்தார். அவ்விடம் விட்டு அகன்று செல்ல அவர் காலெழவில்லை. மீண்டும் யசோதரையிடம் வந்தார். அவளைப் பார்த்தார்; மறுகணமே திரும்பிச் சென்றார். இம்முறையும் வாயிலைக் கடந்து செல்ல அவரால் முடியவில்லை மறுபடியும் திரும்பி யசோதரையண்டை வந்து சற்று நின்று அவள் முகத்தைக் கண்ணிமையாமற் சிறிதுநேரம் பார்த்திருந்து, ஒரு பெருமூச்சு விட்டு, 'இவ்வளவு சபல மனமுடைய நான் எவ்வாறு தொடுத்த காரியத்தைத் தொடர்ந்து முயன்று சாதிக்கப் போகிறேன்! கூடாது, கூடாது. இவ்விதமான மன நெகிழ்ச்சிக்கு ஒரு சிறிதும் இடங்கொடுக்கக் கூடாது. யாருக்காக நான் இவ்வாறு தியங்குகின்றேன். என் மனைவிக்கா? என் மகனுக்கா? மனைவி யார்? மகன் யார்? யான் யார்? எனதார்? என்று ஆராய்ந்த ஆராய்ச்சிகளை யெல்லாம் எங்கே போக விட்டாய். மனமே! ஒரு நாளா, இரு நாளா! நெடுநாளாய்ச் சிந்தித்தையே!

'மையாடு கண்ணியும் மைந்தரும் வாழ்வும் மனையுஞ்செந்தீ
ஐயா,நின் மாயை யுருவெளித் தோற்றம். அகிலத்துள்ளே
மெய்யாயிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும் [வே!'
பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனது

பொய்யாய்ப் போனதை மெய்யாய் நினைந்து என் வருந்து கின்றனை? உன் வருத்தத்தையும் மயக்கத்தையும் விட்டொழிந்து செல் கணமும் தாமதியாதே!' என்று தம்மைத் தாமே தைரியம் செய்துகொண்டு, இழுக்க அரிதான ஒரு பெரும்பாரத்தைத் தம முழுப்பலத்தாலும் இழுத்துக்கொண்டு செல்வது போலப் பின்னிழுக்கும் காலை முன் இழுத்து வைத்து நடந்து அந்தப்புரத்தைத் தாண்டினார். அங்கு சென்றதும் தமக்குத் தடையாயிருந்த பாரம் தம்மைவிட்டு நீங்கியதுபோலத் தோன்றியது. தப்பிச் செல்ல இதுதான் சமயம் என்று கௌதமர் மிக விரைவாய் வாயில்கள் அனைத்தையும் கடந்து மாளிகையின் முன்வாயிலை அடைந்தார். அங்கே சிறிது நின்று மாளிகையின் உட்புறத்தையும் வெளிப்புறத்தையும் மாறி மாறிப் பார்த்தார் எங்குப் பார்த்தாலும் எரிந்துகொண்டிருந்த எண்ணிறந்த விளக்குகளால் மாளிகையின் உள்ளும் புறமும் ஒரு பேரொளி பரவி நிறைந்திருந்தது. அவ்வொளியில், ஆடவர் மகளிர் அனைவோரும், தாம் அந்தப் புரத்துட் செல்லும்போது இருந்தபடியே அயர்ந்து உறங்கிக்கொண் டிருப்பதைக் கௌதமர் கண்டார் 'எனக்கு இடையூறுகாமல் இவர்கள் அனைவரும் இவ்வளவு அயர்ந்து உறங்குவது தெய்வ சங்கற்பமேயன்றி வேறென்ன? தெய்வம் எனக்குத் துணையிருக்கிறது. நான் கொண்ட கருத்து நிறைவேறும்' என்றெண்ணி அவர் துணிவும் மகிழ்வும் கொண்டு குதிரைச் சாலையை நாடிச் சென்றார்.

குதிரைச் சாலையின் வாயிற்புறத்தில் சந்தகன் என்னும் பாசன் உறங்கிக்கொண் டிருந்தான். கௌதமர் அவனைத் தட்டி எழுப்பி, "சந்தகா, எனது கண்டகத்தைக் கொண்டு வா" என்றார். கண்டகம் என்பது கௌதமரது பட்டக் குதிரையின் பெயர். அவர் அந்நேரத்தில் அதைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டது சந்தகனுக்கு அதிசயமாய்த் தோற்றியது. ஆயினும் அவன் இளவரசர் கட்டளையை மறுத்தற்

கஞ்சி, தன் அதிசயத்தை உள்ளடக்கிக்கொண்டு, குதிரைச் சாலையுட் சென்று கண்டகத்தை அவிழ்த்துவந்து கௌதமர் எதிரே நிறுத்தினான். ஒப்புயர்வற்ற ஒரு சற்காரியத்துக்குத் தன் எஜமானனைச் சுமந்து செல்லப்போவதை அறிந்து ஆனந்தங் கொண்டதுபோல அக் குதிரை உரத்த சத்தமிட்டுக் கனைத்தது. அச் சத்தம் கேட்டு யாரேனும் விழித்துக்கொள்வார்களோ என்று அஞ்சிக் கௌதமர் சுற்றுமுற்றும் பார்த்தார். ஒருவரும் கண்விழித் தெழுந்ததாகக் காணப்படவில்லை 'இதுவும் தெய்வச செயல்தான்' என்றெண்ணிக் கௌதமர் மனமகிழ்ந்து குதிரையை அன்போடு தடவித் தட்டிக்கொடுத்து அதன்மீ தேறினார். சந்தகன் அதற்கு மேலும் மௌனமுற்றிருக்க முடியாதவனாய், மிகுந்த பய பக்தியுடன் கௌதமரை நோக்கிக் கைகூப்பி, "அரசே, அர்த்தசாம மாயிற்றே இந்த அகாலவேளையில் எங்கேனும் செல்வது ஆபத்துக்கிடமன்றோ? செல்வது அவசியமானால், தக்க துணையாக வீரர் சிலரை உடன்கொண்டு செல்லலாமே" என்றான்.

கௌதமர் புன்னகைபுரிந்து, "சந்தகா, நீ மட்டும் தனியே என்னுடன் வருதற்கு அஞ்சுகின்றனையோ?" என்றார்.

"இல்லை. அரசே என்பொருட்டு எனக்கு அச்சம் ஒரு சிறிதும் இல்லை தாங்கள் செல்லும காரியம என்னால் ஆகக் கூடியதானால் நான்மட்டும் தனியே சென்று அதை முடித்து வரச் சித்தமாயிருக்கிறேன்" என்றான் சந்தகன்.

கௌதமர் அவனை அன்போடு நோக்கி, "சந்தகா, உன் பொருட்டு உனக்கு அச்சமில்லாவிட்டால், நீ என்னுடன் வா. என்பொருட்டு உனக்குக் கொஞ்சமும் அச்சம் வேண்டா. நீ திரும்பிவரும்போது நான் செல்லும் காரியம் இன்னதென உனக்குச் சொல்கிறேன். இப்பொழுது நீ எனக்காகக் கவலை கொள்ளாமல் என்னைத் தொடர்ந்து வா" என்று கூறிவிட்டுக் குதிரையின் கழுத்தைத் தட்டி, "என் அருமைக் கண்டகமே, உன்னை நம்பித்தான் நான் இப்பொழுது வெளியேறுகின்றேன். நீ எங்கே என்னைக் கொண்டுபோய் நிறுத்துகிறையோ, அங்கே நான் நிற்பேன். நீ தாமதியாமற் செல்" என்று கலினத்தைத் தளர்த்தினார். உடனே கண்ட

கம் குதூஹலத்தோடு கழுத்தை நிமிர்த்தி நெளித்துப் பாய்ந்து சென்றது.

குதிரை கூடியவரையில் வேகமாய்ச் சென்றும் அதன் காலடிச் சத்தம் கௌதமர் செவிக்குக் கூடக் கேட்கவில்லை. 'இதுவும் ஓர் அதிசயம்' என்றெண்ணிக் கௌதமர் ஆனந்த பரவசராய்ச் சென்றார். அன்றையதினம் பௌர்ணமிநாள். ஆதலால் பூரணசந்திரனது தண் கதிர்கள் எங்கும் பால மெல்லொளி வீசின. ஆயினும், அவ்வொளியின் வேறாக அதைவிடப் பிரகாசமான ஓர் இன்னொளி கௌதமரைச் சூழ்ந்து சென்றது. இவ்வதிசயங்களையெல்லாம் கௌதமர் கவனித்தார். உடன் சென்ற சந்தகனுக்கு முதலில் அவை புலப்படவில்லை. இளவரசர் எங்குச் செல்கிறாரோ, யாது கருதிச் செல்கிறாரோ என்ற யோசனையிலேயே அவன் மனம் உறைந்து நின்றது. சிறிது தூரம் செல்லவும் கௌதமர் அவனைக் கூப்பிட்டு "சந்தகா, குதிரையின் காலடி ஓசை உனக்குக் கேட்கிறதா?" என்று வினவினார்.

அப்பொழுதுதான் அதைக் கவனிக்கத் தொடங்கிய சந்தகன் அதிசயமுற்று, "இல்லை, அரசே" என்றான்.

"சரி, வா எனக்குக் கூடக் கேட்கவில்லை. அதனால்தான் நான் உன்னைக் கேட்டேன்" என்றார் கௌதமர்.

கௌதமரைச் சூழ்ந்திருந்த அதிசய ஒளியையும் சந்தகன் அப்பொழுதுதான் கவனித்தான்; 'ஏதோ, எல்லாம் அதிசயமாயிருக்கின்றன!' என்று பிரமித்து, பயபக்தியுடன் கண்டகத்தின்மீது செல்லும் கௌதமரைத் தொடர்ந்து சென்றான்.

கௌதமர் தம் நகர் எல்லையைக் கடந்து சிறிதுதூரம் செல்லவும், யாரோ ஒரு சுந்தர புருஷன் தம்மை வழிமறித்து, "கௌதமா, ஏன் நீ உலக இன்பங்களை அனுபவியாது துறக்கக் கருதி உன் நகரைவிட்டுச் செல்கின்றாய்? கண்ணாரக் காணும் இன்பங்களைக் கைவிட்டு, காணாத இன்பம் ஏதோ இருக்கிறதென்று அதைத் தேடி ஓடுவது மதியீனமன்றோ? நீ தேடுகிற பேரின்பம் பாலைநிலத்தில் தோன்றும் கானற்சலம் போன்ற ஒரு பொய்த்தோற்றமே ஒழிய உண்மையன்று அதை நம்பிச் சென்று ஏமாறாதே நீ ஒரு தேச மன்னனுக்கு மக

னாய்ப் பிறந்துள்ளாய். அதோடு, நீ துறக்கும் கருத்தை விட்டு மீண்டு உன் நகர்க்குச் செல்வாயானால், இன்று முதல் இன்னும் ஏழு நாட்களில் நான் உன்னை இவ்வுலகிலுள்ள நான்கு கண்டங்களுக்கும் தனியரசனாக்குவேன். திரும்பி உன் நகர் செல்" என்று சொல்வதுபோலிருந்தது. உடனே கௌதமர் தமக்குத் தோற்றிய உருவத்தை நோக்கி நகைத்து, "என்னை மயக்க முயலும் நீ யார் என்பதை நான் அறிவேன். மாய்கையில் அழுந்திக் கிடக்கும் மக்களுக்குப் 'பாவத்திற்குக் காரணமான இச்சைகளை உண்டாக்கும் தெய்வமாகிய மாரன் என்பவன்' நீயே. என்னை மயக்க உன்னாலாகாது. நான் உன்னை மதியேன். செல் விலகி" என்று கூறித் தம் கண்டகத்தைப் பின்னும் வேகமாகச் செல்லத் தூண்டினார். அக் கணமே மாரன் மறைந்து விட்டான்.

இராப்பொழுது சிறிது சிறிதாகக் கழிந்தது. மறுநாட் பொழுது புலரும் சமயத்தில் கௌதமர் கோலிய நாட்டுக்கு அப்பாலுள்ள அநோமநதியின் கரையை அடைந்தார். அங்கே அவர் குதிரை தானாகவே நின்றுவிட்டது. அவ்விடத்தில் பார்க்கவர் என்னும் துறவியார் ஒருவருடைய ஆசிரமம் இருந்தது. 'நான் துறப்பதற்கு ஒரு நன்னிமித்தமாகவேபோலும் எனது அருமைக் கண்டகம் என்னை இங்கே ஒரு துறவியின் ஆசிரமத்தருகே கொண்டுவந்து நிறுத்தியது!' என்றெண்ணிக் கௌதமர் மனமகிழ்ச்சியோடு குதிரையை விட்டிறங்கி, அவ்வளவுதூரம் தம்மைச் சுமந்து வந்ததற்காகக் கண்டகத்தை மெச்சி, அதன் உடம்பைத் தடவிக் கொடுத்தார். பிறகு, ஒன்றுந் தோன்றாது திகைத்து நின்ற சந்தகனை நோக்கி, "சந்தகா, நீயும் கண்டகமும் எனக்குப் பேருதவி செய்தீர்கள். இதை நான் என்றும் மறவேன். நம் உறவு இன்றோடு ஒழிந்தது" என்றார்

"அரசே, தாங்கள் சொல்வது இன்னதென எனக்கு விளங்கவில்லையே!" என்றான் சந்தகன்.

கௌதமர் தமது கழுத்திலிருந்த கண்டசரத்தைக் கழற்றிச் சந்தகன் கழுத்தில் அணிந்து, "சந்தகா, என் நன்றிக்கு அடையாளமாக நான் உனக்குக் கொடுத்த ஒரு நன்கொடையாக இருக்கட்டும் இந்தக் கண்டசரம்" என்றார்.

சந்தகன் அஞ்சி நடுங்கி, "அரசே, எளியேனுக்கு ஏற்குமோ இது" என்றான்.

"உனக்குத்தான் அது பொருந்தும்; எனக்குப் பொருந்தாது" என்று கூறிவிட்டுக் கௌதமர் தம் ஆபரணங்களையெல்லாம் கழற்றி அவனிடம் கொடுத்து "இவைகளையெல்லாம் நான் அன்புடன் கொடுத்தனுப்பியதாகச் சொல்லி என் தந்தையிடம் கொடுத்துவிடு. என்னிடத்தில் அவர் வைத்துள்ள ஆசை முழுவதையும் இன்றோடு மறக்கச் சொன்னதாகத் தெரிவி. இல்லறத்திலிருந்து துக்கக்கடலைக் கடக்க நெறி காணாமையால், அந்த நெறியைத் தேடிக் காணவே நான் பிரிந்தேன் என்று சொன்னதாகவும் சொல்" என்றார்.

சந்தகனுக்கு உண்மை தெளிவாக விளங்கிற்று. அவன், கௌதமர் கொடுத்த ஆபரணங்களைக் கையில் வாங்கியபடியே கண்ணீர் வடித்து, "அரசே, தங்கள் திருமுகத்தைப் பார்த்து வாழும் எங்களையெல்லாம் விட்டு, இவ்வளவு இளம்பிராயத்தில் தாங்கள் சந்நியாசம் கொள்ளவோ துணிந்தீர்கள்? இது தகுமா? தங்களைவிட்டால் எங்களுக்கு வேறு யார் கதி?" என்று பிரலாபித்தான்

கௌதமர் அவனை அன்பு கனிய நோக்கிப் புன்னகை செய்து, "சந்தகா, யார் யாருக்குக் கதி? ஈசன் திருவடியே எல்லோர்க்கும் கதி. நீ வருந்தாதே. துன்பக் கடலைவிட்டு நீங்கும் எனக்காகத் துக்கப்படாதே. துன்பக் கடலிற் கிடந்துழலும் மற்றவர்களுக்காக வேண்டுமானால் துக்கப்படு. வாழ்க்கை துக்கசாகரமாயுள்ளது என்பதை என்னைவிட நீ நன்றாய் அறிந்திருப்பாய். உலகில் பிணி மூப்புச் சாக்காடுகள் உண்டென்பதை உன்னால்தான் நான் அறிந்தேன். இந்தத் துக்க சாகரத்திலிருந்து கரையேறுவ தெப்படி? என் மனமார நான் பிரிந்துபோவதற்குத் துக்கிக்கிறாய். இவ்வாறில்லாமல் தெய்வச் செயலாய் நான் இறந்துபோனால் அப்பொழுது என்ன செய்வாய்? பாசத்தினால் உண்டாகும் இன்பம் நிலையானதன்று. ஆதலால், நீ கண்டகத்தை அழைத்துக்கொண்டு கபிலவாஸ்துவுக்குப் போ. 'கூடிய விரைவில் மூப்புப் பிணி சாக்காடுகளை வென்று திரும்பி வருவேன்; தவறினால் திரும்

பாதொழிவேன்' என்று நான் சொன்னதாக என் பிரஜை களுக்குச் சொல்" என்றார்.

சந்தகன் தேம்பித் தேம்பி அழுதுகொண்டு, "அரசே, தங்களைப் பிரிந்து நான் செல்லேன். நானும் தங்களோடு வரு கிறேன். என்மேல் கிருபை வைத்து என்னையும் தங்களோடு அழைத்துச் செல்லுங்கள்" என்றான்.

"சந்தகா, உன் அன்பு அவ்வளவு அதிகமானால் நீ கபிலைக் குச் சென்று நான் சொன்ன செய்திகளைத் தெரிவித்துவிட்டுத் திரும்பி வரலாம்" என்றார் கௌதமர்.

"தங்கள் திருவுள்ளம் அதுவானால், நான் என்ன செய் வேன்!" என்று கூறிச் சந்தகன் தலையிறங்கி நின்றான்.

கௌதமர் அவன் தோள்மீது கைவைத்து, "சந்தகா, உன் வருத்தத்தை நான் அறியாமலில்லை. நீ உன் மனத்தைச் சமாதானம் செய்துகொண்டு நான் சொன்னபடி செய்," என்று கூறிவிட்டுச் சந்தகன் இடுப்பிற் செருகியிருந்த சிறு வாள் ஒன்றை அவனிடமிருந்து வாங்கி அதனால் தமது நீண்ட கேசத்தை அறுத்து அதையும் அதில் அணிந்திருந்த இரத்தினாபரணத்தையும், தமக்கருகே ஓடிய அநோம நதியில் விட்டெறிந்தார். 'எல்லாம் ஒழிந்தன! துன்பக்கடலில், தப்பியோட வகையில்லாமல் நங்கூரம் பாய்ச்சிய மரக்கலம் போல, என்னை இறுகப் பிணித்திருந்த பாசச்சங்கிலிகளை அறுத்தெறிந்துவிட்டேன். நாடக வேடதாரிபோலப் பேதைகள் கண்டு களிக்க நான் கொண்டிருந்த கனகாத்தா பரண கோலங்களை ஒழித்துவிட்டேன். அழகென்று மயங்கி அருமையாய் வளர்த்து அலங்கரித்துவந்த, ஒன்றுக்கும் உதவாத கூந்தலையும் அறுத்தெறிந்துவிட்டேன். துன்பவீடாகிய இவ்வுடலின் அருவருப்பான தோற்றத்தை மறைக்க இவ் வளவு மென்மையும் பளபளப்புமுடைய பட்டாடையோ வேண்டும்! துறவியாய்ச் செல்லும் எனக்கு இந்த ஆடை தகுமோ! இதைக் களைந்தெறிந்துவிட்டுத் துறவியர்க்குரிய துவராடை யொன்றை உடுத்துக்கொள்ளவேணடும். வரும் போதே துவராடை ஒன்று சம்பாதித்துக்கொண்டு வாராமற் போனேனே! இங்கே அது எப்படிக் கிடைக்கும்' என்று சிந் தித்துக்கொண் டிருந்தார் கௌதமர்.

அப்பொழுது வேடன் ஒருவன் காவியுடை தரித்துக் கொண்டு அவ்வழியே வந்தான் 'இதுவும் தெய்வசங்கற்பமே. எனக்கு உதவிசெய்யத் தெய்வமேதான் இவ்வுருக்கொண்டு வந்ததுபோலும்' என்றெண்ணிக் கௌதமர் அவ் வேடனை அழைத்து, "ஐயா, நான் உடுத்தியிருக்கும் உடைகளை உமக்குத் தருகிறேன் இவைகளுக்குப் பிரதியாக உமது உடையை நீர் எனக்குத் தருவீரா?" என்று கேட்டார்.

வேடன் சந்தோஷித்து, "விலையுயர்ந்த தங்கள் பட்டுடைகளைப் பெற்றுக்கொண்டு, கேவலமான எனது காவியுடையைக் கொடுப்பதற்கு வருத்தமோ! இதோ தருகிறேன். பெற்றுக் கொள்ளுங்கள்" என்று சொல்லித் தன் காவியுடையைக் களைந்து கௌதமரிடம் கொடுத்தான் கௌதமர் அதை உவகையோடு ஏற்று உடுத்துக்கொண்டு, தமது அருமையான உடைகளைக் களைந்து வேடனிடம் கொடுத்துவிட்டார். வேடன், அவ்வுடைகளை வாங்கிக்கொண்டு 'இன்று விழித்த முகம் நல்ல முகம். இந்த ஜன்மத்தில் எனக்குக் கிடைப்பரிதான உயர்ந்த பட்டுடைகள் இன்று கிடைத்தன இவைகளை உடுத்துக்கொண்டு நான் என் மனைவி எதிர்சென்றால், அவள் என்னை ஓர் அரசன் என்றே எண்ணிவிடுவாள்' என்று தனக்குட் சொல்லிக்கொண்டே போய்விட்டான்.

சந்தகன் கௌதமரை மற இறங்கப் பார்த்து, "அரசே, காலையில் உடுத்த உடையை மாலையில் உடுக்க அருவருப்புறும் தாங்கள், ஒரு வேடன் உடுத்திய உடையை மனம் ஒப்பி எவ்வாறு உடுத்தீர்கள். பூவினும் மெல்லிய பட்டுடை தரித்த தங்கள் திருமேனி, காவி ஏறிய இந்த முரட்டுத் துணியையோ தரிப்பது!" என்று வருந்திக் கண்ணீர் விட்டான்.

"சந்தகா, அணியும் உடையுமான இந்த அற்பச் சடப் பொருள்களைப் பெரிதாக எண்ணி நீ மயங்குகிறாய். நீ மயங்குவது அதிசயமன்று நானே இதுகாறும் இவைகளில் மயங்கித்தானே இருந்திருக்கிறேன். இப்பொழுது எனக்கு அந்த மயக்கம் இல்லை. வீண் ஆடம்பரங்களான இவைகளில் நான் இனி மயங்கேன். அறிவோடு கூடிய ஆன்மாக்கள் துன்பத்தினின்று நீங்கும் வகை எதுவென்று காணப்போகிறேன்.

நீ கண்டகத்தை அழைத்துக்கொண்டு விரைந்து கபிலைக்குச் செல்" என்றார் கௌதமர்.

நடக்கும் அனைத்தையும் பார்த்துக்கொண்டு நின்ற கண்டகம் தன் எஜமானன் தன்னைவிட்டுச் செல்லப்போவதை அறிந்ததுபோலக் கௌதமர் பாதங்களை நக்கிற்று. கௌதமர் அன்போடு அதன் முதுகைத்தடவி, "என் அருமைக் கண்டகமே, வருந்தாதே உன் இனததாருக்குத் தம் எஜமானரிடத்தில் உள்ள பிரியத்தைவிட இன்னும அதிகமான பிரியம் உனக்கு உன் எஜமானனிடததில் இருக்கிறது. உன் உடம்பு வருந்த இதுகாறும் என்னைச் சுமநதுவநத வருத்தம் வீண்போகாது. நீ சநதோஷத்தோடு உன்னைப் பாதுகாக்கும் சந்தகனுடன் செல்" என்று கூறிவிட்டுச் சந்தகனை நோக்கி, "சந்தகா, நீ கண்டகத்தை அழைத்துக்கொண்டு போ" என்றார்.

சந்தகன் அதற்குமேலும இளவரசர் கட்டளையை நிறைவேற்றாமல் அங்கு நிற்பதற் கஞ்சிக் கண்டகத்தை அழைத்துக்கொண்டு, கௌதமரைத் திருமபித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றான் சிறிது தூரம சென்றதும், கண்டகம் அவனை விட்டுப் பிரிநதுபோய், ஒரு மரத்தண்டை திடீரென்று விழுந்து இறநது போயிற்று

அதைக் கண்ட சநதகன் மிகவும் மனம் வருந்தி, "ஐயோ' என் இளவரசரைத் துறவியாய்த் தனியே விட்டுப் பிரிந்து செல்லும் துயரம் போதாதென்றே, அவர் என்வசம் ஒப்புவித்த இந்த அருமைக் குதிரையும் இறநதது! தன் எஜமானனைப் பிரிந்து செல்லமாட்டாமல், இந்த மிருகம் உயிர்துறந்துவிட்டது வன்னெஞ்சனுகிய யானே, இன்னமும் உயிர்மீது ஆசைவைத்து, என் எஜமானர் பிரிவை அவர் உற்றருக்கு அறிவிக்க யமதூதன் போலச் செல்கிறேனே!" என்று புலம்பித் தேம்பித் தேம்பி அழுதுகொண்டே சென்றான்

'இளவரசர் துறந்து சென்ற செய்தியை அரசரிடத்தில் எப்படிக் கூறுவது! கூறினல், தமக்குத் தெரியாமல் இளவரசர் பேச்சைக்கேட்டு அவரைக் கொண்டுபோய் விட்டுவாலாமோ என்று கோபிப்பாரோ! அவர், அவர் தேவியார்,

மருமகளார், பிரஜைகள் என்னும் இவர்கள் அனைவர் துயரத்துக்கும நானன்ருே காரணமாகிறேன்!" என்று இவ்வாறெல்லாம் எண்ணி யெண்ணி அவன் மனம் குழம்பியது. அவன் களுண்டவன்போல் தன்னை மறந்து தளர்ந்து தள்ளாடிச் சென்ருன்



அதிகாரம்—15

## பிரிவாற்ருப் பெருந்துயரம்

சந்தகன் கபிலையம்பதியுட் புகுந்தபோது, நகர் அல்லோலகல்லோலமுற் றிருந்தது. முதியரும், இளைஞரும், ஆடவரும், மகளிரும், செல்வரும், வறிஞரும்—எல்லாரும்—வருந்திய மனத்தராய், வாடிய முகத்தராய் இங்குமங்கும் போய்க் கொண்டிருந்தனர். சந்தகன் அவர்களையெல்லாம் பார்த்து மனங்கலங்கி 'எல்லோருக்கும விஷயம் தெரிந்துவிட்டதுபோலிருக்கிறது!' என்று தனக்குள் எண்ணிக்கொண்டு அரண்மனையை நாடிச் சென்ருன். அரண்மனையை நெருங்க நெருங்க ஜனங்களின் கூட்டம் அதிகமா யிருந்தது.

அரண்மனைச் சேவகர் சிலர் தமக்குள் பேசிக்கொள்வது சந்தகன் செவிக்கெட்டியது.

"கோட்டைவாயிற் கதவு மூடியபடியே இருக்கிறதாமே!" என்ருன் ஒருவன்.

"வேறு எப்படிப் போயிருக்கக் கூடும!" என்ருன் மற்ெருருவன்.

"லாயத்திற் கண்டகத்தைக் காணும் என்கிருர்களே!" என்ருன் பின்ெனொருவன்.

"சந்தகனைக்கூடக் காணுமாம்" என்ருன் இன்ெனொருவன்.

"ஒருவன்கூடவா விழித்திராமற்போய்விடுவான்! மாயப்பொடி தூவியது போலன்ருே இருக்கிறது!" என்ருன் பிறெனொருவன்.

"ஊரே இருண்டு போயிற்றே! அடடா! இப்படிப்பட்ட இளவரசரை நாம் இனி எங்கே பார்க்கப் போகிருேம்!

அடடா! நாட்டுக்கு நடுநாயகம்! நகருக்கு ஆபரணம்! அரண்மனைக்கு அலங்காரம! சபைக்குச் சிங்காரம! சேர்ந்த வர்களுக்குச் சிந்தாமணி! போயிற்று, போயிற்று! கபில வாஸ்துவின் அழகு போயிற்று!" என்றான் ஒருவன்

இவைகளையெல்லாம் கேட்டுக்கொண்டே சந்தகன் உள் ளஉசலாடக் கால் பின்னிட, நெருங்கி நின்ற ஜனங்களுக் கிடையே புகுந்து அரண்மனையைக் குறுகிச் சென்றான அப்போது அரண்மனை ஏவலாளன் ஒருவன அவனைக் கண்டு, அவனிடம் சென்று, "சந்தகா, நீ எங்கே போயிருந்தாய்? உன்னைத் தேடிக்கொண்டிருந்தார்களே! நீ நம் இளவரசரைக் கண்டாயா?" என்றான்.

சந்தகன், "மகாராஜா அவர்களைப் பார்க்கவேண்டும் பார்த்துவிட்டு வந்து சொல்கிறேன், பொறு" என்று சொல்லி விட்டு அவனைத் திரும்பிப் பாராமல் நடந்தான்.

ஏவலாளன் அவனைத் தொடர்ந்து சென்று "நீ மகாராஜா வைப் பார்ப்பதெங்கே! அவர் அரண்மனையில் இல்லை" என்றான்

சந்தகன் திகைத்து நின்று, "அரண்மனையிலில்லையா! வேறு எங்கிருக்கிறார்?" என்று கேட்டான்.

"அரண்மனையில் வேலைக்காரர்கள் தவிர வேறெவரு மில்லை. மகாராஜா, மகாராணியார், மந்திரி முதலியவர்கள் எல்லாரும் இளவரசர் அரண்மனைக்குப் போயிருக்கிறார்கள். ஊரெல்லாம் குழம்பிக்கிடக்கிறது. நீ தூங்கி விழித்தவன் போல எங்கிருந்தோ வருகிறாயே! சங்கதி என்ன? இள வரசரைக் கண்டாயா?" என்றான் ஏவலாளன்.

"இளவரசரிடமிருந்துதான் நான் வருகிறேன் நீ தயவு செய்து பொறுத்திரு. நான் மகாராஜா அவர்களைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிவிட்டுப் பிறகு உனக்கு எல்லாவற்றை யும் சொல்கிறேன்" என்று சொல்லிவிட்டுச் சந்தகன இளவர சர் அரண்மனையை நாடிச் சென்றான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் 'இளவரசரைப்பற்றி ஏதோ செய்திகொண்டுவந்திருக்கிறான் சந்தகன்' என்னும் விஷயம்

எங்கும் பரவிவிட்டது. அதை யறிந்த ஜனங்கள் எல்லா ரும், சந்தகன் இளவரசர் அரண்மனைக்குப் போயிருப்ப துணர்ந்து, தாங்களும் திரண்டு கூடி அங்கே சென்றனர். கௌதமர் அரண்மனையைச் சுற்றி நெடுந்தூரம் வரையில் இடைவெளியின்றி ஜனங்கள் கூடிவிட்டனர்.

கௌதமரது அரண்மனையின் முன் கட்டில், ஒரு நாற் காலியிற் சாய்ந்த வண்ணமாய்ச் சுத்தோதனன் முகஞ்சோர்ந் திருந்தான். மந்திரி பிரதானி முதலிய ராஜாங்கத் துணைவர் பலரும் அவனைச் சூழ்ந்து, வாடிய முகத்தினராய் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் எல்லோரும் வாய் பூட்டிடப் பட்டாற்போல மௌனமுற்றிருந்ததால், வெளியே திரண் டிருந்த ஜனங்கள் உரக்கப்பேச அஞ்சி முணுமுணுவென்று மெல்லப்பேசும் சிறு சப்தமும் தெளிவாய்க் கேட்டது. இந் நிலையிலிருந்த அரண்மனையினுள்ளே சந்தகன் நுழைந்த போது, அவன் நெஞ்சம் தன் நிலையைவிட்டு நழுவிச் சோர்ந்து விழுவதுபோ லிருந்தது.

வெளியில் நின்றவர்கள் அனைவரும் அவன்மீதே தமது பார்வையைச் செலுத்தியிருந்தார்கள். சந்தகனது காலோசை கேட்டு, அரசனைச் சூழ்ந்திருந்த அமைச்சர் முதலிய பலரும் திரும்பிப் பார்த்தார்கள். அரசனும் தலைநிமிர்ந்து நோக்கிச் சந்தகனைக் கண்டு திடுக்கிட்டான். சந்தகன் அரசனைக் காண வும் காற்றால் மோதுண்டு விழும் மரம்போல, அரசன் முன் னிலையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தான். சுத்தோ தனன், தலை சாய்ந்து நெற்றியிற் கைவைத்துச் சிரத்தைத் தாங்கியவண்ணமாய்த் தன் எதிரே நெடுங்கிடையாகக் கிடக் கும் சந்தகனைப் பார்த்துக்கொண்டிருந்தான். ஒரு சில விநாடிகள் வரையில் சந்தகன் விழுந்த நிலையில் எழாமற் கிடந்தான். அதுகண்ட அமைச்சர், "சந்தகா, எழுந்திரு" என்றார்.

சந்தகன் முகத்தைத் துடைத்துக் கொண்டு மெல்ல எழுந்து கைகட்டி நின்றான். அவன் முகமெல்லாம் கண்ணீ ரால் ஈரமாயிருந்தது. அவன் கண்கள் சிவந்திருந்தன. 'இள வரசரைப்பற்றி இவன் ஏதோ துக்கச் செய்தி கொண்டுவந் திருக்கிறான்' என்பதைக் குறிப்பால் அறிந்துகொண்ட மந்

திரியார், அவனை நோக்கி, "சந்தகா, இளவரசரைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? இளவரசரை நீ பார்த்தாயா? அவர் எங்கே?" என்று கேட்டார்.

"இளவரசர் நம் நாட்டைவிட்டு நெடுந்தூரம் போய் விட்டார்" என்றான் சந்தகன்.

மந்திரியார் மிகவும் அதிசயத்தோடு, "எப்பொழுது போனார்? அவர் போனதை நீ பார்த்தாயா?" என்று கேட்டார்.

"நேற்றிரவே இவ்விடம்விட்டுப் புறப்பட்டுவிட்டார் என்னையும் அவர் தம்முடன் அழைத்துச் சென்றார். நான் அவருடன் போனேன்," என்றான் சந்தகன்

"ஆனால் அவரைவிட்டு நீ மட்டும் ஏன் திரும்பி வந்தாய்? அவர் என்ன காரியமாய்ப் போயிருக்கிறார்?" என்று வினவினார் மந்திரியார்

சந்தகன் உடல் சிலிர்க்க, "அவர் தாம் சென்ற செய்தியைச் சொல்லிவரும்படி என்னை அனுப்பிவிட்டார் அவர் களைந்து கொடுத்த ஆபரணங்களெல்லாம் இதோ இருக்கின்றன," என்று கூறிக் தன் மடியிலிருந்த ஆபரணங்களை எடுத்து அரசனெதிர் நீட்டினான்.

அரசன் அவைகளை வாங்காது சந்தகனையே உற்றுப் பார்த்துக்கொண்டு மௌனமாயிருந்தான். அது கண்ட மந்திரியார் சந்தகன் வைத்திருந்த ஆபரணங்களைத் தாம் வாங்கிக்கொண்டு, "ஏன் இவைகளை இளவரசர் உன்னிடம் கொடுத்தனுப்பினார்?" என்று கேட்டார்.

"இவைகளை மகாராஜா அவர்களிடம் ஒப்புவித்துவிடும்படி கொடுத்தார். அவர் தமது பட்டுடைகளையும் களைந்து விட்டுக் காவியுடை உடுத்துக்கொண்டு சந்நியாசியாய்விட்டார்" என்றான் சந்தகன்.

அதைக் கேட்டதும் சுத்தோதனன், "ஓ, சித்தார்த்தா! செய்துவிட்டனையா மோசம்!" என்று அலறித் தான் அமர்ந்திருந்த நாற்காலியோடு நிலத்திற் சாய்ந்து மூர்ச்சித்தான்.

உடனே அருகிருந்த மந்திரி பிரதானிகள் முதலியோர் அவனைத் தாங்கி எடுத்துத் தம்மீது சார்த்திக்கொண்டு சோக மாற்றினர். சில விநாடிகள் சென்றதும் சுத்தோதனன் சோகம் நீங்கி எதிரே சோர்ந்து நின்ற சந்தகனை நோக்கி, "அடா

பாவி! என் மகனைக்கொண்டுபோன யமதூதா! என்னையும் கொண்டுபோகவோ திரும்பி வந்தாய்!" என்று சொல்லிவிட்டுப் பிறகு மேல்நோக்கி, "அந்தோ! கடவுளே! என் வயிறெரியக் காண்பதற்கோ எனக்கு மகப்பேறு கொடுத்தாய்! மகவில்லை என்று வருந்திய எனக்கு மகவாய் வந்து மகிழ்ச்சி விளைத்தது இதற்குத்தானே! என் சித்தார்த்தா! என் செல்வா! இத்தனை நாள் நான் உன்னைப் போற்றிப் பாதுகாத்ததன் பலன் இது தானே! தள்ளாத பருவத்தில் என்னைக் கைவிட்டாயே! இது தகுமா! நான் மாளும் வரையில் நீ பொறுத்திருக்கக் கூடாதா! உனக்குப் பட்டங்கட்டிப் பார்க்கவும் கொடுத்துவையாத பாவி யானேனே! மைந்தா! உன் மனம் கல்லா, இரும்பா! என்னைப் பாராவிட்டாலும் உன் மகனைப் பார்த்திருக்கக் கூடாதா! இன்று பிறந்த பச்சைப் பாலகனைப் பிரிந்து செல்ல எப்படியடா துணிந்தாய்! 'கடந்த ஞானியும் கடப்பரோமக்கள்மேற் காதல்' என்பார்களே! நீ எப்படி ஒரு பாவமும் அறியாத உன் பாலகன்மீது ஆசையற்றாய்! கண்மணீ, உன்னைப்போல நானும் ஆசையற்றவனாயிருப்பேன் என்று எண்ணினையோ! ஏ, மாயாதேவி! நீ மிகவும் புண்ணியவதி! உன் புத்திரன் செய்த கொடுமையைப் பாராமற் போய்விட்டாய்! நானே பாவியானேன்! மாயா, உன்னைப் பிரிந்து உயிர்தரித்திருந்த வன்னெஞ்சனல்லனோ நான்! அதனால்தான் என் மகனைப் பிரிந்து இன்னமும் உயிர்தரித்திருக்கின்றேன்!" என்று இவ் வாறெல்லாம் பலபல சொல்லிப் புலம்பினான்.

மந்திரி சிறிதுநேரம் மௌனமாயிருந்து பிறகு சுத்தோதனனை நோக்கி "அரசே, இளவரசர் துறவியாய்ச் சென்றார் என்றது கேட்டுத் தாங்கள் இவ்வாறு வருந்தலாமோ? இப்பொழுது ஒன்றும் முழுகிப்போய்விடவில்லை. மயான வைராக்கியம், புராண வைராக்கியம் என்று கேட்டதில்லையா? இந்த வைராக்கியமெல்லாம் நெடுநாள் நில்லா இளவரசர் சீக்கிரம் திரும்பி வந்துவிடுவார். நான் போய் எப்படியாவது அவரைக் கண்டு அவர் மனத்தைத் திருப்பிக் கொண்டுவந்து விடுகிறேன். தாங்கள் தைரியமாயிருங்கள் தாங்களே இப்படிப் பாதவித்தால் பெண்பாலார் எப்படிப் பொறுத்திருப்பார்கள்?" என்று ஆறுதல் கூறினார்.

சுத்தோதனன் ஒருவாறு மனந்தேறி எழுந்து, "ஆம், அவனையே தனக்கு உயிராய் எண்ணியிருக்கும் யசோதரை இதை அறிந்தால் அவள் எவ்வாறு பொறுப்பாள்! கௌதமி என்ன பாடு படுவாள்! சித்தார்த்தா, நீ செய்தது கொடுமை! பெருங்கொடுமை! நீயே குழவியாய் வடிவெடுத்து வந்தது போலிருக்கும் உன் பாலகனையும் கருதிப் பாராமற் போனாயே! உன் முகத்தைக் காணமுடியாத நான் உன் மகன் முகத்தை யாவது பார்த்துக்கொண்டிருக்கிறேன்" என்று கூறி அந்தப் புரத்தை நாடிச் சென்றான்.

சுத்தோதனன் அங்குச் செல்வதற்கு முன்னமே, கௌதமன் துறவியாய்ச் சென்ற செய்தி, அவனைக் சானுமே என்று கவற்சியுற்று அந்தப்புரத்திலிருந்த யசோதரைக்கும் கௌதமிக்கும் எட்டிவிட்டது. அதைக் கேட்டு அவர்கள் துடி துடித்துப் பிரலாபித்துக்கொண்டிருக்கையில் சுத்தோதனன் அங்கே சென்றான். அவனைக் கண்டதும் அவர்கள் ஓவென்றலறி விழுந்தார்கள்.

கௌதமி எழுந்து வந்து சுத்தோதனனைக் கட்டிக் கொண்டு, "நாதா, நான் என் செய்வேன்! ஆளப்பிறந்த என் செல்வன் ஆண்டியாகவோ செல்லவேண்டும்! பாராள் வானென்று பாலூட்டி வளர்த்தேனே! ஊராள்வானென்று உணவூட்டி வளர்த்தேனே! என் செல்வா, நாடும் நகரும் உனக்கிருக்கக் காடுங் கரம்பும் நடக்கத் தலைவிதியா! அடா, என் செல்வமே! மண்மீது படிந்தறியாத உன் மலர்ப் பாதங்கள், கல்மீதும் முள்மீதும் நடந்தால் வருந்தாவோ? அறு சுவை யுணவும் சிறிது சுவை தப்பினால் உண்ணமாட்டாயே! காட்டில் என்ன உணவு கொள்வாயடா என் கண்மணீ! கோடைக்கொரு மாளிகை, மழைக்கொரு மாளிகை, பனிக் கொரு மாளிகை என மூன்று மாளிகைகள் உனக் கென்று கட்டியிருக்க, இருக்க இடமற்றவன்போல் எங்கடா சென்றாய், என் செல்வமே! நான் இங்கே சுகமாயிருக்க, நீ தாயற்ற பிள்ளைபோல் தங்க இடமின்றித் தரிக்கத் துணி யின்றி வேளைக் குணவின்றி எங்கு நின்று எவ்வாறு தவிக்கி றாயோ! ஐயோ! மைந்தா, வெய்யிலின் வெப்பத்தை எப்படிப் பொறுப்பாய்! குளிரின் கொடுமையை எங்ஙனம் சகிப்பாய்!

மழைக்கு எங்கே ஒதுங்குவாய்!" என்று பலபல சொல்லிப் புலம்பினாள்.

சுத்தோதனன் அவள் பிடியினின்று தன்னை விடுவித்துக் கொண்டு, "கௌதமி, சித்தார்த்தன் என்னையும் உன்னையும் மட்டுமா தவிக்கவிட்டான்! தன் மனைவியையும் மைந்தனையும் கூடவன்றோ தவிக்கவிட்டுச் சென்றான்! அதோ பார் யசோதரை வேரற்ற கொடிபோலத் துவண்டு கிடக்கிறாள்!" என்று சொல்லி மஞ்சத்தில் மூர்ச்சித்துக் கிடந்த யசோதரையிடம் சென்றமர்ந்து, கண்ணீர் ஒழுக, "அம்மா, யசோதரை! வருந்தாதே. உனக்குப் பிள்ளை பிறக்கவும், உன் புருஷன் துறக்கவும் விதியிருந்தால் யார் அதைத் தடுக்கக் கூடும்!" என்று அவளைத் தேற்றினான்.

யசோதரை படுக்கையினின்று புரண்டு திரும்பிக் கண் விழித்துத் தன் மாமனைக் கண்டதும், நாணறுந்த வில்போலத் துள்ளித் துடித்தெழுந்து "ஓ, மாமா!" என்று அலறி விழுந்தாள். சுத்தோதனன், முகத்தை மூடிக்கொண்டு கதறிப் பின் யசோதரையை நோக்கி, "வருந்தாதே, அம்மா. என்ன செய்வது! குழந்தை பிறந்த வேளை அப்படிப்பட்டது. நாம் செய்த தீவினை அப்படிப்பட்டது! யாரை நொந்து என்ன பயன்!" என்றான்.

யசோதரை தன் அருகே கிடந்த குழந்தையை நோக்கி, "என் கண்மணி, நீ செய்த பாவமோடா, உன் தந்தை நீ பிறந்த அன்றே உன்னையும், உன்னைப் பெற்ற என்னையும் துறந்து சென்றார்! தமது பிரதி சாயலாக இருக்கும் உன் திருமுகத்தைப் பார்த்தபிறகும், எப்படியடா அவர் உன்னை விட்டுச் செல்ல மனந்துணிந்தார்! நாதா, அடியாளை இப்படியும் வஞ்சிக்கலாமோ! நான் கண்ட கனவு மெய்யாயிற்றே! கனவுக்குக் கலங்கியபோது கலங்காதே என்று தைரியம் சொன்னீர்களே! இப்பொழுது அந்த அருளை மறந்தீர்களோ! பிராணேசா, தாய் தந்தையரை விட்டுத் தங்களையே பற்றாகப் பற்றியிருந்த என்னைப் பதறவிட்டுப் பிரிந்து செல்லலாமோ! தங்களையன்றி வேறு பற்றில்லாத நான், சர்வ சுகங்களோடும் இங்கிருக்கத் தாங்கள், சுகங்களனைத்தையும் துறந்து காட்டுக்

குச் செல்வதழகோ! யாருமற்ற காட்டில், தங்கள் குறிப் பறிந்து பணிவிடைசெய்வார் எவர்! ஆபரணங்கள் உறுத்து வது பொறாத தங்கள் பொன்மேனியிற் புழுதியோ படிவது! பஞ்சணையிற் படுக்கும் தங்கள் அருமைச் சரீரம் புற்றரையி லும கற்றரையிலுமோ படுப்பது! காதலா, அருள் கனியும் தங்கள் மலர்க்கண்கள், என்னைக் கடைக்கணிப்பதை மறந் தனவோ! மழைநோக்கி வாழும் பயிர் போல் தங்கள் முகம் நோக்கி வாழும் என்னை வெறுத்துச் செல்ல, யான் புரிந்த குற்றம் யாது!" என்றிவ்வாறெல்லாம் பிரலாபித்தனள்

கௌதமி அவளருகே சென்று, "அம்மா, யசோதரை, உன் உடம்பு நெகிழ்ந்திருக்கிறது. நீ மனம் வருந்தி உடம் பைக் கெடுத்துக் கொள்ளாதே. குழந்தைக்கு ஆகாது அதன் முகத்தைப் பார்த்து ஆறியிரு" என்று ஆறுதல் கூறினாள்

அந்தப்புரத்தில் இவர்கள் இவ்வாறு வருந்துவது தெரிந்து, மாளிகையைச் சூழ்ந்திருந்த பிரஜைகள் அதை வரும், "எங்கள் இளவரசர் எங்களை விட்டுப் பிக்ஷுவாகவோ சென்றார்!" என்று வருந்தி ஓவென்றலறி அழுதார்கள். அவர்கள் அழுகை யொலி, சமுத்திர கோஷம் போல நகரெங் கும் நிறைந்தது கபிலைமா நகரம் முழுவதும் கலங்கியது. அக் கலக்கம் சிறிது ஓய்ந்த பிறகு, இராஜ புரோகிதர் சுத்தோ தனனிடம் சென்று, "தாங்கள் வருந்தாதீர்கள். நான் சென்று நமது இளவரசரைத் தேடிக் கண்டு, கபிலைநகரின் கலக்கத்தை யெல்லாம் சொல்லி, அவர் மனத்தைத் திருப்பி, விரைவில் அவரை இங்கழைத்து வருகிறேன்" என்று கூறிவிட்டு மந்திரியோடு தாமும் புறப்பட்டு, கௌதமரைத் தேடிச் சென்றார்.

அவர்கள் இருவரும் தம் நாட்டெல்லையைக் கடந்து சென்று பலவிடங்களிலும் கௌதமரைத் தேடிக் கடைசியில், அராளராமர் என்னும் ஒரு முனிவரது தவச்சாலைக் கருகே அவரைக் கண்டனர். கௌதமர், கோலமும் உருவும் வேறு பட்டு ஒரு பிக்ஷுவைப்போல் விளங்கினார். சென்றவர்கள் இருவரும் கௌதமரை வணங்கி, தந்தையும் தாயும் மனைவி யும் பிரஜைகளும் படும் பாட்டைச் சொல்லி, அவரை நகர்க்கு

வரும்படி மிகவும் வருந்தி அழைத்தனர். கௌதமர் ஒரே பிடிவாதமாய், "என் கருத்து முற்றுப்பெற்றாலொழிய நான் நகர்க்கு மீளேன்" என்று கூறி அவர்களை அனுப்பிவிட்டார்.



அதிகாரம்—16

## த தா க த ர்.

நகருக்குத் திரும்பிச் செல்ல மறுத்து, இராஜ புரோகிதரையும் மந்திரியையும் அனுப்பிய பிறகு, கௌதமர் பிக்ஷை எடுப்பதற்காக இராஜகிருக நகரத்தை யடைந்தார். அச் சமயம், அந்த நகரத்தரசன் பிம்பஸாரன் என்பான், அநேக பசுக்களை வதைத்துப் பெரிய யாகம் ஒன்று செய்துகொண்டிருந்தான். உயிர்கள் அடையும் துன்பத்தை நீக்க உபாயம் ஏது என்பதைப் பற்றியே இடைவிடாது சிந்தித்துக்கொண்டிருந்த கௌதமர், அந்த யாகத்தைப்பற்றிக் கேள்விப்பட்டு, நெஞ்சந் துடித்து, அவ்வியாகத்தைத் தடுப்பதே கருத்தாக நேரே யாகசாலைக்குச் சென்றார். அங்கே, பிராமணர்கள் பலர் மந்திரமோதி யாகத்தீ வளர்த்துக்கொண்டிருக்க, மிகுந்த ஆரவாரச் சடங்குகளுடனே யாதொரு பாவமும் செய்தறியாத பசுக்கள் பல கொல்லப்படுவதற்குச் சித்தமாய்க் கட்டுண்டிருக்க, அனைத்தையும் அருவருப்பின்றி பார்த்துக் கொண்டு அங்கிருந்த அரசன் பிம்பஸாரனைக் கௌதமர் கண்டார். பிம்பஸாரனும் கௌதமரைக் கண்டு, அவரது பிக்ஷுக்கோலத்தை மதித்து அவரை எதிர்கொண்டு வரவேற்று உபசரித்தான். கௌதமர் அவன் உபசாரத்தைப் பொருட்படுத்தாது, "புரவலனாகிய நீ பிற உயிர்களைப் புரப்பதன்றி அழிப்பது தருமமோ! கோஹத்தியாகிய பாவத்தைச் செய்தோ நீ புண்ணியத்தைப் பெறப்போகிறாய்! கடவுள் படைத்த உயிர்களைக் கொன்றோ நீ கடவுளை மகிழ்விக்கப் போகிறாய்! பிறவுயிர்களைக் கொல்வதொழிப்பாயாயின் அதுவே நீ எனக்குச் செய்யும் சிறந்த உபசாரம்" என்று கூறிக் கொல்லாமையின் சிறப்பை அவனுக்கு விளங்க விரித்துரைத்தார். பிம்பஸாரன் கௌதமர் உரையால் உணர்வுதிரிந்து, அக்கணமே அங்கிருந்த பசுக்களையெல்லாம் அவிழ்த்துவிட்டு யாகத்தில் உயிர்க்கொலைசெய்வதை ஒழித்தான். அதுமட்டு

மன்று. அன்று தொடங்கி அவன் கொல்லாமை மேற்கொண்டொழுகுவதாக உறுதி செய்து, தனக்கு நல்லறிவூட்டிய கௌதமரைச் சிலநாட்கள் தன் அரண்மனையில இருக்கும்படி வேண்டினன். கௌதமர் தாம் துறவியாய்ப் புறப்பட்ட கருத்தை அவனுக்குக் கூறி, "உண்மை உணர்ந்தபின்புதான் இவ்விடம் வருவேன்" என்றுரைத்துச் சென்றுவிட்டார்.

உண்மை உணர்வதே நோக்கமாகக் கௌதமர் முதலில் ஆராளராம முனிவரையும், பின்னர் வேறொரு முனிவரையும் ஆசிரியாராகவடைந்து, நெடுநாள் அவர்கள் உபதேச நெறியில் ஒழுகிவந்தார். ஆயினும் உண்மை புலப்படவில்லை அதன் மேல் அவர்களை நீங்கிச் சென்று, சில தவசிகளை அடைந்து, அவர்கள் பேசசைக்கேட்டுப் பட்டினியிருந்து நோன்பு நோற்று அருந்தவம் புரிவாராயினர் இவ்வாறு பலநாள் தவம்புரியவே, உணவின்றி உடல் இளைத்துக் களைப்புமே லிட்டு, நிற்கவும் வலிமையின்றி மூர்ச்சித்து விழுந்து விட்டார். உடனிருந்த தவசிகள் கௌதமர் இறந்தாரென்றே நிச்சயித்தார்கள். ஆயினும், சிறிதுபொழுது சென்றபின் கௌதமர் மூர்ச்சை தெளிந்து எழுந்து 'இவ்வாறு உடலை வருத்திச் செய்யும் தவத்தால் யாதொரு பலனும் இல்லை' என்று எண்ணிக் கிடைத்த உணவை உண்ணத் தொடங்கினர். அதுகண்டு அவருடனிருந்த தவசிகள், 'இவர் நோன்பு தவறினர்' என்று அவர்மீது வெறுப்புற்று, அவரை விட்டு நீங்கி வேறிடம் சென்றார்கள்

அப்பால் கௌதமரும் அவ்விடம் விட்டு நீங்கி நைரஞ்சனை என்னும் ஆற்றின் கரையை அடைந்து, ஓர் அரசமரத் தடியிலிருந்து, "நான் உண்மை அறிந்து, துக்கநிவாரண மார்க்கத்தைக் கண்டுபிடிப்பதற்காகத் துறவுபூண்டு ஆறு வருஷங்களாயின. இன்னமும் உண்மையை அறிந்தபாடில்லை. இதுகாறும் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. இனி நோன்பிலும் தவத்திலும் காலத்தை வீணே கழிப்பது கூடாது. உண்மை அறிவதிலேயே நாட்டமாய், மனத்தைப் பலவழிகளில் ஓடவிடாது ஒருமுகப்படுத்தி ஆராய்ச்சி செய்வதே சிறந்தது" என்று சிந்தித்து, அவ்வாறே ஆராய்ச்சி செய்வாராயினர். ஆராய்ச்சியிலேயே மனம் முழுவதும் சென்றிருந்ததால், அவர் ஊணையும் மறந்தார் ; உறக்கத்தை

யும் மறந்தார்; பகல் இரவாகி, இரவு பகலாகி நாட்கள் ஒவ்வொன்ருய்ச் செல்வதையும் மறந்தார். பதினெட்டு நாட்கள் இங்ஙனம் ஊணுறக்கமின்றி ஆராய்ச்சியிலேயே மூழ்கியிருந்தார்.

இருபத்தொன்பதாம்நாட் காலையில், தன் வழிபடு தெய்வத்திற்கு நிவேதனம் செய்வதற்காகப் பாலன்னம எடுத்துக்கொண்டு, ஓர் இடைப்பெண் அவ்வழியே வந்தாள். அவள் பெயர் ஸுஜாதை. அரச மரத்தடியில் கண்ணை மூடிக்கொண்டு சிந்தனையிலிருக்கும் கௌதமரை அவள் கண்டு, 'யாரோ துறவி, பட்டினியுற்றவர்போல் உடல் வாடியிருக்கிறார்' என்று எண்ணி மனமிரங்கி, தான் கொண்டுவந்த பாலன்னத்தை அவருக்குக் கொடுத்துச் சென்ருள்

ஸுஜாதை கொடுத்த உணவை உண்டபின் கௌதமர் தெளிவுற்று விளங்கினர். அன்றிரவே அவருக்கு உண்மை உணர்ச்சி உண்டாய்விட்டது முதலில் அவா 'முற்பிறப்பிற் பாவஞ்செய்தோர் இப்பிறப்பில் வருந்துதலையும், சீவகாருணியம் பூண்டோர் இன்புற்று வாழ்தலையும்' தமது ஞானக் கண்ணுல் அறிந்தார். பிறகு, பிணி, மூப்பு, இறப் பாதிய துன்பங்களுக்குக் காரணம் பிறப்பு என்றும், பிறப்புக்குக் காரணம் வினை என்றும், வினைக்குக் காரணம் பற்று என்றும், பற்றுக்குக் காரணம ஆசை என்றும், ஆசைக்குக் காரணம் அனுபவம் என்றும், அனுபவத்துக்குக் காரணம் ஸ்பரிசம் என்றும், ஸ்பரிசததுக்குக் காரணம் புலன்கள் என்றும், புலன்களுக்குக் காரணம் உள்ளமும் உடலும் என்றும், உள்ளத்துக்கும் உடலுக்கும் காரணம் உணர்ச்சி என்றும், உணர்ச்சிக்குக் காரணம் செய்கை என்றும, செய்கைக்குக் காரணம் பேதைமை என்றும் உணர்ந்தார். உடனே துன்பங்களுக்கு மூலகாரணம் இன்னதென விளங்கியது பேதைமையே பிறவியாகிய மரத்துக்கு வித்து. அம்மரத்தின் பயன்களே, பிணி மூப்பாதிய துன்பங்கள் பிறவியாகிய இம்மரம்,

> 'பேதைமை யென்னும் வித்திற் பிறந்துபின் வினைகளென்னும்
> வேதனை மரங்கள் நாறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
> காதலும் களிப்பு மென்னும் கவடுவிட் டவலம் பூத்து
> மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்'

என்று அறிந்ததும், பேதைமையாகிய வேரை அழித்தால், பிறவிமரம் பட்டு, நோய் மூப்பு இறப்பாதிய துன்பக்கனிகள் அழியும் என்னும் உண்மை தெளிவாயிற்று.

ஒன்றோடொன்று காரணகாரியத் தொடர்ச்சியாய் வரும் பேதைமை, செய்கை, உணர்ச்சி, மனத்தோடுகூடிய உடம்பு, புலன்கள், ஸ்பரிசம், அனுபவம், ஆசை, பற்று, பிறப்பு, பிணி மூப்பு மரணமாதிய துன்பங்கள் என்னும்—இந்தப் பன்னிரண்டும் **துவாதசநிதானங்கள்** எனப்படும்.

'உலகத்தில் துக்கம் இருக்கிறது; அதற்கு உற்பத்தி ஸ்தானம் கண்டோம்; ஆகையால் அதை அழித்துவிடுதல் கூடும்' என்ற இந்த மூன்று உண்மைகளையும் கௌதமர் கண்டார். இவற்றோடு துக்கத்தை அழிப்பதற்குரிய மார்க்கமும் அவருக்குத் தோற்றியது. துக்கம், துக்கோற்பத்தி, துக்கநிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்னும் இந்த நான்கும் **சத்திய சதுஷ்டயம்** எனப்படும்.

கௌதமருக்குத் தோற்றிய துக்க நிவாரண மார்க்கம் எட்டு. அவையாவன, நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்து ஓர் தலைப்பாடு—என்பவை.

இவ்வாறெல்லாம், துக்கோற்பத்திஞானமும் துக்கநிவாரண மார்க்கமும் சிறிது சிறிதாக விளங்கி, கௌதமருக்குப் பூரண ஞானோதயமாகவும், உலகைச் சூழ்ந்திருந்த இருள் நீங்க, சூரியோதயமாயிற்று பொழுது விடிந்தது. மரங்கள் மலர்ந்தன பக்ஷிகள் இன்னிசை பாடிப் பறந்தன. நன்னிமித்தங்கள் பலவும் உண்டாயின. கௌதமர், "நான் விரும்பியதை அடைந்தேன்" என்று அகங்களித்தார். அப்பொழுது, "கவலையால் மெலிகின்ற மனிதர்மேல் இரக்கம் வை; உலகத்தார் தமது பயனையே கருதி உழைக்கின்றனர்; பிறவுயிர்களைக் காப்பதில் கருத்திலர்; எல்லோர்க்கும் தருமோபதேசம் செய்து அத் தீய வழியினை மாற்று" என்று கடவுளே தமக்குக் கட்டளையிடுவது போலக் கௌதமருக்கு ஓர் உணர்ச்சியுண்டாயிற்று. கௌதமர் அதுகண்டு மகிழ்ந்து, தாம் அறிந்த உண்மையை உலகிற் பரவச் செய்வதாக உறுதி கொண்டார்.

அதுமுதல் கௌதமருக்கு, ததாகதர், புத்தர், ஜினர் முதலிய காரணப் பெயர்கள் வழங்குவன வாயின. உலகத்தில் பாவம் பெருகிப் புண்ணியம் குறைந்த போதெல்லாம், உயிர்களை நல்வழிப் படுத்த, புத்த தேவர் அவதரிப்பார் என்பது பௌத்தநூற் றுணிபு அங்ஙனம் அவதரிக்கும் புத்த தேவர்களில் ஒருவராவர் கௌதம கோத்திரத்திற் பிறந்த இவர். ஆனது பற்றி இவரைக் கௌதமபுத்தர் எனப் பிற் காலத்தார் வழங்கலாயினர். இவர் புத்தராக வெளிப்பட்ட பிறகு, இவர் உபதேச நெறியில் நின்ற இவரது சிஷர்கள் இவரைத் 'ததாகதர்' என்றே வழங்கி வந்ததாகத் தெரிகிறது.

கௌதமபுத்தர், ததாகதராகப் பலவிடங்களிலும் சென்று தாம் கண்ட உண்மையைப் பிரசங்கித்து, தம் குடும்பத்தார் உட்பட, பல அரச வம்சங்களையும், ஆயிரக் கணக்கான ஜனங்களையும் தம் வழியில் திருப்பி, இன்று வரையில் நிலைத்து நிற்கும் ஒரு பெரிய மதத்தை ஸ்தாபித்து விட்டுத் தமது எண்பதாவது வயதில் நிருவாண மடைந்தார். அன்று ஈசான சகாப்தம் 148 ஆம் வருஷம் வைகாசி மாதம் பூர்ணிமையும் விசாக நக்ஷத்திரமும் கூடிய செவ்வாய்க் கிழமை என்பர்.

அவர் தமது இருபத் தொன்பதாவது வயதில், துறவு பூண்டு வெளிப்பட்டு, முப்பத்தாறுவது வயதில் ஞான உணர்ச்சி பெற்றுத் ததாகதராகி, ஊரூர்தோறும் சென்று 44 வருஷ காலம் தமது தர்மத்தைப் பிரசங்கித்துப் பௌத்த சங்கத்தை ஸ்தாபித்த வரலாறு ஒரு தனி நூலாதற்குரிய அருமையும் பெருமையும் உடையது.

உலகத்திலுள்ள மக்களில் ஒரு சிறிது குறையக் கால் பாகத்தார், இன்றளவும் அவரை,

> 'இருட்பார வினைநீக்கி எவ்வுயிர்க்கும் காவலென
> அருட்பாரந் தனிசுமந்த அன்றுமுத லின்றளவும்
> மதுவொன்று மலரடிக்கீழ் வந்தடைந்தோர் யாவர்க்கும்
> பொதுவன்றி நினக்குரித்தோ புண்ணிய,நின் திருமேனி'

என்று போற்றி வழிபட்டு வருகிறார்களென்றால் அவர் பெருமை அளவிடுதற்குரியதோ!

இந்நூலில் உள்ள

# செய்யுட்களின் முதற்குறிப்பகராதி

இந்நூலில் உள்ள

# செய்யுட்களின் அரும்பத உரை



பக்கம்—2. 'மூன்றான்' என்னும் செய்யுள். குண்டலகேசி.

**மூன் தான்** – ஆதியில்தானே தான்; **முடிவு எய்துகாறும்** – (ஆயுள்) முடிவடையும் வரையில். **ஊன்றுனும் உள்ளான்** – ஒன்று கூட விரும்பாதவன் **உறுதிக்கு உழந்தான்**–நன்மையுண்டாக முயன்றவன். **சரண்நங்களன்றே**–நமக்கு அடைக்கலமன்றோ 'நங்கள் சரணன்றே' என மொழிமாற்றிக்கொள்க

பக்கம்—9. 'மறந்து மழை' என்னும் செய்யுள் மணிமேகலை.

**மழை மறந்தும் மறு**–மழை, மறந்துகூடத் தான் பெய்யவேண்டிய முறைமைப்படி பெய்ய மறுக்காத. **உரவோர்**–அறிஞர். **கரவு அரும்**–மறைத்தற்கு அருமையான–மறைக்கமுடியாத. ('மழைவறு' 'மழை மாறு'–பாடபேதங்கள்).

பக்கம்—20. 'பாலுக்கு' என்னும் செய்யுள் தனிப்பாடல்.

'குத்தித் தைத்த காலுக்குத் தோற்செருப்பு'–'காலுக்குக் குத்தித் தைத்த தோற்செருப்பு' என மொழிமாற்றிப் பொருள்கொள்க. '**விதனம்**'–விசனம்; சகரம் தகரமானது போலி.

பக்கம்—32. 'உற்றது' என்னும் செய்யுள். கம்பராமாயணம்.

**கோளார்**–வல்லமையுடையவா; (கோள்–வல்லமை). **வினையின்**–பூர்வஜன்ம வினைப்பயனுல். **ஆற்றும் பேற்றியர்**–செய்யும் தன்மையர். **நீரார்**–தன்மையுடையவர்.

பக்கம்—36. 'பெறுமவற்றுள்' என்னும் செய்யுள். திருக்குறள்.

**பெறும் அவற்றுள்** – (ஒருவன்) பெறும் பேறுகளுள் **அறிவு அறிந்த**–அறியவேண்டியவற்றை அறிந்த; (அறிய வேண்டியவற்றை அறிதற்கு உரிய எனலுமாம். இது துணிவுபற்றி எதிர் காலத்தை இறந்த காலமாகக் கூறியதாம். நன்னூல். பொது–சூ. 33). **அறிவதில்லை**–மதிப்பதில்லை

பக்கம்—36. 'கல்லா' என்னும் செய்யுள். வில்லிபாரதம்.

**கனி ஊறல்** – இனிய எச்சில்; (ஊறல்–நாவில் ஊறும் நீர்). **மல் ஆர்**–வலிமை பொருந்திய.

பக்கம்—37. 'வில்லினர்' என்னும் செய்யுள். கம்பராமாயணம்.

வெறித்த—நெருங்கிய. அழிந்து – தோற்கச்செய்து. மருங்கு – பக்கத்தில். மாப்பிடி—பெண் யானை புல்லிய—தழுவிய. களிறு—ஆண் யானை.

பக்கம்—38. 'ஊடிய' 'மந்திரத்த' என்னும் செய்யுட்கள். கம்ப ராமாயணம்.

ஊடிய – கோபங்கொண்ட. உறாத – இணக்கமில்லாத. நீடிய உயிர்ப்பு—பெருமூச்சு. தோடு அவிழ்—இதழ்விரிந்த (மலர்களாலான). கோதை—மாலை.

ஓதை—ஓசை; (சகரத்துக்குத் தகரம் போலி). வலம்புரி—வலம் புரிச் சங்கம். ஆசி—ஆசீர்வாதம் ஆர்ந்து—நிறைந்து. கந்து—யானை கட்டும் தறி. கோலி—(தறியை) முறிக்கும். கடிகையர் – மங்கலப் பாடகர். கவிதை—பாட்டு. இந்திரதிருவன்—இந்திரன் போன்ற அழகுடையவன்

பக்கம்—49 'மெய்வருந்தம்' என்னும் செய்யுள். நீதிநெறி விளக்கம்.

துஞ்சார்—தூங்கார். செவ்வி அருமை—தக்க காலத்தின் அருமை.

பக்கம்—57. 'நஞ்சுடைமை' என்னும் செய்யுள். மூதுரை.

கரந்துறையும்—ஒளிந்திருக்கும் கரவு—மறைவு, வஞ்சனை.

பக்கம்—65. 'தீங்கு' என்னும் செய்யுள் கந்தபுராணம்.

தந்தமக்கு ஆய அல்லால்—தங்கள் தங்களுக்கு உண்டானவைகளை அல்லாமல். உதவினோர்—கொடுத்தவர்.

பக்கம்—68 'நல்வினை' என்னும் செய்யுள். சீவகசிந்தாமணி.

நீரார்—தன்மையர். இல்லையேல்—(அவ்வாறு) இல்லாவிட்டால், தீவினையுடையரானால். வினையின் ஆக்கம் இன்னது – வினையின் செய்கை இத்தன்மையானது. ஆல், அசை. கோல்வல் – கொல் வேன். அல்லன—(நன்மை) அல்லாதன.

பக்கம்—69. 'எய்திய' என்னும் செய்யுள். விநாயக புராணம்.

கண்ணோடாது – தாட்சண்யம் பாராட்டாமல். ஐது என நீதி நாடி—நுண்மையாக நியாயத்தை ஆராய்ந்து; ஐது—நுண்மை. உய்தி செய்—வாழ்வளிக்கும். உறுபயன்—அடையத்தக்க நன்மைகள்.

பக்கம்—82. ‘ புத்தஞாயிறு ’ என்னும் செய்யுள். மணிமேகலை.

ஞாயிறு—சூரியன். திங்கள்—சந்திரன். தங்கா நாண் மீன்—நிலைத்து நில்லாது (சுழன்றுகொண்டே யிருக்கும்) நட்சத்திரங்கள். தகைமையின் நடக்தும் — நன்னிமித்தமாகச் செல்லும் ஊன் உடை உயிர்கள் — உடம்பு மெலிந்த உயிர்கள் வளிவலம் கொட்கும் — காற்று வலமாகச் சுழலும். மாதிரம்—திசை. நளி—(நீர்) நிறைந்த. இரும்—பெரிய. முந்நீர்—கடல். நலம் பல—வளங்கள் பலவும். கறவை—கறக்கும் பசு. ஆர்த்தி — அருத்தி—உண்ணச்செய்து. பொழியும்—(பால்) சொரியும். வெருஉப் பகை — அஞ்சுதற்குக் காரணமான பகைமை. கலங்கு அஞர்—கலங்குதற்குக் காரணமான துன்பத்தை. கூன்—வளைந்த வடிவம். குறள்—(மிகவும்) குறுகிய வடிவம். ஊம்—ஊமை. மா—மிருக வடிவம். மருள்—அறிவின்றி மயங்கியிருப்பது. [கூன், குறள், ஊமை, செவிடு, மிருகவடிவம், அறிவற்றது,—என்னும் இவ்வாறனோடு குருடு, அவயவமற்ற பிண்டம் என்னும் இரண்டையும் கூட்டி இவை எட்டும் ‘ எண்பேரெச்சம் ’ எனப்படும் ஊனப்பிறவி என்பர்.] உயிர் பெறு—பிறவா.

பக்கம்—87. ‘ என்பினை ’ என்னும் செய்யுள். காஞ்சிப்புராணம்.

என்பு—எலும்பு. வழும்பு—கொழுப்பு. மெத்தி—மிகுதியாகவைத்து. பொதிந்து—அடைத்து அசும்பு—சேறு. புலை—மாமிசம்.

பக்கம்—93. ‘ பொய்யுடை ’ என்னும் செய்யுள். வெற்றிவேற்கை.

சொல் வன்மை—சொல்லும் திறமை. போலும்—போலத்தோன்றும், (முற்றுவினை).

பக்கம்—95. ‘ புத்தன்தாய் ’ என்னும் செய்யுள். லோகவசனம்

இப்பி — சிப்பி. விரியன் — ஒருவகைப் பாம்பு. சூல்—கருப்பம். சோர்வு—முடிவு. (‘ உடையனவாகும் ’ என்னும் முடிபு தொக்கது)

பக்கம்—96. ‘ ஆண்டாண்டு ’ என்னும் செய்யுள். நல்வழி.

இட்டு உண்டு இரும் — (கிடைத்ததைப் பிறருக்குக்) கொடுத்து, (நீரும்) உண்டு, (மனம் அமைந்து) இருங்கள்.

பக்கம்—106. ‘ ஆய கலை ’ என்னும் செய்யுள். சரஸ்வதியந்தாதி.

ஏய—பொருந்த. தூய உரு—பரிசுத்தமான உருவம். இருப்பள்—தங்கியிருப்பாள். இடர்—துன்பம்.

‘ தந்தைதாய் ’ என்னும் செய்யுள். சொருபலக்ஷணம்.

சார்கதி—(பற்றுக் கோடாகச்) சார்வதற்குரிய துணை. அந்தம் இல்லா—முடிவில்லாத. அருள் கோன்—கருணையுடைய தலைவன்.

பக்கம்—113. ‘இளமை’ என்னும் செய்யுள். ஏலாதி.

இயையும் — (வந்து) சேரும் உள நாளால் — உள்ள நாள்களிற் றானே. பாடே புரியாது — துன்பத்துக்கிடமான (கருமங்களையே செய்யாது. வீடே புரிதல் வித்—முத்தி (யடைதற் கேதுவான சற்கருமங்களையே) செய்தல் நெறியாகும்.

பக்கம்—126. ‘மதலை’ என்னும் செய்யுள். குசேலோபாக்யானம்.

விதலை—நடுக்கம், (விதலை நோய்—நடுக்கத்திற்கேதுவான நோய்). வியர் பருவம்—(இளமை) முதிர்ந்த (காளைப்) பருவம். கதம் உறு—மூர்க்கமுள்ள. சேய்—பிள்ளை.

‘ஊழையும்’ என்னும் செய்யுள். திருக்குறள்.

ஊழ்—விதி. உப்பக்கம் காண்பார் — புறங்காணுவார் — தோற்கச் செய்வார். உலைவு—மனக்கலக்கம். தாழாது—(சூழ்ச்சி, செயல் முதலியவைகளில்) குறைபடாமல். உஞற்றுபவர்—முயல்பவர்.

பக்கம்—133. ‘நூலுளா’ என்னும் செய்யுள். இலக்கணக்கொத்து.

முக்குணம்—(சத்துவம், ராஜசம், தாமதம் என்னும்) மூன்று குணங்கள். அறை—சொல்.

‘கல்லாதான்’ என்னும் செய்யுள். திருக்குறள்.
ஒட்பம்—அறிவுடைமை. கழிய—மிகவும்.

பக்கம்—135. ‘சென்றது’ என்னும் செய்யுள். கைவல்லியம்.
விண்—ஆகாயம். பொன்றின—அழிந்த.

‘நந்திய’ ‘அல்லது’ என்னும் செய்யுட்கள். குசேலஉபாக்யானம். நந்திய — பெருகிய. நயந்து—விரும்பி. விலங்கு—மிருகம். முன்னு—முதலாக. சேமவைப்பு—பிற்காலத்துக்கு உதவியாக வைக்கப்பட்ட பொருள். எல்லையில் — ஓர் எல்லைக்குள் அடங்கி. ஒல்லும் — கூடியிருக்கும்.

பக்கம்—139. ‘தாமின்புறுவது’ என்னும் செய்யுள். திருக்குறள்.
காமுறுவர்—விரும்புவர்.

பக்கம்—142. ‘சிலையினுர்’ என்னும் செய்யுள். சீவகசிந்தாமணி.

சிலை—வில். மாக்கள்—மிருகங்கள். வாழுயிர்க் கூற்றம்—வாழ்கின்ற பிராணிகளுக்கு யமன். தும்பி—நாகம் கோந்தழல் — பல

சுடர்விட்டெரியும் நெருப்பு. (கொந்து—கொத்து—மெலித்தல் விகாரம்) நலிதவர்—வருத்துவர். நாடவேலோய்—பயங்கரமான வேலைத்தாங்கியவனே.

'கநவி' என்னும் செய்யுள். விநாயக புராணம்.

கநவி—ஆயுதம். காமர்—அழகு ஆர்—பொருந்திய. வெருவா—அஞ்சத்தக்கதாக. ஆறலைப்போர்—வழிப்பறிசெய்வோர். உருவளர்—அழகு மிகுந்த. பிறன் இல் — அந்நியன் மனைவி. வேட்போர் — விரும்புவோர். கோறல்—கொல்லுதல். பருவரு—அருவருக்கத்தக்க.

பக்கம்—143. 'பரிசனம்' என்னும் செய்யுள். விநாயகபுராணம்.

பரிசனம் — உற்றார். படர்தரு — துன்பந்தரும். தாம் — (தமக்குத்) தாம்; (தமக்குத் தாம் இடையூறு செய்வதாவது தற்கொலை செய்து கொள்வது). வரிசையில—சிறப்பாக. வழுக்கினோர்—தவறினோர். மொத்தி—தண்டித்து. கரிசுஅற — குற்றமில்லாமல். கோடல் — கொள்ளுதல். காவலர்—அரசர்.

பக்கம்—152. 'சேதாம்பல்' 'அருமணி' என்னும் செய்யுட்கள். சூளாமணி.

சேதாம்பல்—(செம்மை + ஆம்பல்)—செவ்வல்லி. வீழ்தல்—விரும்புதல். போது — மலர். கதிர் — கதிர்ப்பு — பிரகாசம் ('சேதாமபல் அவிழ்ந்தனைய' என்று பாடம் உண்டாயின், 'சேதாம்பல் மலர்ந்தாற் போல' என்று பொருள் கொள்க.)

விளிம்பு—ஓரம். சூழற்றி — முடித்து. கைசெய்து — அலங்காரம் செய்து.

'திண்ணிய' என்னும் செய்யுள். தாயுமானவர்.

திண்ணிய—உறுதியான. கண்ணி—பொறி.

பக்கம்—162. 'முதிர்தரு' என்னும் செய்யுள். கந்தபுராணம்.

முதிர்தரு—முதிர்ந்த. பொதுவறு — சிறப்புடைய. திரு—செல்வம் நீர்மையார்—தன்மையர்.

பக்கம்—163. 'பூணும்' என்னும் செய்யுள். பட்டினத்தார்.

பணி—ஆபரணம். சேணும் கடந்த—விண்ணுலகுக்கும் எட்டாத.

பக்கம்—167. 'உறவு' என்னும் செய்யுள். திருக்கூவப்புராணம்.

ஒண்தொடி மாதரார்—ஒளிபொருந்திய வளையல்களணிந்த ஸ்திரீகள். வண்புவி—வளமுடைய பூமி.

பக்கம்—172. 'நாட்டமென்றே' என்னும் செய்யுள். பட்டினத்தார்.

சற்குரு பாதத்தை நாட்டம் என்றே (பற்றி) இரு, நம்பு உடலை, பொம்மலாட்டமென்றேயிரு சுற்றத்தை, சந்தைக் கூட்டமென்றே (கருதி) யிரு. வாழ்வை, குடங்கவிழ் நீரோட்டமென்றே (கருதி) யிரு.

பக்கம்—176. 'கற்றுத்துறை' என்னும் செய்யுள். நீதிநெறி விளக்கம்.

**கற்றுத்துறைபோய**—துறைபோகக்கற்ற. **இறந்த எலாம்** — மற்ற எல்லாம்.

பக்கம்—181. 'மையாடு' என்னும் செய்யுள் பட்டினத்தார்.

**மைஆடு** — மையணிந்த. **செந்தீஐயா** — செந்தீவண்ணமான சிவ பெருமானே. **அகிலம்**—பூமி.

பக்கம்—199. 'பேதைமை' என்னும் செய்யுள். சீவகசிந்தாமணி.

**நாறி**—முளைத்து. **வேட்கை**—ஆசை. **கவடு** — கிளை. **அவலம்**— பயனின்மை. **மா**—பெரிய. **இடும்பை**—துன்பம்.

பக்கம்—201. 'இருட்பார' என்னும் செய்யுள். வீரசோழியஉரை மேற்கோள்.

**மது ஒன்று** — தேன் பொருந்திய. **போது அன்றி** — பொதுவான உரிமையுடையதல்லாமல்.

குறிப்பு:— இந்நூலில் எடுத்தாளப்பட்ட செய்யுட்கள் யாவும புத்தர் காலத்துக்குப் பிற்பட்டனவாயினும் நாவற் போக்கில் அமையுமெ என்பதறிக

# BIBLIOGRAPHY

## புத்தர் சரித்திரம் முதலியவற்றைக் கூறும் நூல்கள்


1. புத்த சரித்திரம், பௌத்த தருமம், பௌத்த சங்கம்.
   ஸ்ரீமான மஹாமஹோபாத்தியாயர், உ. வே. சாமிநாதையர்.

2. **Buddha**
   Professor H. Oldenberg.

3. **Early Buddhism**
   Professor Rhys Davids.

4. **Life and Teachings of Buddha**
   The Angaraka Dharmapala.

5. **Light of Asia**
   Edwin Arnold

6. **The Essence of Buddhism**
   Professor P. Laksiminarasu.

7. **Buddhism**
   Mrs. Rhys Davids.

8. **Buddha and Buddhism**
   Dr. A. K. Coomaraswamy, D. Sc.

9. **Vinaya Pitaka** (Sacred Books of the East xiii, xvii, xx.)
   Professors Rhys Davids and Oldenberg.

10. **Buddhist Suttas** (S.B.E. xi.)
    Professor Rhys Davids.

11. **Dhammapada and Sutta Nipáta** (S.B.E. x.)
    Professors Maxmuller and Fausboll.

12. **Sayings of Buddha**
    Mr. J. Moore.

13. **Udana**
*Mr. D M Strong.*

14. ***Psalms of the Early Buddhists***
Mrs Rhys Davids

15. **The Jataka**
Messrs R. Chalmers, W Rouse and others.

16. **Buddhist Psychological Ethics**
Mrs. Rhys Davids.

17. **The questions of King Milinda** (S.B.E. xxxv, xxxvi
Professor Rhys Davids.

18. **The Mahávamśa**
Professor W. Geiger and Mrs. Bode,

19. **The Dipavamsa**
Professor H. Oldenberg.

20. **Compendium of Philosophy**
Mr. S Z Aung and Mrs Rhys Davids.

21. **Buddhist India**
Professor Rhys Davids

22. **The Early History of India**
Mr. Vincent Smith.

23. **On Yuan Chwang**
Mr T. Watters

24. **Gleanings in Buddha Fields**
Mr. L. Hearn.

25. **Buddhism in Translations**
Mr. Henry Warren.



Printed at the S.P.C K. Press, Vepery, Madras—B 13670.